# கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே



டாக்டர் மா. வரதராஜன்

# கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே!

(இது ஒரு முழுமையான ஆராய்ச்சி நூல்)

ஆசிரியர்
கம்பர் கால கமலாக்ஷ:
கவிஞர் டாக்டர் மா. வரதராஜன்

காஞ்சிபுரம் ஓய்வு பெற்ற தமிழாசிரியர்
வித்துவான் எம். நாராயணவேலுப்பிள்ளை
அவர்களால் பரிசோதிக்கப்பட்டது

ராஜேஸ்வரி புத்தக நிலையம்
22, 6ஆவது தெரு,
பக்தவச்சலம் நகர், பழவந்தாங்கல்,
சென்னை-600 114.

# நூல் விவர அட்டவணை


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | கம்பர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே |
| ஆசிரியர் பெயர் | : | டாக்டர் மா. வரதராஜன் |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | டிசம்பர், 1994 |
| உரிமை (C) | : | ஆசிரியருக்கு |
| நூலின் அளவு | : | 1 × 8 கிரவுன் |
| அச்சு எழுத்து | : | 10 புள்ளி |
| தாள் | : | 10.7 Kg. வெள்ளைத் தாள் |
| மொத்த பக்கங்கள் | : | (276 + XII) = 288 |
| பைண்டிங் | : | சாதா அட்டை பைண்டு |
| வெளியிட்டோர் | : | ராஜேஸ்வரி புத்தக நிலையம் 22, 6ஆவது தெரு, பக்தவச்சலம் நகர், பழவந்தாங்கல், சென்னை-600 114. |

---

**விலை : ரூ. 50-00**

---

| | | |
|---|---|---|
| அச்சிட்டோர் | : | வெற்றி அச்சகம், 91, டாக்டர் பெசன்ட் சாலை, இராயப்பேட்டை, சென்னை-14 |

# பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

**கம்பர் காவியச் சிறப்பு**

காவியப் புலவர்களில் உலக முதல்வராகத் திகழ்பவர் நமது கவிச்சக்கரவர்த்தி! இது கற்றோர் முடிவு, கம்பர் காவியத்தை ஆய்ந்த படைப்புகள் ஆயிரக்கணக்கானவை. நம் தாய்மொழித் தமிழுக்கு இதயமாக விளங்குவது கம்ப ராமாயணமே! தமிழ் மொழிக்குக் கதியானவர்கள், கம்பரும் திருவள்ளுவரும் என்று பாடப் புத்தகங்களும் பகருகின்றன. அத்தகைய கம்ப நாட்டாழ்வாரது சிறப்பிற் காக முதலிரு அத்தியாயங்களை ஆதாரமுடன் அறியலாம்

**கம்பரின் மறுபக்கம்**

கம்பரது மறுபக்கம் பற்றிச் சரியாக யாரும் எழுத வில்லை. எனலாம், வெளுத்தல், மழித்தல், வடித்தல், போன்ற தொழிலையும், அத்தொழிலரையும் கம்பர் தன் பாடல்களால் வெகுவாகக் கௌரவித்துள்ளார். இது அவர்கள் பால் கம்பர் கொண்டிருந்த ஆழ்ந்த அன்பையும் சமூக சமத்துவக் கொள்கையுமுடையவர் என்பதையும் காட்டுகிறது. (அதனைத் தம் இராமாயணத்திலும், குகனோடு ஐவரானோம் என்று ''இராமபிரானையே சான்றாகத்'' தந்துள்ளார்.) இதுபற்றியும், கம்பர் காலம் பற்றியும் போதியன ஆய்ந்த நூல் இல்லாக் குறையை இந் நூல் போக்குமென நம்புகிறோம்.

**கம்பர் கால ஆய்வு!**

கம்பக் காலம் கி. பி. 840. 920. இது நிச்சயம் என்று. காட்ட ஆதாரம் இல்லையாயினும், 5-10 ஆண்டுகளுக்கு மேல் இதில் வித்தியாசமிருக்க வாய்ப்பில்லை என்பது உறுதி. இந்நூலை ஆழ்ந்து படிப்பார்க்கு அது புலனாகும். தவிர 9 ஆம் நூற்றாண்டு என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. அதற்கான 22 ஆதாரத்திற்கு மேலும் சுமார் 750 எடுத்துக் காட்டுகளும், கொண்டது இந்நூல். 30-க்கு

மேலான நூலகங்களில் கம்பர் பற்றிய பெரும்பாலான நூல்களைப் பார்வையிட்டும், ஆவணக் காப்பகம். தொல் பொருள்துறை, அருங்காட்சியகம் கல்வெட்டுகள் செப்புப் பட்டயங்கள் கோயிலொழுகுகள் மற்றும் நேரடியாக, கம்பர் பிறந்த, வாழ்ந்த, சிறந்த மறைந்த, இடங்கள் சென்றும், களஆய்வு செய்தும், 9ஆம் நூற்றாண்டு, இடைக்கால சோழராட்சி முதல், பிற்கால சோழலாட்சி வரை, வாழ்ந்த புலவர்கள், புரவலர்கள், இயற்றிய நூல்கள், மன்னர்கள், ஆட்சிகள், வீழ்ச்சிகள், நிகழ்ச்சிகள், ஆகியவற்றைக் கால வாரியாகத் தொகுத்ததில், ஒன்பதாம் நூற்றாண்டிற்கே, பெரும்பாலான ஆதாரங்கள் கிடைத்தன. 12ஆம் நூற்றாண்டிற்கு ஒரு ஆதாரமும் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நூலை நன்கு பரிசோதித்து அளித்துள்ள ஆன்றோர் சான்றுகள், இந்நூலைப் பல்கலைக் கழகம் கல்லூரிகளில் பாடநூலாக, இலக்கிய வரலாற்றிற்கு வைக்கப்பட வேண்டியதே, என்றும். தற்கால ஆராய்ச்சியாளர்கள் பாராட்ட வேண்டிய நூல், என்றும் மதிப்புரைகள் கூறுகின்றன.

இந்நூலைப் பரிசோதித்தருளிய ஸ்ரீ காஞ்சி காமகோடி ''பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்.''

''ஸ்ரீபெருமந்தூர் ஸ்ரீமத் பரம ஹம்ஸ ஸேத்யாதி ஸ்ரீவரதயதிராஜ ஜீயர் ஸ்வாமிகள்.''

''அணிந்துரை வழங்கிய தவத்திரு சுவாமி சித்ருபானந்தா'' அவர்களுக்கும்,

''பாரதிதாசனார் பல்கலைக்கழகப் பேராசிரியர் மா. இராமலிங்கம் (எழில் முதல்வன்)தலைவர் தமிழியற் துறை அவர்கள்.''

''காமராஜர் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர். தி. முருகானந்தம், தமிழியற் புலத்தலைவர் அவர்கள் ஆகியோர்கள் நற்சான்றளித்து சிறப்பித்தமைக்கும்.''

''ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் அவர்கள், ''கம்பர்கால கமலாக்ஷ:'' என்ற விருது வழங்கி திறனாய்வுக் கருத்தரங்க

சிறப்பு அருளுரை வழங்கி பொன்னாடையும் போர்த்தி அருளாசி வழங்கி எமைக் கௌரவித்தமைக்கு அடி வணங்கி நன்றி போற்றுகிறோம்.''

15-8-94-இல் இந்நூல் பற்றி திறனாய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் பெரும்புலவர்கள் முப்பதுபேர் பங்கு கொண்டு சிறப்பித்தார்கள். அவர்கள் அனைவருக்கும் திறனாய்வுக் கருத்தரங்கு அமைப்பாளர்களுக்கும் அரிய ஆய்வு நூல்கள் பலவற்றைத் தேடிக்கொண்டு வந்து உதவிய. காஞ்சிபுரம் என். ஆர். இராமபத்திரன் அருமை நண்பர் தமிழாசிரியர் இ. நாகராஜன் அன்னை நூலக அருங்காட்சியம் ஆகியோர்களுக்கும் இந்நூலுக்குச் சாற்றுக் கவி அருளிய செந்தமிழறிஞர் மாருதிதாசன் அவர்களுக்கும் இந்நூலைச் செப்பமுறப் பரிசோதித்தும், அணிந்துரையும் அருளிய காஞ்சிபுரம் வித்வான் நாராயண வேலுப் பிள்ளை ஓய்வு பெற்ற தமிழாசிரியர் அவர்களுக்கும் திருத்தி உதவிய புலவர் வரதகோவிந்தராசன் எம். எ., டி. லிட்., அவர்களுக்கும் இந்நூலாய்வுக்கு பெரிதும் துணைபுரிந்த எனது அருமை துணைவி டாக்டர். திருமதி. வி. மங்கையர்க்கரசி, எனது அன்பு மகள் செல்வி ரேவதிக் கும் இந்நூலை நல்ல முறையில் பதிப்பித்துதவிய இராஜேஸ்வரி புத்தக நிலைய உரிமையாளர் திரு என். பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் சிறந்த முறையில் அச்சிட்டு உதவிய சென்னை வெற்றி அச்சகத்தார் திரு. எஸ். குப்புசாமி அவர்களுக்கும், இந்நூல் வெளியிட உதவிய அனைவருக்கும் என்றுமுளதாய நன்றியைச் சமர்ப்பித்துக் கொள்கிறோம். தமிழ்க் கூறும் நல்லுலகம் இந்நூலை வரவேற்று, இந்நூல் ஆதாரபடி கவிச்சக்கரவர்த்தி கம்பர் வாழ்க்கை வரலாறும் வெளிவர ஆதரவளிக்க வேணுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

109, அம்மங்கார் தெரு,
காஞ்சிபுரம் 631503
20-9-1994

இங்ஙனம்
**மா. வரதராஜன்**



ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி**

**ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய**

## ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்
## ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

# அருளிய அருளுரை

அகச்சான்று புறச்சான்று எனப்படும் இரு வகைச் சான்றுகளையும், ஒன்றுதிரட்டி நடுநிலை நின்று ஆராயும் போதுதான், ஒருவரது காலத்தைத் துல்லியமாகக் கணித்திட முடியும். இவ்வகையில், கவிச்சக்கரவர்த்தி கம்பரது காலத்தைக் குறிக்கும் ''எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழின்மேல்'' என்ற கூற்றினைக் கம்பரோடு, தொடர்பு படுத்தப்படும், புரவலர்கள்

புலவர்கள் நிகழ்ச்சிகள் அரசுகள் அனைத்தையும் அலசி ஆராய்ந்து தொடர்புபடுத்தி நிலைநிறுத்தும் அரும்பெரும் முயற்சியின் விளைவாக விளங்கும், காஞ்சி, கவிஞர் டாக்டர், மா. வரதராஜன் அவர்களது, ''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே'' என்ற நூலின் உறுதி கண்டு மகிழ்கிறோம். மந்யாதா புருஷோத்மனான, ஸ்ரீ ராமசந்திர மூர்த்தியின் இன்னருள் இவர்க்கு நலங்கள் அனைத்தும் கிட்டுவதாக,

ஸ்ரீமடம் சமஸ்தானம் —நாராயணஸ்ம்ருதி

9 - 2 - 1992



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி

ஸ்ரீமடாதிபதி மதபரிபாலன தர்மகர்த்தா முத்திரை கர்த்தா

ஸ்ரீவரதயதிராஜ ஜீயர் ஸ்வாமிகள் அருளிய

# மதிப்புரை மங்களாசாசனம்

கட்டுரையாளர் இமயத்திற்கொப்பான சான்றுகள். கல்வெட்டுகள் கோயிலொழுகுகள், தலபுராணங்கள் சுவடிகள், முன்னோர்கள் ஆராய்ச்சிக் களஞ்சியங்கள், மூவேந்தர்கள் கால சமயச்சுவடிகள், அருளிச்செயலமுதம். சமயாசார்யர்களின் காலம் என்ற பாற்கடல் போன்றவை களான ஆழியுள் புக்கு ஆழிமழைக்கண்ணன் போன்ற, முகிலாய், ஆழிபோல் மின்னி, முழஞ்சில் போன்ற கால நிர்ணயங்களில் பையத்துயின்று, கிடந்துறங்கி, சீரியசிங்கம் போன்று'', கிளரொளி இளமை கெடுவதின் முன்னம் வளரொளி மாயோன் மருவிய ''கோயிலாக'' கம்ப

நாட்டாரின் காலத்தை ''ஒன்பதாம் நூற்றாண்டே'' என்று ''பிந்தௌ ஸிந்து'' என்பதுபோல நிருபித்து மட்டுமல்லாமல் இதுவரை யாரும் கணிக்காத பல செப்பேடு சிலாசாசன ரோஹண சான்றுகளுடன் அறுதியிட்டிருப்பது வெள்ளியிடை மலை. கம்பனின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே எனக் காலத்தைக் கடைந்து நெடிதுயர்ந்து நிற்கிறார்.

கட்டுரையாளரின் பெருமுயற்சிகள் ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதேன் என்பதைப்போல், அவரின் கம்பர் கால உறுதித்திறன் ஸ்ரீமந்நாதமுனிகளின் காலத்தை உயிராக கொண்டதுடன், திவ்யபிரபந்த பாசுரங்களின் திருவெழுக்கூற்றுருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் களில், கவிச்சக்ரவர்த்தியின் பாக்களை ஸ்ரீமந் நாதமுனி களே தொகுத்துக் கொடுத்த நாலாயிர திவ்யப்பிரபந்தங் களின் உள்ளிருப்பதைச் சுட்டிக்காட்டி மெய்சிலிர்க்க உணர்ந் திருப்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அவரது நிர்ணயம் பேர்க்கவும் பேர்க்காதபடி அறுதியிடப்பட்டிருக்கும் பேருண்மையைத் தற்கால ஆராய்ச்சியாளர்கள் போற்ற வேண்டியதே. தனது கட்டுரையில் ஆராய்ச்சியாளர் இன்றைக்கும் உள்ள கோயில்கள் ஊர்கள் சாதிகள் தவிர, ஒன்பதாம் நூற்றாண்டிற்குச் சேர கம்பன் காலத்தைத் தற்சமயம் ஸ்ரீ காஞ்சி, மயிலை, திருவொற்றியூர் முதலியவைகளில் காணக் கிடைக்கும் நினைவு கோர்வைகளை மேற்கோள் காட்டி, முத்தும், மணியும், வைரமும் நற் பொன்னும், ஏத்திப் பதித்தாற்போல், மிக மிக சுவையுடன் நிலைபடுத்தியிருப்பது இமாலய சாதனையே. கவிஞர் புலவரின் ஆராய்ச்சி திறன் காஞ்சிபுரத்தின் அண்மையில் உள்ள அம்பி கிராமத்தை மேற்கோள்காட்டி, கம்பன் தனது மைந்தனுக்கு, ''அம்பிகாபதி'' எனப் பெயரிட்டு இருப்பதை மூதலித்திருப்பது, காலநிர்ணய ஒற்றுமைச் சான்றுகட்கு மணிமகுடம் போன்றதாகும் என்பது தெளிவு.

கட்டுரையாளரின் இந்த ஆய்வு பல்கலைக்கழகங்கள், உயர்நிலை மேல்நிலை பள்ளிகள், கல்லூரிகள் போன்ற நிறுவனங்களில் இச்சீரிய நூலை வரலாற்றின் வளர்ச்சிக்காக வைக்கப்படவேண்டியது. தவிரவும் இக்கட்டுரையைப் புத்தக வெளியீடாக இராஜேஸ்வரி புத்தக நிலையம் வெளியிட்டுக் கம்பன் பெருமை அவரின் தமிழ்த்தொண்டு காலம், ஆன்மீகம், பக்தி நம்மாழ்வார் பேரில் அவர் கொண்ட காதல், ஸ்ரீமந்நாதமுனிகளைத் தனது ஆசானாக ஏற்ற பெருமை முதலானவைகளை, மேலும் பரவச் செய்ய வேண்டியதே. கவியரசனின் பிறப்பின் ரகசியம், தவழ்ந்த நிமிர்ந்த நடைகொண்ட வரலாறு, கட்டுரையாளரின் சான்றுகளுடன் நம்மாழ்வாரின் பிறப்பு வரலாற்றைக் கொண்டிருப்பதை உற்றுநோக்கின் காணப்படும். இக்கட்டுரையாளருக்குக் ''கம்பன் கால கமலாக்ஷ:'' என விருதிட்டு அவரின் தமிழ் ஆய்வு தொண்டுகள் தொடர் சங்கிலியாக வெளிவர அவர் பல்லாண்டு வாழ வாழ்த்தி, மங்களாசாஸனமளிக்கின்றோம்.

தவத்திரு சுவாமி சித்ரூபானந்தா
தலைவர் நாராயண சேவாஸ்ரமம், காஞ்சிபுரம் அவர்கள்
திறனாய்வுக் கருத்தரங்கைச் சிறப்பித்து அருளிய

# அணிந்துரை!

நகரேஷு காஞ்சியில் கவிச்சக்கரவர்த்தி ''கம்பர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டே'' 12ஆம் நூற்றாண்டல்ல, என வாதித்து அரிய பல ஆவணங்களையும் அழுத்தமான 22 ஆதாரங்களையும் நூற்றுக்கணக்கான எடுத்துக்காட்டு களையும் முன்வைத்துப் பெரும்புலவர்கள், பேராசிரியர்கள், தமிழறிஞர்கள் அவையில் சமர்பித்து நிரூபித்துள்ளார் நமது டாக்டர் கவிஞர் மா. வரதராஜன்.

''கி.பி. 778இல் குமர கோட்டத்தில் 'கந்தபுராணம்'' அரங்கேற்றம்'' என்றும் 107 ஆண்டுகள் கழித்து, ''கி. பி. 885இல் நாதமுனிகள் முன்னிலையில் திருவரங்கத்தில் கம்ப ராமாயண அரங்கேற்றம்'' என்றும். 1109 ஆண்டுகள் கழித்து, ''கி. பி. 1994இல், கம்பர் காலம் ஒன்பதாம் நூற் றாண்டே'' என்றும் அரங்கேற்றம் செய்ய அறிஞர்கள் கூடிய அவையில் ஆணித்தரமான வாதத்தால் அவையில் நிரூபித்தார், அவையோர் இதை ஏற்றுச் சிறப்பித்தது அரிய பெரிய நிகழ்ச்சியாகும் நூலாசிரியரை மனமார பாராட்டி, வாழ்த்தி அமைகின்றோம்.

காஞ்சிபுரம்
15 - 8 - 94

ஸ்ரீ நாராயண குருவே நமக

பேராசிரியர்
**மா. இராமலிங்கம்**
(''எழில்முதல்வன்'')
**தலைவர், தமிழியல் துறை**

**பாரதிதாசன் பல்கலைக் கழகம்**
பல்கலைப்பேரூர்
திருச்சிராப்பள்ளி-620 024

அன்புடையீர்!
வணக்கம்.

தாங்கள் 7-4-1992 அன்று என் பார்வைக்கு அனுப்பிவைத்த ''கம்பர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டே'' என்னும் நூலின் தட்டச்சுப் படியைப் படித்துப் பார்த்தேன்.

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பியாக இருந்து தமிழ் இலக்கிய நெடும் பூங்காவில் பூத்தொறும் நுழைந்து நுழைந்து கருத்துத் தேனைத் திரட்டித் தந்துள்ளீர்கள். தாங்கள் தொகுத்துள்ள தரவுகளையெல்லாம் ஒருங்கே நோக்குகிறபோது, உங்களது முயற்சியும் உழைப்பும் தெற்றெனப் புலனாகிறது. இலக்கியம் வரலாறு போன்ற துறைகளில் உங்களது ஆழங் காற்பட்ட புலமையை அவை காட்டுகின்றன. கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு கம்பர் பெருமானின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கால அடிப்படையில் தர முயன்றிருக்கும் உங்கள் முயற்சியின் அருமைப்பாடு போற்றுதற்குரியது. இலக்கிய சான்றுகளை மட்டுமின்றிக் கள ஆய்வு வாயிலாகக் கிடைத்தனவற்றையும் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் முயற்சியை வாயார வாழ்த்துகிறேன்.

திருச்சி
18-5-1992

அன்புடன்
ஒப்பம்
**மா. இராமலிங்கம்.**

டாக்டர் தி. முருகரத்தினம்
பேராசிரியர்
தமிழியற்புலத் தலைவர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

அன்புடையீர், வணக்கம்.

## கவிச்சக்கரவர்த்தி கம்பர் காலம்
## கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே!

'வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்ட முழுமையான ஆராய்ச்சி நூல்' என்பது ஆசிரியரே இந் நூலுக்கு வரைந்திருக்கும் அறிமுகக் குறிப்பு. இலக்கியக் குறிப்புகள், கல்வெட்டுச் சான்று கள், அறிஞர்களின் மேற்கோள்கள் ஆகிய வற்றின் ஆணையோடு கம்பரின் காலத்தை இந்நூலாசிரியர் முடிவு செய்துள்ளார். சம காலச் செய்திகளையும் அவர் ஆங்காங்கே சுட்டிக் கூறத் தவறவில்லை.

நூலாசிரியரின் முயற்சிக்கு வாழ்த்து.

அன்புடன்
ஒப்பம்
(தி. முருகரத்தனம்)

மதுரை
27-10-92

வேங்கடவன் திருத்தாள் துணை

இந்நூல் முப்பது தமிழறிஞர் புலவர் பெருமக்களால்

''திறனாய்வுக் கருத்தரங்கம்'' காஞ்சியில்

15-8-1994இல் நடைபெற்றபோது

தலைமை வகித்துச் சிறப்பித்தருளிய

செந்தமிழறிஞர் மாருதிதாசன் அவர்கள் அருளிய

## சாற்றுக்கவி!

சீர்வளரும் திருக்கச்சி நகரந் தன்னில்
திகழ்வரத ராசன் திறமை யாலே
பேர்வளரும் வகைக் கம்பர் காலந் தன்னைப்
பெருமுயற்சி செய்துபல சான்று தந்து
பார்வளரும் காசினியோர் போற்றும் வண்ணம்
கண்டுரைத்தார் ஒன்பதாம் நூற்றாண் டென்று!
தார் வளரும் வேங்கடவன் அருளி னாலே
தழைத்திடுக இவர் செய்த நன்னூல் தானே!

புலவரெலாம் கச்சிநகர் தன்னில் கூடிப்
போற்றி செய்தார் இவர் செய்த ஆய்வு தன்னை!
குலப்பெருமை விளங்கிடவே குணக்குன் றாகக்
காட்சிதரும் இனியவராம் வரத ராசர்
திலகமென ஆய்வாளர் இடையே இன்று;
திகழ்கின்றார்! இவர்செய்த நூல்தான் என்றும்
கலங்கரை விளக்க மெனக் கற்றோர்க் கெல்லாம்
களிப்பூட்டும்! கைகாட்டும்! உண்மைதானே!

திருக்கச்சி தேசமெலாம் போற்ற வாழி!
திகழ்காஞ்சி முனிவர்தம் திருத்தாள் வாழி!
வருத்தமிலா துழைக்கின்ற வள்ளல் வாழி!
வரதராசன் வளமுடனே சரதம் வாழி!
பெருக்கத்தோ(டு) அடக்கமுடன் காண்பான் வாழி!
பெருமுயற்சியாளன் தன் ஆய்வு வாழி!
இருக்கின்ற காலமெலாம் இனிக்க வாழி!
இறையருளால் நலமெல்லாம் பெற்று வாழி!

காஞ்சிபுரம்—631501
10-9-1994

இங்ஙனம்
**புலவர், மாருதிதாசன். MA, MEd.,**

திறனாய்வுக் கருத்தரங்கைத் துவக்கி வைத்துச்
சிறப்பித்தருளிய ஓய்வுபெற்ற தமிழாசிரியர்
வித்வான் நாராயண வேலுப்பிள்ளை அவர்கள்

# அணிந்துரை!

வான்மீகி முனிவர் இராமாயணத்தை வடமொழியில் 20,000/- சுலோகங்களில் பாடினார். அதையே கம்பர் தமிழில் 10,500/- விருத்தப் பாக்களாகப் பாடினார். அது தமிழில் பெருங்காப்பியமாகத் திகழ்கிறது. கம்பரும் கவிச்சக்கர வர்த்தி எனப் போற்றப்படுகிறார்.

ஆராய்ச்சியாளர்களில் சிலர், கம்பர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்றும் மற்றும் சிலர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்றும் கூறு கின்றனர், காஞ்சிபுரம் டாக்டர் மா. வரதராஜன் அவர் கள் கம்பர் காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டே என்று இந்நூலை எழுதியுள்ளார்.

இவர் சென்ற 15 ஆண்டுகளாக இந்தக் கால ஆராய்ச்சி யில் ஈடுபட்டு, நூல் நிலையங்கள் கல்வெட்டுகள் இருக்கும் இடங்களுக்குச் சென்றும், கம்பர் பிறந்த ஊர், அவர் வாழ்ந்த இடங்கள் ஆகியவற்றை நேரில் சென்று பார்த்தும் தக்க ஆதாரங்களோடு இந்த நூலை எழுதியுள்ளார்.

பொதுவாக நூலாசிரியர்கள் தாம்எழுதிய நூல்களைத் தாமாகவோ பதிப்பாளர்கள் மூலமாகவோ அச்சிடுவர். வசதியுள்ளவர்கள் அதன் பின்னர் நூல் வெளியீட்டு விழா செய்வர். ஆனால் இவர் கையாண்ட முறை புதுமை யானது. நூலை அச்சிடுவதற்கு முன்பே இவர் தாம் எழுதிய கையெழுத்துப் பிரதிகள் சுமார் பத்து பிரதிகள் எடுத்து, தமிழில் வல்ல அறிஞர்களிடமும் ஆராய்ச்சியாளர்

களிடமும் திறனாய்வுக்குக் கொடுத்தார். பின்னர் அவர்களைக் கொண்டு, சென்ற 15-8-1994இல் திறனாய்வுக் கருந்தரங்கு ஒன்றை மிகச் சிறப்பாக நடத்தினார். பெருந் திரளான மக்கள் அதற்கு வந்திருந்தனர். கருத்தரங்கில் பங்கு கொண்டவர்கள் கமபர் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டே என்ற முடிவுக்கு வந்தனர்.

காஞ்சி ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள், ஸ்ரீபெரும்புதூர் ஜீயர் மடாதிபதி, திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழகம், மதுரை காமராஜர் பல்கலைக்கழகம் ஆகியோரிட மிருந்தும் இந்நூலுக்கு மதிப்புரை பெற்று நூலை அச்சிட்டுள்ளார்.

பல இடங்களில் இவருடைய கருத்துகளை அழுத்தமாகவும் சிறப்பாகவும் தமக்குத் தோன்றியவற்றைத் துணிவோடு எடுத்துக் கூறியிருக்கிறார். அதற்காக அவரைப் பாராட்டலாம்.

சிந்தனையைக்கிளறி விடுவதற்குத் திரு. வரதராஜனின் ஆராய்ச்சி ரீதியான வாதங்கள் பயன்படும். அதற்காக அவரைப் பாராட்டுகிறேன்.

நூலாசிரியர் திரு. வரதராஜன் பெருமுயற்சி எடுத்து அரும்பாடுபட்டு, கம்பரின் வாழ்க்கை வரலாற்றைத் துருவி ஆராய்ந்து, இந்த நூலை எழுதியிருக்கிறார். தமிழ் மக்கள் இந் நூலை வாங்கிப் படித்து ஆசிரியரை ஊக்குவிக்க வேண்டுகிறேன்.

காஞ்சிபுரம்
4-12-94

வித்வான் எம் நாராயண வேலுப்பிள்ளை.
ஓய்வு பெற்ற தமிழாசிரியர்.

# பதிப்புரை

கம்பர் காலம் இதுவரை யாராலும் அறுதியிடப் படவில்லை என்பதால்தான் அரசு மற்றும் பல்கலைக் கழகப் பாடநூல்களினும் 9,12ஆம் நூற்றாண்டு என்றே குறிப்பிடப்பட்டு வருகிறது. இந்நூல் கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே என்று அறுதியிடப் படுவதால்தான் நூலின் தலைப்பு ''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே'' என்று வழங்கப்படுகிறது.

ஆனால், இந்நூலாசிரியரோ! தமது ஆராய்ச்சி நூலை அச்சிடு முன்பாகப் பலருக்கும் இந்நூலைப் படி எடுத்து வழங்கி, தமிழ்த்துறைத் தலைவர்கள் இருவரிடமும் வழங்கி சான்று பெற்றுள்ளார். பின்பு பேராசிரிய பெரும்புலவர்கள் முப்பது பேர் கொண்ட திறனாய்வுக் கருத்தரங்கம் நடத்தி பாராட்டுச் சான்றும் பெற்றுள்ளார் எனில் இந்நூல் ''தனித்தன்மை வாய்ந்த நூலாகும்'' என்பது மிகையல்ல.

எனவே இந்நூலை வெளியீடுவதில் பெருமை கொள்கிறோம். ஆன்றோர்களும், தமிழ்ச் சான்றோர்களும், பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகங்களும், பேராசிரியப் பெருமக்களும், ஆராய்ச்சியாளர்களும் வரவேற்று நல்லாதரவு தருவார்கள் என நம்புகிறோம்.

மேலும், கம்பரது வாழ்க்கைக் குறிப்புகளைக் கொண்டு வெளிவரும் நூல்கள், இனியேனும் சரியான குறிப்புகளைக் கொண்ட நூலாக வெளிவர இந்நூல் உதவமென்றும் நம்புவதோடு தரமான நூல்களையே வெளியிட்டு வரும் எமது நூல்களை ஆதரித்து வரும் தமிழகம் இந்நூலையும் வரவேற்கும் எனத் திடமாக நம்புகிறோம்.

**என். பாலகிருஷ்ணன்**
ராஜேஸ்வரி புத்தக நிலையம்

15-8-94இல் காஞ்சிபுரம் பச்சையப்பன் மேல்நிலைப் பள்ளியில் நடைபெற்ற, இந்நூல் ''திறனாய்வுக் கருத்தரங்கில்'' பங்குகொண்டு சிறப்பித்துப் பாராட்டிய

## தமிழறிஞர் பெருமக்கள் குழு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ சங்கர விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளாசியுடன் கம்பர் கால கமலாக்ஷ கவிஞர் டாக்டர் மா. வரதராஜன் அவர்களின் ''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே'' என்னும் ஆராய்ச்சி நூல் திறனாய்வுக் கருத்தரங்கம்.

ஸ்ரீபெரும்புதூர் ஸ்ரீமத் பரம ஹம்ஸேத்யாதி ஸ்ரீ வரத யதிராஜ ஜீயர் ஸ்வாமிகள்

தவத்திரு. சுவாமி சித்ரூபானந்தா

மகாவித்வான் மயிலம் வே. சிவ சுப்ரமணியம்

செந்தமிழறிஞர் மாருதிதாசன்

வித்வான் நாராயணவேலுப்பிள்ளை

புலவர் பொன். மெய்கண்டார் M.A., M.Ed.. தலைமையாசிரியர்

புலவர் சு. இளங்கோவன் M.A.,M.Ed., தலைமையாசிரியர்

கவிஞர் J.P. இயேசுபாதம் M.A., B.Sc., M.Ed,, தலைமையாசிரியர்

கவிஞர் மு. சண்முகம் M.A., M.Ed., தலைமையாசிரியர்

புலவர் சரவண சதாசிவம் M.A., M.Ed., உதவி தலைமையாசிரியர்

புலவர் சிவ. கண்ணிப்பன் M.A., M.Ed.,

புலவர் பு. தி. கண்ணன் M.A., M.Ed.,

புலவர் வே. கணேசன் M.A.,M.Ed.,
புலவர் கா. சு. பாலசுப்ரமணியம் M.A.,M.Ed.,
புலவர் K. பரமானந்தம் M.A.,M.Ed.,
டாக்டர் சி. கே. இராமன் M.A., B.L., PhD.,
டாக்டர் சிவ. சண்முகசுந்தரம் M.A., Ph.D.,
புலவர் வே. மகாதேவன் M.A., M.Phil.,
புலவர் க. பார்த்தசாரதி B,Lit., B.Ed.,
இ. செல்வமணி M.A.,M.Ed.,
இரா. பாலசுப்ரமணியம் B.A., L.L.B.,
என். ஆர். இராமபத்திரன் B.A., Hons.,
திருமிகு லட்சுமிகாந்தன் சுவாமிகள்
திருமிகு பச்சைவேட்டி பால் சுவாமிகள்
கவிஞர் ஆசூரி இராஜகோபால், தமிழாசிரியர்
வீராபுரம் சம்பத் ஐயங்கார், கம்பன் கழகம்
கடலூார் கம்பர், கம்பன் கழகம்

கருத்தரங்கு அமைப்புக் குழு:

காஞ்சி R. K. வாசு, L. V. குமார், T. V. மணி, T. K. சாரதி, S. மகேஸ்வரன், D.M.E.D.P.M. கி. தேவேந்திரன், M. வரதன், வ. கோட்டீஸ்வரன், E, இராமலிங்கம், கிண்டி, S. R. குமார், நேசமணி. வ. சீனிவாசன்

# 1. உலக காவியங்களில் தலை சிறந்தது கம்பர் காவியமே!

## பரம்பொருள் வணக்கம்

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே.

—கம். இரா. பா-1

தருகை நீண்ட தயரதன் தான் தரும்
இருகை வேழத்து இராகவன் தன் கதை
திரிகை வேலைத் தரை மிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

—கம். இரா. பா-1

## கம்ப இராமாயணப் பயன்

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித் தீருமே
இம்மையே ''ராமா'' என்றிரண்டு எழுத்தினால்.

—கம்.இரா.பாயி-15

தராதலத்திலுள்ள, தமிழ் குற்றமெல்லாம் அராவும் அரமான கம்பர், நம்பு பாமாலையாலே நரருக்கின்றமுந மீந்த கம்பர் வரமிகு கம்பர் சொன்ன திரமிகு காவியத்தில் ஒன்றைக் காண்போம்.

**நீரிடை உறங்கும் சங்க நிழலிடை உறங்கும் மேதி**
**தாரிடை உறங்கும் வண்டு தாமரை உறங்கும் செய்யாள்**
**தூரிடை உறங்கும் ஆமை துறையிடை உறங்கும் இப்பி**
**போரிடை உறங்கும் அன்னம் பொழிலிடை உறங்கும்**
**தோகை**

—கம்.இரா.நாட்டு. பா-37

கோசலை நாட்டின் செழிப்பை கம்பர் பாடும் பாங்கு அவரை வாழ்வாங்கு வாழவைக்கும், வண்ணத்தமிழ் கருத்துப் பேழைக்கொரு எடுத்துக் காட்டு. தடாகத்தில் வளைய வளைய வரும் அன்னம் வைக்கோல் போரில் அமைதியாய் உறங்குகிறதாம். பசும்புல் எங்கும் செழித்துள்ளமையால் எருமை வைக்கோலை நாடாது புல்லை மேய்ந்து மரத்திடை உறங்குகிறதாம். எருமையால் தடாகம் அலைக்கழிக்கப்படாமல் நீரிடையே சங்கு உறங்குகிறதாம். மலர்ந்த மலரில் தேன் நிறைந்திருக்கும் ஆதலால் கோசலை நாட்டுமக்கள் மார்பில் மாலைகள் அணிந்து ஆனந்தம் கொள்கின்றனர்.

**ஆடவும் அகன்புனல் ஆடி அம்மலர்**
**சூடவும் பொழுதுபோம் சிலர்க்கு அத்தொல்நகர்**

கம்.இரா.நா.பா-158

வண்டுகள் அம் மலரில் ஐயமின்றித் தேனை சுவைத்து உறங்குகிறதாம். இத்தனை வளமிகுந்த குடிமக்களுக்கு, செல்வமும் நிறைந்திருந்தமையால் செல்வம் வழங்கும் இலட்சுமி மலரிலே ஓய்வு கொண்டு உறங்குகிறாளாம். ஆடும்

மயிலும் ஆங்கோரிடம் அமைதியாய் உறங்குகிறதாம். நீரி டையே நீந்திக் களிக்கும் ஆமை அமைதியாய் மரத்தின் வேரிடையே உறங்குகிறதாம். ஒரு நாட்டின் வளம் எத் துணை உயிர்களுக்கு நலம் பயக்கும் என்பதை கவிச்சக்கர வர்த்தி நாலடி பாடலிலே, நாவினிக்கும் நற்றமிழிலே சுவை மிகுந்த சொல்லடுக்கிலே, செவி மகிழும் கவியாக்கி, தே, மா, பலா கனிச் சுவைத் தேக்கி, கன்னித் தமிழிழை என்று முள தென்றமிழாய், தீங்கனியாய், ஒப்பற்ற செந்தமிழ் காவியமாய் வழங்கிய கவிபெருமானை,

11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வீரசோழிய உரை யாசிரியர் பெருந்தேவனார், வீரராஜேந்திர (சோழன் காலம் கி. பி. 1063-70) ''கம்பரிடையே பெருமையுள்து'' என்று கம்பரை சிறப்பித்துக் கூறியுள்ளார்.[1]

நன்னூல் விருத்தி உரையாசிரியர் சங்கர நமச்சிவாயர், திணைநிலஞ்சாதி யெனும் சூத்திர உரையில் உதாரணங் காட்டி, கரியன் கம்பர்[2] எனக் குறிப்பிடுகிறார்.

கம்ப ராமாயணப் பாயிரத்திலும் பல தமிழறிஞர்கள் ஆய்வு நூற்களிலும் கம்பரைக் கல்வியில் பெரியர் எனச் சிறப்பித்துள்ளார்கள். திருமணம் செல்வ கேசவராயர் அவர்கள் கம்பரை முதன்மை வைத்து வள்ளுவரை அடுத்து வைத்து, இவர்கள் இருவருமே தமிழ் மொழிக்கு ''கதி''[3] என்கிறார். க—கம்பர், தி—திருவள்ளுவர்,

**''கல்வியிற்சிறந்த தமிழ் நாடு புகழ்க்**
**கம்பன் பிறந்த தமிழ் நாடு''**

**''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்**
**வள்ளுவனைப் போல் இளங்கோவைப் போல்**
**யாங்கணுமே கண்டதில்லை''**

"கம்பன் என்றொரு மானிடம் வாழ்ந்ததும்
சேரன் தம்பி சிலம்பை இசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை கண்டதும்" [4]

—பாரதி

இன்தமிழ் இதயம்! கம்பன் காவியம்!
செந் தமிழ் வேதம்! வள்ளுவன் வாய்மொழி!
பைந் தமிழ் கற்பு! இளங்கோ அமுதம்!
நந் தமிழ் வீரம்! பாரதி தமிழ்!

"நம் தமிழுக்கே! தனிப்பெரும் செல்வம்" கம்ப ராமாயணம் என்பதை; பாரிஸ்டர் சுதந்திர வீரத்தியாகி! அந்நிய மண்ணிலே! நம் தாயகத்திற்காக வித்திட்ட பெருந்தகை, தமிழறிஞர் ஆங்கில புலமைமிக்க மேதை! ஐயா. வ. வே. சுப்பிரமண்ய ஐயர் அவர்களின் ஆராய்ச்சி கட்டுரையில் குறிப்பிடுகிறார்கள். பத்தாண்டுகளுக்கு மேலாகக் கம்ப ராமாயணத்தையும் கம்பரையும் நன்கு ஆராய்ந்து, கம்பர் ஆராய்ச்சிக் கட்டுரையும், கம்ப ராமாயண ஆங்கில கவி மொழிபெயர்ப்பும் வெளியிட்டுள்ளார்கள், அதைக்கொண்டு அந்நிய நாட்டு ஆங்கில மேதைகளையும் இலக்கிய ஜாம்பவான்களையும் கம்பரை அறியும் படி செய்து, அவர்களது உலகக் காவியங்களோடு கம்பர் காவியத்தையும் ஒப்பு நோக்கி, அவர்கள் எல்லோருமே கம்பர் சன்னதியில் அடிவணங்க வேண்டியவர்களே, எனத் துணிந்து, வான்மீகியும் வியாசரும் கூட காவியம் என்ற வகையில் கம்பருக்கு பின்னால் நின்று விடுகிறார்கள், என்று குறிப்பிட்டுள்ளார்கள். [5] மேலும்

உலக மகா கவிகளான ஹோமர், வெர்ஜில் மில்டன், வியாசர் போன்றோர்களின் பெருங் காப்பியங்களின் அம்சங்கள் அத்தனையும் கம்ப ராமாயணம் வென்று விட்டதாக கூறுகிறார். இலக்கிய வரலாறும் கல்வெட்டும் [6].

 778 / 107 / கி.பி. 885

நமது முன்னோர்கள் கம்பருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்றுபேர் தந்தது ''வெறும் புகழ்ச்சியல்ல'' உண்மை! உலக மகா கவிகள் என்று சொல்லத் தகுந்த ஹோமர், விர்ஜில், தாந்தோலன் ஷேக்பியர், மில்டன் மோலியோர், கதே, ஆகியோர் கம்பருடைய சந்நதியில் தலைவணங்க வேண்டியதுதான். கச்சியப்பரும் (காஞ்சியில் குமரகோட்டத்தில் கந்தபுராணத்தை கி. பி. 778ல் அரங்கேற்றப்பட்டது.) இந்த அரங்கேற்ற காலத்தையும் வீரசோழிய உரைக் குறிப்பிட்டுள்ளது' அதில் கம்ப ராமாயண அரங்கேற்றத்திற்கு 107 ஆண்டுகட்கு முன் எனக் குறிப்பிட்டுள்ளது. இக்குறிப்பு கம்பர் காலம் காட்டும் கண்டியாகும். அதாவது கம்ப ராமாயண அரங்கேற்றம், கி. பி. 885 இதில் 107 ஆண்டுகள் கழிக்க கி. பி. 778ல் கந்த புராண அரங்கேற்றம் என்பதை உறுதி படுத்துகிறது! இதையே,

கம்ப ராமாயணம் 12ஆம் நூற்றாண்டு எனக் கொண்டால் கந்த புராண அரங்கேற்றம் கி. பி. 1078, முதலாங் குலோத்துங்கன் ஆட்சி, தவிர ஸ்ரீ ராமாநுஜர் (1017—1137) காலம். எனவே கி. பி. 8ஆம் நூற்றாண்டு கச்சியப்பர் கி. பி. 11ஆம் நூற்றாண்டு ஸ்ரீ ராமாநுஜரின் சம காலத்தவர் என்று ஆகும். ஆகவே ''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே'' என்பதை நாம் உறுதிபடுத்துகிறோம்).

கச்சியப்பரும், இளங்கோவடிகள் சாத்தனார் நன்னையப்பட்டன், சந்தபட்டன், துளசிதாஸர், காளிதாசன் முதலிய மகா கவிகளை கம்பரோடு தூக்கி பார்த்தாலும், கம்பன் பக்கமே, தராசுமுனை சாயும். வால்மீகி வியாசர் ஆகிய கவிகளைக் கம்பருக்கு இணையாகவோ, ஒரு முனை ஏற்றமாகவோ சொல்லலாம். கவிதாரீதியாக[8] என்று ஐயா வ. வே. சு. அவர்கள், குறிப்பிட்டுள்ளார்கள் எனில் உலக காப்பியங்களில் தலை சிறந்தது கம்பர் காப்பியமே! என்று நாம் குறிப்பிட்டது மிகையல்ல.

''ஒப்பற்ற உலக காப்பியங்களின் கவிச்சக்கரவர்த்தி களை கீழ்க்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்!

| இயற்றியவர் | மெழி | நூற்பெயர் | நூற்பொருள் |
|---|---|---|---|
| கம்பர் | தமிழ் | கம்பராமாயணம் | இறைமாண்பு |
| வான்மீகி | வடமொழி | வான்மீகி ராமாயணம் | பண்பாட்டு சிறப்பு |
| வியாசர் | வடமொழி | மகாபாரதம் | நீதியின் மாட்சிமை |
| வள்ளுவர் | தமிழ் | திருக்குறள் | தமிழ்வேதம் |
| இளங்கோ | தமிழ் | சிலப்பதிகாரம் | கற்புநெறி |
| ஹோமர் | கிரேக்கம் | இலியட் | சினம்அழிப்பு |
| வெர்ஜில் | இலத்தீன் | ஈலியட் ஆடிசி | பண்பாட்டின் உச்சம் |
| மில்டன் | ஆங்கிலம் | சுவர்க்கநீக்கம் | மனிதவீழ்ச்சி |
| தாகூர் | வங்காளம் | கீதாஞ்சலி | இயற்கை இன்பம் |
| தாந்தோ லன் | இத்தாலி | டிவைன்காமடி | சிந்தனைசிரிப்பு |
| பாரதி | தமிழ் | பாரதிபாடல் | புரட்சிக்கவி |

மற்றும் தொத்தேயின் ஜெர்மன், ஆக்வாஸ்ட், போப் பின் இலியெடுக், ஷேக்ஸ்பியர், மோலியோர், கதே என்று முறைப்படுத்தலாம்.

''புவிச் சக்கர வர்த்திகள் போற்றி புகழுங்
கவிச் சக்கர வர்த்தி கம்பர் [9]

''கம்பன் மொழி செந்தமிழின் கவித்திறன் காட்சி [10]

''கற்றார் கவியில் பெரிதாம் தமிழ்க்கம்ப நாடன் [11]

தமிழ்க் கம்பநாடன் கவியை அரிகேசரியின் ரகுவம்சம் சிறப்பிக்கிறது. அரிகேசரி என்பார், 12ஆம் நூற்றாண்டு ஒட்டகூத்தருக்கு முற்பட்டவர். 9ம் நூற்றாண்டு கம்பருக்கு பிற்பட்டவர் என்று அறியலாம்.[12] ஆகவே ''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே.''

**''பூணிலாவும் கம்பனலம் பொழியும் தமிழால்!** [13]
**''பேரிலக்கிய முதற் கவிஞர் கம்பர், ஒண்பான்**
**சுவைக்கும், ஒருங்கமைந்த நறுஞ்சுவைக்கும்:**
**களஞ்சியமாய்த் திகழ்பவர் கம்பர்''** [14]

''கி பி. 1376ல் கன்னட நாட்டில் கம்பராமாயண பிரசங்கம் சிறப்பாக நடைபெற்றுள்ளது என்கிறது [15] காவிரி வெள்ளக் காடாகினமைக்கு வருந்தி, கம்பர், ''காவிரி நாடென்ன கழனி நாடு'' எனச் சிறப்பித்ததாக குறிப்பிடுகிறது. [16]

**கன்னி அழிந்தனள் கங்கை திரும்பினள்**
**பொன்னி கரையழிந்து போனாலென்—இந்நீர்**
**உரை கிடக்கலாமே, உலகுடைய தாயே**
**கரை கடக்கலாகாது காண்      —கம்பர்** [17]

காவேரி பொங்கி, கரை கடந்து, கழனி காடானமைக் கண்டு கம்பர் வருந்தி பாடிட, காவேரி அடங்கி கழனி விளைந்து மக்கள் மகிழ்ந்த செய்தி கேட்டு ஆதித்த சோழன் குடிமக்களின் கலியாண வரியை, கம்பருக்குப் பரிசாக வழங்கினான் என்கிறார். கு. அழகிரிசாமி [18] அதை கம்பர் கொங்கு நாட்டு, புலவர் வம்சத்தார்களுக்கு வழங்கியதாகவும் குறிப்பிட்டுள்ளார்!

கவிச்சக்கரவர்த்தி கம்பர் புவிச் சக்கரவர்த்திக்கு ஒப்பாக சகலமும் புடைசூழக் களம், குடை, கொடி, சாமரை

ஆலவட்டம், சகிதம் சிவிகையில் பவனி வரும் வழியே உள்ள வயல்களுக்கு சோழன் வரி ரத்து செய்து விட்டதாகவும் கு. அழகிரிசாமியவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். [19]

''கையில் கம்பன் கவியுண்டு; கலசம் நிறைமது உண்டு;
வையம் தருமிவ் வனமின்றி வாழும் சொர்க்கம்
வேறுண்டோ?''

என்று தேசிக விநாயகம் பிள்ளை [20] பாடியுள்ளார்.

கம்பர் வீட்டில் சிறுபுண் கட்டுத்தறி கவிசெயுமென்
கம்பர் நாட்டு மன்பதை கூறிடுஞ்சொல் புலவீர் கேட்டு வந்தாம்
சம்பு நீட்டு சடை தலைக்கும் தருவர் தலைருந் திருப்பாதை
அம்பு நாட்டுமால் சரிதமன்றோர் பாடலது வியப்பே [21]

சித்திர கலைகளோங்கும் செய்ய தமிழ்நாட்டில்
சித்த முவக்கக் கவிதை செய்தளித்த கம்பனின்
சித்திர கரும்பு அருந்திச் சேர்ந்து பந்தடித்துமே.
நித்தமுமே நாமும் கூடிநின்று பந்தடித்துமே. [22]

இன்னொரு கம்பனும் வருவானோ? கம்பனை மறந்தால் தமிழ் ஏது? என்கிறார்[23] கம்பர் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடுமாம். [24]

மூன்று அவன் குணங்கள் செய்கைமூன்று அவனுருவம் மூன்று
மூன்று தன்சுடர் கொள் சோதி மூன்று அவனுலகம் மூன்று
தோன்றலும் இடையும் ஈறும் தொடங்கிய பொருட்கட் கெல்லாம்
சான்று அவன் இதுவே வேதமுடிவு சரதமென்றான். [25]

மூன்றுக்கும் வித்தானவனே வேதத்தின் முடிவானவன் என்று கம்பர் அறுதியிடும் ஸ்ரீ ராமனை வடமொழி பகரும் பாங்கினைப் பருகுவோம்.

**''ராமாய ராமபத்திராய ராம சந்திராய:**
**வேதஸே! ரகுநாதாய நாதாய|சீதாய பதயே! நம:**

அதாவது, இராமனை, இராமாய என்று செட்டரும் இராமபத்திராய என்று கோசலையும், ராமசந்திராய என்று தசரதரும், தேவஸே என்று விஸ்வாமித்திரரும், ரகுநாதாய, என்று அயோத்தி மக்களும், நாதாய என்று சீதையும், சீதாய பதயே நம: என்று மிதிலை மக்களும், சீதாபதி என்றே வழங்குவராம். இப்படியாக,

**''இன்னணம் ஒளிர்தர இமையவர்க்கெலாம்**
**தன்னையே அனையதோர் கோலம்**
**தாங்கினான்** [26]

என்று ''என்றுமுள தென்றமிழால்'' கம்பர் இராமனை சிறப்பித்தமையால், கம்பர் காவியமே, உலகத்தின் மிக உயர்ந்த சிகரம் இமயத்தின் எவரெஸ்டு எத்தனை உண்மையோ! அத்தனை உண்மை, உலகாவியம் அனைத்தினும் உயர்ந்தது கம்பர் காவியமே.

## அடிக்குறிப்பு

1. புத்தமித்தரனார் இயற்றிய வீசோழியம் பக். 24. வரி 17. பெருந்தேவனாருரை.
2. தமிழ்ப்புலவர் அகராதி பக். 98
3. 1. கம்பநாடர் ஆய்வுநூல்; தி.செ.கேசவராயர்
   2. தமிழரசு 7ஆம் வகுப்பு தமிழ்துணைப்பாட நூல் பக். 62. 1939
4. மகாகவி பாரதியார் பாடல்

5. வ. வே. சு. ஐயர் அவர்களின் கம்பராமாயண ஆராய்ச்சிக் கட்டுரை 1971
6. சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் வெளியீடு
7. வீரசோழிய உரை பழைய பதிப்பு பக்.25
8. வ. வே. சு. அய்யரவர்களின் கம்பர் ஆராய்ச்சிக் கட்டுரை. 1971
9. கம்பரவர்களின் சரஸ்வதி அந்தாதி, வெளியீட்டாளர் முன்னுரை.
10. வரதராஜ பாகவதம்
11. அரிகேசரியின் ரகுவம்சம்
12. இந்நூலில் "கம்பரும் ஒட்டக்கூத்தரும் சமகாலத் தவரல்லர் பகுதியில்
13. சோழ மண்டல சதகம்
14. கவி மன்னர் மூவர்
15. அமுதசுரபி தீபாவளி மலர் 1987.
16 த. ச. மூர்த்தியவர்களின் "கவிச் சக்கவர்த்தி கம்பர்"
17. கலைச்செல்வி வெளியீடு தனிப்பாடல் திரட்டு
18. சக்தி வெளியீடு கம்பராமாயண முன்னுரை பக் 22. 1958.
19. சக்தி வெளியீடு கம்பராமாயண முன்னுரை பக் 22. 1958.
20. கவிமணி கவிதை பக்கம் 81.
21. உ. வே. சாமிநாதையர் கம்பராமாயண முன்னுரை பக் 4
22 புத்த நேரி. ரா. சுப்பிரமணியம். செந்தமிழ்ச் செல்வி இதழ் 1941.
23. ஆசிரியர். கம்பன் ஒரு திறனாய்வு பக். 280
24. பழமொழி
25. கம்பராமாயணம் இரணிய படலம்
26. கம்பராமாயணம் கடிமணப் படலம் பாடல். 1311..

# 2. தமிழ் மொழியின் இதயமாக விளங்குவது கம்பராமாயணமே!

இராம காதை, இராமன் திருக்கதை, இராமன் தன் கதை, இராமன் தோள் வலி, இராமப் பேர், இராம வேழம் என வழக்கப்படுவதன்றி, பெருந்தொகை தொகுப்பு நூலிலும் திருவள்ளூர் மாலையிலும் இராமாவதாரம், சீராம கதை எனவும் வழங்கப்படுகிறது. பொதுவாக கம்பராமாயணம் என்றே வழங்குவர். கம்பராமாயணம் காண்டம், 7, படலம் 129, பாடல் 12 ஆயிரத்து பதினாறு என்று திட்டமாக கூறுகிறது கீழ்க்கண்ட பாடல்.

**கரை செறி காண்டம் எழு. கதைகள் ஆயிரத்து**
**தொண்ணூறு,**
**பரவறு சமரம்பத்து, படலம் நூற்று இருபத்தெட்டு,**
12,016 | **விருத்தம் பன்னீராயிரத்து ஒருபத்தாறு,**
**வரமிகு கம்பன் சொன்ன வண்ணமும்**
**தொண்ணூற்றாறே.** [1]

இப்பாடல் 7 காண்டம் என்பதால் இப்பாடல் இடைச் செருகலாக இருக்கலாம் என்பர். காரணம் 7வது காண்டம் ஒட்டகூத்தரால் வழங்கப்பட்டதாக சிலர் கூறுவர். ஆராய்ச்சி அறிஞர்கள் இதை ஒப்புக்கொள்ளவில்லை, வாணியதாதன் என்பார் வழங்கியதாகவும் இப்பெயர்

கூத்தரின் புனைப்பெயர் என்பர் சிலர். இதையும் ஆராய்ச்சி யாளர் ஒப்பவில்லை.

கம்பராமாயணத்தில் ஒரு காண்டமும் 15 படலமும் 1600க்கு மேற்பட்ட பாடலும் காணப்படவில்லை. காரண மும் கண்டாரில்லை. ஆனால் கூத்தரால் இயற்றப்பட்டதாக உத்திரகாண்டம் 22 படலங்களையும் 1390 பாடல்களைக் கொண்டதாக எந்த ஆதாரமுமின்றி, அபிதான சிந்தாமணி கூறுகிறது.[2]

கம்பராமாயண பாடல் பலவாறாக காணப்படுகிறது. அவைகள்:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. பாடல்படி | காண்டம் | 7, | படலங்கள் | 128, | பாடல்கள் | 12016 |
| 2. கழகவெளியீடு | ,, | 6, | | 113, | ,, | 10600 |
| 3. பேரா, விமலானந்தம் | ,, | 6, | | 113, | ,, | 10590 |
| 4. சக்தி வெளியீடு | ,, | 6, | | 113, | ,, | 10560 |
| 5. கவிமன்னர் மூவர் | ,, | 6, | | 113, | ,, | 10600 |
| 6. எம். ஏ, பாடநூல் | ,, | 6, | | 113, | ,, | 10500 |
| 7. பாண்டியன் முடி | ,, | 7, | | — | ,, | 12000 |

ஒவ்வொரு காண்டங்களில் அடங்கிய காதை.

1, பால காண்டம், இராமர் பிறந்து சிதா கல்யாணம் முடிந்து அயோத்தியடைதல்.

2. அயோத்தி காண்டம், நாடு துறந்து காடு அடைதல்.

3. ஆரணிய காண்டம், சீதையை இழந்து சடாயு சந்திப்பு.

4, கிட்கிந்த காண்டம், வாலி வதை முடித்து இலங்கை செல்லுதல்.

5. சுந்தரகாண்டம், அனுமான் சீதையை கண்டு இராமனுக்கு அறிவித்தல்.

6. யுத்த காண்டம். சீதையை மீட்டு அயோத்தி பட்டாபிஷேகம்.

முதல் 5 காண்டங்கள் ஐந்து பாகமாகவும் 74 படலங்களை கொண்ட சுமார் 6000.பாடல்கல் சுமார் 6000 பக்கங்களைக் கொண்டது. 6வது யுத்த காண்டம் மட்டும் நான்கு பாகமாக 39 படலங்கள் 4416 பாடல்கள் 4560 பக்கங்கள் கொண்டவையாக உள்ளது. ஆக 9 பாகம் 6 காண்டம் 113 படலங்கள் 10414 பாடல்கள் 11000 பக்கங்கள் இவைகள் டாக்டர் உ. வே. சாமிநாதய்யரவர்களின் வெளியீடாகும்.

எனவே காவியம் என்ற வகையில் உலகத்திலேயே உயர்ந்தது அனைத்து அம்சங்களிலும் பாடல்கள் பக்கங்கள் அதிகம் கொண்ட பெருநூலாக கம்பராமாயணம் விளங்குகிறது.

## இராமாயணக் கருத்து

தந்தை சொற் காத்தல் உடன் பிறந்தார் ஒற்றுமை ஒழுகல், பிறப்பினால் பேதமற்ற சகோதரத்துவம், கணவனே கண் கண்டதெய்வம் ஒருவனுக்கு ஒருத்தியே என்ற

## முத நூலும் வழி நூலும் ஒப்பீடு

| | வான்மீகி இராமாயணம் | கம்பராமாயணம் |
|---|---|---|
| 1. | கைப்பிடித்து சீதையை மணம் புரிதல் | காதலித்து கருத்தொருமித்து மணம் |
| 2. | இராவணன் சீதையை தீண்டி கவருதல் | பூமியைக் கீண்டி பூமியோடு கவருதல் |
| 3. | இராமனை மனிதரில் தேவனாக. | இராமனே இறைவனாக |
| 4. | சீதாவைக் காண பல சருக்கம். | சீதையை காண ஒரு படலம் |
| 5. | இரணிய வதைப் படலம் கிடையாது | இது கம்பரின் தனிப்படைப்பு |
| 6. | கோசலை நாடு அயோத்தி நகரும் | தமிழ்நாடு நகராய் |
| 7. | சரயு நதியை சார்ந்து | பொன்னி காவிரியை சார்ந்து |
| 8. | சூரிய குலத்து ஆரிய பண்பு | தாயகத்து தமிழர் தம் பண்பு |
| 9. | தீங்கவி வட மொழியில் | என்றுமுள தென்றமிழாய்! |
| 10. | சேவகன் சீர் உரைக்கும் பாசுரம் | திருமால் சீர் பரவும் பா" |
| 11. | வடபுலத்து வாழ்வோராய் | தென்புலத்து தமிழர் பாத்திரமாக |
| 12. | சருக்கங்கள் 537 | படலம் 113 |
| 13. | இரு அடிகளாக 21018 | நான்கடிகளாக 10600 |
| 14. | இரு அடிகளுக்கு ஈடு | கம்பரது ஒரு அடி |

உயர்மாண்பு, தெய்வத்திற்கும் சோதனை. பிறன் மனை நோக்குவான் அழிதல், அடியாரிடம் ஆண்டவனும் அடைக்கலம். (இராமன் அனுமனை அணைத்து உட்புகுந்தான்) அறன் வலியுறுத்தல் ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்ட பக்தி காவியம். இதனை அமரர், பா. ஜீவானந்தம் குறிப்பதாவது,

''கம்பனின் கம்பராமாயணத்தின் உண்மையான சகோதர பாசம்,ஜனநாயகப் பார்வை கற்பனா சோசலிஷத்தையும், தமிழகத்திற்கு எடுத்துக் காட்டியும், ஒப்பிட்டும், தமிழர்கள், உச்சிமேல் வைத்து மெச்ச தடம் அமைத்தார் கம்பர்[3] என்கிறார் பா. ஜீவானந்தம்.

''உயர்தோல் வளியாற் கிண்டான் நிலம் யோசனை
கீழ் மேல் என்று'' —கம்பர்[4]

தேவ பாடையில் தேவ மொழியெனும் வடமொழியில் முந்திய நாவினார், 1. வான்மீகி ராமாயணம் 2. வசிட்ட இராமாயணம் 3. போதாயன ராமாயணம் என மூவர் (சிலர் வசிட்டரைவிட்டு வியாசரின் அத்யாத்ம இராமாயணம் எனவும்) வழியில் தாம் (கம்பர்) தமிழ்மொழியில் செய்வதாக கம்பரே பாடிய

**தேவபாடையில் கதை செய்தவர்**
**மூவரானவர் தம்முன் முந்திய**
**நாவினாருரை யின்படி நான் தமிழ்ப்**
**பாவினால் இது உணர்த்திய பண்பரோ.**[5]

அலைகடலை நாவினால் நக்கியே பருகிட ஆசை கொண்ட பூனையின் கதைபோல இராமனைப் பாடி முடித்தல் இயலாதாயினும் ஆசையால் உந்தப்பட்டு பாடுகிறேன் என அவையடக்கத்தோடு ராமன்மீது அன்பு கொண்டு கம்பர், இரர்மாயணம் பாடியதாக.

பாலகாண்டம் முதற்பாடலான, ஆசலம்புரி என்ற தொடக்கப்பாட்டிலேயே ஆண்களின் ஐம்புலன்களினாலும் பெண்களின் கண் அம்புனாலும் குற்றமற்ற ஒழுக்க சீலர்கள் கோசல நாட்டு மக்கள், என ஒழுக்க சீலரானக் கம்பர் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டே காவியம் துவக்குகிறார்.

அடுத்து மக்கள் வாழ்க்கை,வறுமையின்றி பொய்யின்றி வண்மை திண்மையின்றி அனைவரும் சமத்துவமாக வாழ்வதை,

வண்மை யில்லை ஓர் வறுமை இன்மையால்
திண்மை இல்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மை இல்லை பொய் உரை இலாமையால்
ஒண்மை இல்லை பல கேள்வி ஓங்கலால் நாட்டு. ப.35

என்று எளிமையான சொற்களால் இனிமை ஓசை நயத்துடன் பாடுகிறார்.

கள்வார் இலாமைப் பொருள் காவலுமில்லை
கொள்வாரும் இலாமைக் கொடுப்பார்களுமில்லை
மாதோ
—நகர 16

எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையார்களுமில்லை மாதோ
—நகர 166

தம்பியுடையான் படைக்கஞ்சான், என்பன போல் வேள்வியை காப்பதில் இராமனும் இலக்குவனனும் ''கண்ணினை இமைகள் காப்பதுபோல்'' கண் விழியில் சிறு தூக்கம் அணுகாது மேலிமை கீழிமையை அடிக்கடி தொட்டு விழியை காப்பதுபோல், வேள்வியை இளையவன் இருந்த

*இடத்திலிருந்தே காக்க, இராமன் வலம் வந்தவாறே தம்பியைத் தட்டிக் கொடுத்துக் காத்தவராம். அதை,*

**எண்ணுதற்கு ஆக்க அரிது இரண்டு மூன்றுநாள்**
**விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை**
**மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்**
**கண்ணினைக் காக்கின்ற இமையில் காத்தனர்.**

—வேள்வி 458.

*காதலித்து மனம் கட்டுண்டு கடிமனம் புரிதல் தமிழர் தம் மாண்பு அதனை,*

**என் அரு நலத்தினாள் இணையள் நின்றுழிக்**
**கண்ணொடு கண்ணினை கவ்வி ஒன்றை ஒன்று**
**உண்ணவும் நிலை பெறாது உணர்வும் ஒன்றிட**
**அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்.**

—மிதிலை 596

*பார்க்கடல் பள்ளியில் துயின்ற இருவரும் பிரிந்து கூடுதலை சுட்டி.*

**கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்**
**பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?**

—மிதிலை 599.

*சீதையின் உள்ளம், வல்லியின் உள்ளம்போல் உருகியதாக. கம்பர்,*

**''சுழலிடு கூந்தலும் துகிலும் சோர் தர**
**தழலிடு வல்லியே போலச் சாம்பினாள்''.**
**''தையல் சிற்றிடையாள் ஒரு தாழ்குழல்**
**உய்ய மற்றவள் உள்ளத்து ஒடுங்கினான்**
**வையம் முற்றும் வயிற்றில் அடக்கிய**
**ஐயனில் பெரியார் இனியாவரே?**

—பால1165 (உலா)

உலகம் முழுவதும் தன் வயிற்றில் அடக்கிய நாராயணனான இராமன் நீண்ட கருங்கூந்தலும் சிற்றிடையும் கொண்ட சீதையுன் உள்ளத்தோடு ஒடுங்கினான். இவரில் இனி யார் பெரியவா? என கம்பநாட்டாழ்வார் நம்மையே கேட்கிறார்.)

*மிதிலை நகரில் இராமன் நகர்வலம் வருவதை!*

**மானினம் வருவபோன்றும் மயிலினம் திரிவபோன்றும்**
**மீனினம் மிளர்வபோன்றும் மின்னினம் மிடைவ**
**போன்றும்**
**தேனினம் சிலம்பி ஆர்ப்ப சிலம்பினம் புலம்பிரங்கப்**
**பூநனை கூந்தல் மாதர் பொம்மென புகுந்து மெய்த்தார்.**
—பால 1146

பூவினால் நனைந்த கூந்தலையுடைய மாதர் பொம்மெனப் புகுந்து மெய்க்க, மானினம் போன்ற, மயிலினம் போன்ற, விண்மீன் ஒளியுடையர் போன்ற, மின்னொளி ஒத்தார், போன்றவர்களோடு பூநனை கூந்தலால், வண்டினமும் வட்டமிட்டு ஆரவாரஞ்செய்யும் அழகினைக் கம்பரது கவி மழைத்தேன், தமிழாய் பொழிவதைக் புரிந்து கொள்ள ஆர்வமும், தெரிந்து கொள்ள எழுத்தறியும் கல்வியும் போதும்; பட்டப்படிப்போ, புலமையோ தேவையில்லை. கம்பனைக் கற்க. என்று வ. வே. சு. ஐயர் கூறியதுபோல் எளிய சொற்களால் அரிய பொருளை அள்ளித்தரும் கம்பரை எளியோரும் அறியும் வண்ணம்,

**ஓசை பெற்றுயர் பாற் கடலுற் றொரு**
**பூசை முற்றவு நக்குபுக்கென**
**ஆசை பற்றியறையலுற்றேன் மற்றுக்**
**காசில் கொற்றத் திராமன் கதையரோ.**[6]

*முத்தமிழும், (இயலிசை நாடகம்) தேர்ந்த உத்தமக் கவிஞர்களுக்கு விண்ணப்பம் செய்கிறார். இராமன் மீது பித்துகொண்ட பயித்தியம் பேசுவதையும் பக்தி பரவச போதையால் கூறுவதையும் அறிவற்ற பேதை கூறுவதையும் அறிஞர்கள் ஆராய்ந்து குற்றம் காணுவரோ? என தன்னடக்கத்தோடு பாடுகிறார்.*

**முத்தமிழ் துறையின் முறை போகிய**
**உத்தமக் கவிஞர்க் கொன்று உணர்த்துவென்**
**பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்**
**பக்தர் சொன்னவும் பன்ன பெறுபவோ.** 7

*கம்ப ராமாயணத்தை, கற்போர்க்கும், கேட்போர்க்கும் பயன் கூறும், பாயிரம்.*

**நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாம்**
**வீடியல் வழியதாக்கும் வேரியங்கமலை நோக்கும்**
**நீடிய வரக்கர் சேனை நீறு பட்டொழிய வாகை**
**சூடிய சிலையி ராமன் தோள் வலி கூறுவோர்க்கே.** 8

—*பாயிரம்*

*தமிழின் இனிய சுவைததும்பும் தீஞ்சொல் வவ்விய கவிஞர், தமிழ் நிகர் நரவம், வண்டு தமிழ் பாட்டிசைக்க, நீண்ட தமிழ், தமிழெனும் அளப்பெரும் சலதி, தமிழ் பிறை சூட்டிய கடவுள் தந்ததமிழ், வண் தமிழ் உடைத்தேன், தன் தமிழ் பசுந்தென்றல், தெய்வத்தமிழால், எனவும் சுருங்கக் கூறின்,*

**இராமாவதாரப் பேர் தொடை நிரம்பிய தோமாறு**
**மாக்கதை,**
**தீங்கவி, செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்**
**உயிர்தாயர்.**

— *கம்பர் ராமாயணம்*

## வான்மீகி இராமாயணமே ஆதி காவியம்

"சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி ப்ரவிஸ்தரம்"

பாபத்தில் துணையாளுக்குப் பங்கில்லை, என உணர்ந்து பின் வேடுவன் "மரா மரத்தை" துதித்து வால்மீகியாகி விழித்தபோது, தராதரம் உணர்ந்து அடுத்தவன் செய்த உயிர் வேட்டையினை, கண்டு சபித்தார். அச்சாபமே தம் வாயில் சுலோக ரூபமாக வழங்கப் பட்டதே வால்மீகி இராமாயணம் ஆயிற்று. 'இதுவே காவியமாகும்' மேலும் வால்மீகியால் வழங்கப்பட்ட ஆனந்த ராமாயணமும் மேலும், ஆத்ம திருப்திக்கு அநந்த ராமாயணமும் பாடினார்.

இவர் புராண வான்மீகி. பால வான்மீகி, விருத்த வான்மீகி எனவும் இருவர் உண்டு. வேத விரோதமாக சபிக்கப்பட்டு சிவனாரால் புனிதப்பட்ட வால்மீகி வேறு. தமிழில் வான்மீகி என்றே வழங்கப்படுகிறது.

வான்மீகி இராமாயணத்தை அடிப்படையாகக் கொண்டு பல வடமொழி இராமாயணங்களும் 9-ம் நூற்றாண்டில் கம்பர் தமிழில் இயற்றிய பின், வழி நூலாக பல மொழி நூல்கள் பாரதத்திலும் உலகின் பல பகுதிகளிலும் தோன்றிய இராமாயணங்கள் எண்ணிலடங்கா. அவைகளில் சில :

வான்மீகி இராமாயணம்
ஆனந்த இராமாயணம்
அநந்த இராமாயணம்
அக்னி வேச்சிய இராமா...
அச்சுத இராமாயணம்

அத்புத இராமாயணம்
அத்தியாத்ம இராமா—வியாசர்
அத்தியாத்ம இராமா—மராத்தி
அருணாசல கவிராயர் ராம, நாடகம்
அரிகேசரி ரகுவம்சம்
அமிர்த இராமாயணம்
ஆந்திர வால்மீகி இராமாயணம்
ஆனந்த இராமா... கன்னடம், திம்பராயன்
இராம சரிதம்—தியாகராசர்
இரங்கநாத விஜயம்
இரகு வீரகத்தியம்—வேதாந்த தேசிகர்
இரகுநாத விலாசம்—ஒரியா
இராம விஜயம்—அஸாமி
இராம சரித்திர மானஸ்—துளசிதாஸ்
இராவண வதம்—வங்காளம்
இராம வீரா—குஜராத்தி
இராமநாதர் இராமா—இந்தி
இராம கீதாவளி—துளசிதாஸ்
இராம கதாவதாரம்—தேவசந்தர்
இராம சந்திரிகா—கேசவதாஸ்
இராம விஜய சரிதம்—தேவப்பா
கம்ப இராமாயணம்
காயத்திரி இராமாயணம்
காளிதாஸ் இரகுவம்சம்
கிருஷ்ண இராமாயணம்
கிருத்திவாச இராமாயணம்
குயில் இராமாயணம்

குழந்தை இராமாயணம்—ஸ்ரீ சங்கரமடம்
குஜராத்தி இராமாயணம்—பாலண்ணா
சக்கரவர்த்தி திருமகன்—இராஜாஜி
சமர்த்த இராமா—மராத்தி
சம்பூர்ண இராமாயணம்
சம்க்ஷேப இராமாயணம்
சீதா கல்யாணம்
சீதா சுயம்வரம்—மராத்தி
சீதா வனவாசம்
சீதா ஹரண்ய காவ்யம்
சுபத்திரா இராமாயண்ம்
சுயம்பு இராமாயணம்
சுவர்க்க இராமாயணம்
சுவர்சச இராமாயணம்—15000 சுலோகம்
சௌரபா இராமாயணம்
சௌராஷ்டிரா இராமாயணம்
சௌஹார்த்தி இராமாயணம்—40000 சுலோகம்
தித்துவ சங்கிரக இராமாயணம்
தாமரா இராமாயணம்
திக்கண்ணா இராமாயணம்
தெரவே இராமாயணம்
தேவி ராமாயணம்
தோஹ இராமாயணம்
நாம இராமாயணம்
நித்தியானந்த இராமாயணம்
நிரோஷ்த இராமாயணம்
பஞ்ச சாம இராமாயணம்—மராத்தி

பட்டி இராமாயணம்
பத்ர இராமாயணம்
பவபூதி இராமாயணம்
பம்ப இராமாயணம்—அபிநவ பம்பர்
பாசுரப்படி இராமாயணம்
பால இராமாயணம்—ஸ்ரீ சங்கரமடம்
பாஸ்கர இராமாயணம்
மகா ராமாயணம்—35000 சுலோகம்
மாணிக்க இராமாயணம்
மேகநாத இராமாயணம்—வங்காளம்
யட்ட காண இராமாயணம்—தெலுங்கு
யசோதவர்ம இராமாயணம்
யோக இராமாயணம்
லகு ராமாயணம்
ஸ்ரீமத் இராமாயணம்
ஸ்ரீ கண்ட இராமாயணம்
ஜகமோஹன இராமாயணம்

இப்படி இராமாயண எண்ணிக்கை கணக்கில் அடங்காது வடமொழியினின்றும், முதல் தழுவல் கம்பராமாயணம்; இராமாயணம் அதிக எண்ணில் உள்ளது, தெலுங்கு இராமாயணங்களே.

கூட்ட வரதராஜகவி இயற்றிய, தஞ்சை மண்ணில் உருவாக்கிய இராமாயணம், தஞ்சையை ஆண்ட ரகுநாத நாயகர் இயற்றிய தெலுங்கு இராமாயணம், தஞ்சையில் எத்தனையோ யட்ச கானம் உருவக்கப்பட்டது. ஸ்ரீமத் ராமாயண கல்ப விருட்சம், ராமாப்யுதம், யட்சகானம் பல; இதேபோல் கன்னடத்தில் நாக சந்திரனின், ராமசந்திர,

சரித புராணம், பதும சரித்திரம் வேறு மொழிகளிலும் உள்ளன.

குமார வான்மீகி போன்ற பன்மொழியிலும் இராமா யணங்கள், கேரள இராமாயணங்கள் (எழுத்தச்சன்), பரத பாகவதம், பால இராமாயணம், வள்ளத்தோல் வால்மீகி, போன்று பாரத நாட்டில் பல்வேறு மாநில மொழியிலும், நேபாலியிலும் சிங்களம், தாய்லாந்து, சீனம், மலேசியா, ஜாகர்த்தா, ஆங்காங் என பல்வேறு நாட்டிலும் இராமா யண மொழி பெயர்ப்பு, வழங்கி வருகின்றன. (சமண பௌத்த ராமாயணங்களும் உள்ளன. இவற்றில் அடிப் படை உறவு முறைகளே முரணாக படைக்கப்பட்டவை.)

''சரிதம் ரகுநாதஸ்ய சதகோடி பரவிஸ்தரம்''

(இராமனின் சரித்திரமானது 100 கோடி சுலோகங்க ளால் அமைந்திருக்கின்றன)

குமர குருபரர் (17நூ) இவர் ஐந்தாண்டு பேசாதிருந்து திருச்செந்தூர் சன்னதியில் பேசப்பெற்றவர். பலநூல் செய் தவர். திருப்பணந்தாள் மடம் நிறுவியர். இவர் இந்தியில் கம்பராமாயணம் சொற்பொழிவாற்ற துளசிதாசர் கேட் டார். துளசிதாசர் இராமாயணத்திற்கும் கம்பராமாயணத் திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.[9]

முதன் முதலாக கம்பராமாயணம் அச்சிடப்பட்டதாக கி.பி. 1843இல், முழு பதிப்பாகச் சுமார் 40 பதிப்புகள் வெளியிடப்பட்டுள்ளது.[10]

இரணிய வதைப்படலம் ஒன்று தவிர ஏனைய கம்ப ராமாயணம் முற்றும், அழிந்துபட்டாலும் கம்பருடைய கவிதா சாமர்த்தியத்தையும் இயற்கை புலமையினையும் காட்ட இரணிய வதைப்படலம் ஒன்று போதுமான சான் றாகும்.[11]

ஸ்ரீபாகவதத்தில் உள்ள பிரகலாத சரித்திரத்தையும், அதை அனுசரித்து எழுதிய ஆந்திர தெலுங்கு பாகவதத்தை யும் கம்பரது இரணியவதை படலம் வென்றுவிட்டது.[12]

அமிர்த ராமாயணம், குயில் ராமாயணம், கம்பரது படைப்பிற்குமுன், ஒளி இழந்து நிற்கக் காண்கிறோம்.[13]

## அடிக்குறிப்பு

1 கம்ப ராமாயணப் பாயிரம் பாடல் 13

2 அபிதான சிந்தாமணி பக்கம் 184 சிங்காரவேலர் தொகுத்தது 1910 கி.பி.

3 தினமணி சுடர் 10-5-1992

4 கம்பராமாயணம் ஆரணிய காண்டம்

5 கம்பராமாயணம் ஆற்று படலம் 10

6 கம்பராமாயணம்-அவையடக்கம் 4

7 கம்பராமாயணம் பாலகாண்டம் 8

8 கம்பராமாயணம் பாயிரம் 20

9 தமிழ்புலவர் அகராதி பக், 128

10 கு. அழகிரிசாமி சக்தி இராமாயண முன்னுரை பக். 13

11 தி. செ. கேசவராயர் 3ஆம் பகுதி கலைக்களஞ்சியம்

12 1. 92. பக். சங்ககால தமிழர் சமயமே கம்பர் சமையம், கிருஷ்ணசாமி அய்யங்கார்
2. உ. வே. சாமிநாதையர்

13 பக். 91. கம்பன் கலை. ஜெகவீரபாண்டியன் 1985

# 3. கம்ப இராமாயணமும் துளசி இராமாயணமும்

'இராமசரிதமானஸ்' துளசிதாஸர் தம்முடைய காவி யத்தை 7 பிரிவாக பிரித்து 7 சோபானம் எனப் பெய ரிட்டார். (கம்பர் 6 காண்டம் என்றதுபோல்) சோபானம் என்ற சொல் காண்டத்தைக் குறிக்கும்.

அதர்மம் தோன்றும் போதெல்லாம் இராமாவதாரம் தோன்றுவதாக துளசிதாஸர் குறிப்பிடுகிறார். இராமன் திருமாலாகவே பிறந்தார். தாயே வேண்டியமையால் குழந்தை இராமனாக ஆனார் என்கிறார்.

நந்தவனத்தில் பூஜைக்கு மலர் கொய்ய இராமன் வருகிறான். சீதையும் தோழியரும் கௌரி பூஜைக்கு பூக்கொய்ய வருகிறார்கள். அங்கு இராமனை சந்திப்ப தாக துளசிதாஸர் கூறுகிறார்.

இராமன் வில்லை யொடித்த பின் சீதை வெற்றி மாலை சூட்டுகிறாள். தோழியர்கள் இராமன் காலை தொட்டு வணங்கும்படி கூறுகிறார்கள். சீதை தயங்கு கிறாள். கைவளைகளில் வைரகற்களும் மோதிரங்களில் இரத்தின கற்களும் உள்ளதால் இராமனைத் தொட்டால் இக்கற்களெல்லாம் அகலிகைப்போல் பெண்களாகி விடு வார்களோ! என அஞ்சுகிறாள்.

குகன் இராமனை படகில் ஏற்ற மறுக்கிறான். காரணம் கல்லைவிட மரம் கடினமல்லவே. படகு பெண்ணாக மாறினால் தன் நிலை? இராமன் இதனை உணர்ந்து கால்களை கழுவி கொள்ள அனுமதி கோருகிறான்.

கதையில் மாந்தர்களை மனித தர்மங்களை மதித்து நடப்பவராக துளசிதாஸர் உருவாக்கியுள்ளார். கம்பரோ, பாத்திரத்தின் இயற்கை குணநலத்தோடு தெய்வீக பாத்திரங்களாக உருவாக்கியுள்ளார். இவர் பக்தரா? கவிஞரா என உணர முடியாதவராக காண்பார். துளசிதாஸர் பக்தராக மட்டுமே காண்பார்,

இலங்கைக்கு போகும் வழியில் சுபேல் என்ற மலையில் தங்கியுள்ளபோது இராமன் சந்திரனில் களங்கம் காண்பது ஏன்? என்கிறார். பூமியின் நிழலென்றார் ஒருவர். இராகு அடித்த அடி என்கிறார் மற்றொருவர். ரதியின் முகம் செய்ய பிரம்மா சந்திரனின் சாரமான பகுதியை எடுத்து விட்டதாக வேறொருவர் கூறுவார். அநுமனோ, சந்திரன் உங்கள் தாஸன், உங்கள் உருவத்தை உள்ளத்தில் ஏந்திய தால் என்கிறார். இவ்வாறு துளசிதாஸர் குறிப்பிடுகிறார்.

அனுமலிங்கத்தை (காசிலிங்கம்) இராமேஸ்வரத்தில்; இராவணனோடு போருக்கு போகுமுன் பூஜை செய்தார் என வால்மீகி கூறுவார்.

பின்பு பூஜை செய்ததாக கம்பரும் துளசிதாஸரும் கூறுவார்கள். காசிபாண லிங்கத்தை யார் வேண்டுமானாலும் பூஜை செய்யலாம். இராமேஸ்வர மணல் லிங்கம் குருக்கள்மார் மட்டுமே செய்வர். காசியில் இறந்தால் முக்தி; இராமேஸ்வரத்தை பார்த்தாலே முக்தி.

## ராம ராம நாதமே, நமக்கெல்லாம் வேதமே

ராம; என்ற இரண்டெழுத்தினால் நன்மையும் செல்வமும் நல்குமே; தின்மையும் மரணமும் இன்றி தீருமே என கம்பரே பாடியமையால் தான் பாரெல்லாம் இராமன் பெயர் சூட்டி வாயெல்லாம் இராமனை அழைப்பதோ; தமிழர்கள் ராமன் இராமசந்திரன் எனப் பலவாரும் தெலுங்கில் இராகவலு இரமாயி என்பதாலும் இந்தியில் இராம்சேட் போன்றும் பல மொழியில் மொழிக்கேற்ப எண்ணற்ற பெயர்கள் இராமனை சூட்டிய பெயர்களாக விளங்குகிறது.

# 4. "நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் கம்பநாட்டாழ்வார் அருளிய பாசுரங்கள்"

(இது வரை யாரும் எடுத்துக்காட்டாத சான்று)

இடங்கொண்ட நெஞ்சத் திணங்கி கிடப்பன—
என்றும் பொன்னி
தடங்கொண்ட தாமரை சூழும் மலர்ந்ததண்
பூங்குடந்தை
விடங்கொண்ட வெண்பல் கருந்துத்தி செங்கண்
தழலுமிழ்வாய்
படங்கொண்ட பாம்பனைப் பள்ளி கொண்டான்
திருப்பாதங்களே

—கம்பர் திருவெழுக்கூற்றிருக்கை 1

அடியார்கள் நெஞ்சத்தில் இணங்கி கிடப்பவனே, மலர்ந்த தாமரை சூழ்ந்த தடாகம், காவிரி பாயும் பூங் குடந்தை (கும்பகோணம் சாரங்கபாணி பெருமாள்) ஆயிரம் தலைக்கொண்ட ஆதிசேஷனாகிய பாம்பை படுக் கையாக கொண்டவனே, ஆயிரம் வாயிலிருந்து தழல் (நெருப்பு) உமிழ்கிறதே, அவற்றின் வாயிலுள்ள வெண் பற்கள் அனைத்தும் விடம் கொண்டவையாயிற்றே. அதன் மூச்சு (கருந்துத்தி) அனல் வீசுகிறதே. அவற்றின் இரண்

டாயிரம் கண்கள் ''செங்கண் தீப்பிழம்பை வீசுவதாக அன்றோ உள்ளது, என்றாலும் உன் திருபாதங்களே எனக்கு கதி அருள்வாயாக. என்று கம்பர் சாரங்கபாணி பெருமாளை இறைஞ்சுகிறார்.

**ஊரா தொழியேன் உலகறிய ஒண்ணுதலீர்**
**சீரார் முலைத் தடங்கள் சேரளவும்—பாரெல்லாம்**
**அன்றோங்கி நின்றளந்தான் நின்ற திருநறையூர்**
**மன்றோங்க ஊர்வன் மடல்.**

—கம்பர் சிறிய திருமடல்[2].

ஓங்கி உலகளந்த திருநறையூர் (நாச்சியார் கோயில்) திருமாலே என் மார்பகத்தை அணைத்து என்னை இறுகத் தழுவும் வரை (தன்னை பெண்ணாகக் கருதி) ஊரார் அறியும்படி உம்மை கருதி நான் மடலேறத் தவறமாட்டேன். என்று திருநறையூர் பெருமாளைக் கருதி மடலேறுகிறார்க் கம்பர்.

**என்னிலைமை யெல்லாம் அறிவித்தால் எம்பெருமான்**
**தன்னருளுமாகமும் தாரானேல்—பின்னைப்போய்**
**ஒன்துறை நீர் வேலை உலகறிய வூர்வன் நான்**
**வண்டறை பூம் பெண்ணைமடல்**

—கம்பர் பெரிய திருமடல்[3]

**மண்ணிற் பொடிப்பூசி வண்டிரைக்கும் பூச்சூடி**
**பெண்ணை மடல் பிடித்துப் பின்னே—அண்ணல்**
**திருநறையூர்நின்ற பிரான் தேர்போகும் வீதி**
**பொரு முறையால் செல்வம் புரிந்து.**

—கம்பர் பெரிய திருமடல்.[4]

என்னிலை எல்லாம் அறிவித்தும் உன்னருளும் அகமும் தராது போனால் பின்னைபோய் அலைகடல் உறை

வோனே, என் உடலெல்லாம் மன்னைப் பூசிக்கொண்டு வண்டுறையும் பூமாலைச் சூடிக் கொண்டு, திருநறையூர் நின்ற பெருமானே. உன் தேரோடும் வீதியெல்லாம் திரிந்து மடலேறுவேன். என்று கம்பர் இறைஞ்சுகிறார்.

திருமங்கை ஆழ்வார் அருளிச்செய்த திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய மடல், பெரிய மடல் ஆகியவற்றில் கம்பநாட்டாழ்வார் அருளிச் செய்த இப்பாசுரங்களையும் சேர்த்து ஸ்ரீமந்நாத முனிகளால் (கி. பி. 823—918 தமிழ்ப் புலவர் அகராதி) ஆழ்வார்கள், ஆச்சார்யர்கள், அருளிச் செய்த திவ்ய பாசுரங்கள் எல்லாம் முறைப்படுத்தப் பட்டது.

ஆழ்வார்கள் ஆச்சார்யர்கள் அருளிச் செய்த பிரபந்த. பாசுரங்களைத் திவ்யபிரபந்தமாக தொகுத்து ஆட்சியில் வைத்தவர் ஸ்ரீமந்நாத முனிகளே.[5]

முதலாம் இராசராசன் காலத்திலேயே (988—1012) வைணவ வழிபாடு தொடங்கி ஆலயங்களில் பிரபந்தம் ஓதுவதற்கு நிபந்தங்கள் செய்யப்பட்டது.

—தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்

ஆகவே கம்பர் காலம் இதற்கு முன்பே 9-ஆம் நூற்றாண்டு என்பது தெளிவு. ஸ்ரீமந்நாதமுனிகள் கம்பராமாயண அரங்கேற்றத்திற்கு முன்னிலை வகுத்தவர் என்பது குறிப்பிடத்தக்கது,

# 5. கம்பநாட்டாழ்வார் அருளிய பிற நூல்கள்

## 3. சரஸ்வதி அந்தாதி

*சரஸ்வதி அந்தாதி மறைந்து விட்டதாக சிலர் எழுதியுள்ளார்கள். அது சரியல்ல. குத்ரோத்காரி-புரட்டாசி 28 நவராத்திரி விழாச் சிறப்பு வெளியீடாக இந்து தமிழ்க் கவிஞர் மன்றம் (ஸ்ரீஜெயந்திர சரஸ்வதி சுவாமிகள் அருளாசியால்) கம்பர் அருளிய சரஸ்வதி அந்தாதி வெளியிடப்பட்டது. (14—10—1983) பழைய பிரதிகளும் கிடைத்துள்ளது.*

வெண்பாவிற் கோர் புகழேந்தி பரணிக்கோர்
சயங்கொண்டான் விருத்தமென்னும்
ஒண்பாவில் உயர்கம்பன் கோவையுலா வந்தாதி
ஒட்டக்கூத்தன்
கண் பாய கலம்பகத்திற்கு இரட்டையர்கள் வசைபாட
காளமேகம்
பண் பாகபகர் சந்தம் படிக்காசலத் தொருவர்
பகரொனாதே[6].

*கம்பர் அருளிய சரஸ்வதி அந்தாதி காப்புகள்.*

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை — தூய
உரு ப்பளிங்கு போல்வாள் என்னுள்ளத்தினுள்ளே
இரு ப்பள் இங்கு வராதிடர்.

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிக மழ்பூந் தாமரை போல் கையும் துடியிடை
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும்செல் லாதோ கவி.

சீர்ந்த வெள்ளிதழ்ப் பூங்கமலாசனத் தேவி செஞ்சொற்
றார்தந்த வெண்மனத் தாமரையாட்டி சரோருக மேற்
பார் தந்த நாதனிசை தந்த வாரணப் பங்கயத்தாள்
வார் தந்த சோதியம் பேருகந்தாளை வணங்குதுமே.
—*சரஸ்வதி அந்தாதி* 1.

*வெண்டாமரை இதழ்களை கொண்ட கமலாசனத்திருந் தருளும் கலா அரசியே! கல்விக்கரசியே! நின் நாதனாகிய திருமாலின் நாபிக்கமலத்தோன், தந்த இசை ஸ்வர; வேதங் களோடு வீற்றிருக்கும் நின் சோதிமிக்க திருவடிகளை வணங்குவோம் என்பதாக. இவ்வாறு 30 அந்தாதி பாக் களும் கட்டளை கலித்துறையால் அமைந்த 96 வகை பிர பந்தங்களில் ஒன்று அந்தாதி, சிறு காப்பியமெனப்படும். கடைச்சீர், முதற் சீராகக் கொண்டது அந்தாதியாகும்.*

*சரஸ்வதி ஞானத்தை அளிப்பவள், அவள் ஆசனம் வெள்ளைத் தாமரை மலர், அவள் உடையோ, வெண்ணிற ஆடை, அருள்பாலிப்பது தூய்மையான வெண்மையான உள்ளத்தை, அதைஅருள வேண்டி சரஸ்வதி அந்தாதி யைக் கொண்டு துதிப்போமாக.*

*இந்து சமயத்தில் ஏராளமாக தமிழ் நூல்கள் உள்ளன. அவற்றுள் ஓர் ஒப்பற்ற நூலாக விளங்குவது சரஸ்வதி*

அந்தாதி என ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அருளாசி வழங்கி இந்நூலை வெளியிட்டுள்ளார்கள்.

இதனைக் கவிச்சக்கரவர்த்தி கம்பர் அருளியுள்ளார். இவ்வரிய நூலின் பொருள் புலவர்கள் மட்டுமே யன்றிச் சாதாரண மக்களும் புரிந்து கொள்ளச் சிறந்த உரையாசிரியர்களான திருவாளர்கள் வை. மு: கோ. சடகோப இராமநுஜச்சாரியார், சே. கிருஷ்ணமாச்சாரியார் ஆகியோர் பல்லாண்டுகட்கு முன்னாமே தெளிவான உரை எழுதியுள்ளார்கள். அவர்களுக்கு தமிழ் உலகம் என்றும் நன்றி காட்ட கடமைப்பட்டுள்ளது, கம்பரது சமயம் வைணவமே என்றும்[7].

## 4. இலக்குமி அந்தாதி

கலைவாணியைப் பாடி அருளிச் செய்வதுபோல் இலக்குமியையும் பாடி அருளினார் எனத் தெரிகிறது. இதன் விபரம் தெரியவில்லை. ஆனால் கம்பர் இயற்றிய நூல் வரிசையில் இவையும் இடம்பெற்றிருப்பது பல்கலை எம். ஏ. தமிழ் பாட புத்தகத்திலும் உள்ளது. என்பது குறிப்பிடத் தக்கது.[8]

## 5. சடகோபரந்தாதி பாயிரங்கள்

ஆழ்வார் கலித்துறை அந்தாதி என்று வழங்குகிறது.

அந்தத்தை ஆதியாகக் கொண்ட இவ்வந்தாதி 100 பாசுரங்களைக் கொண்டது. குருகைநாதன் என கம்ப இராமாயண காப்பு செய்யுளிள்களில் இரண்டாவதாக இடம் பெற்று இப்பாடல் கம்பர், நம்மாழ்வாரை குறித்து பாடியதாக ஆன்றோர் உரைத்துள்ளார்கள். ஸ்ரீஅரங்கனே நம் சடகோபனைப் பாடினையோ? வென; கம்பர் பாடி

அருளியதாக. இச்சடகோபரந்தாதி காப்புகள் தெரிவிக்கின்றன.[9]

கம்பரின் சடகோபரந்தாதி கி. பி. 1820 அச்சிடப்பட்டுள்ளதாக குறிப்பிட்டுள்ளார்.[10]

**தேவிற் சிறந்த திருமாற்குத் தக்கதெய்வக் கவிஞர்**
**பாவிற் சிறந்த திருவாய் மொழிபகர் பண்டிதனே**
**சாவிற் சிறந்த வம் மாறற்குத் தக்க நன்னா வலவன்**
**பூவிற் சிறந்து வாழ்வான் கம்பநாட்டு புலமையனே.**

—பாயிரம்

திருமாலுக்குரிய தெய்வக் கவிஞன், தெய்வத் தன்மையுள்ள கவிபாட வல்லவர், திருவாய் மொழிபாடி அருளிய நம்மாழ்வார்க்கு நல்ல கவிஞரானவர். பக்தி வெள்ளத்தில் மூழ்கிய கம்பநாடாரெனும் வித்வானேயாம்.

பூவிற் சிறந்த கம்ப நாட்டு ஆழ்வாரென கூட்டலும் அமையும். கம்பநாடு—முதலில் இது வெண்ணெயூர் நாடாக விருந்து பின்பு கம்பர் காலத்தில் அவர் பெயரால் மாற்றப்பட்டமையால் கம்பநாடென்றார். இது மழலை ஒத்த இன்பம் பயப்பதால் பைந்தமிழ் என்றார்.

**ஆரணத்தின் சிரமீதுறை சோதியை யந்தமிழாற்**
**பாரணஞ்செய்த வனைக் குருகூரனைப் பற்பலவா**
**நாரணனாமென வேத்தித் தொழக் கவி நல்குகொடைச்**
**சாரணனை கம்பனை நினை வாமுட் களிப்புறவே—**

பாயிரம் 2

வேதத்தின் மேல் விளங்கும் சோதியாகிய மாயோனை, துதித்த நம்மாழ்வாரைப் பாடியக் கம்பரை யாம் உள்ளங் களிக்கும்படி தியானிப்போம். இலக்கண முதலானவை அமைந்துள்ளமையால் அந்தமிழ் என்றார். திருமாலால் தரதக்க யாவும் தாமே தர் வல்லவர் என கம்பர் போற்றுகிறார்.

**நஞ்சடகோபனைப் பாடினையோ வென்று நம்பெருமாள்
விஞ்சிய வாதாரத் தாற் கேட்பக் கம்பன் விரைந்துரைத்த
செஞ் சொலந் தாதி கலித்துறை நூறுந்தெரியும் வண்ணம்
நெஞ்சடியேற்கருள் வேதந் தமிழ் செய்த நின்மலனே.**

—*பாயிரம் 3.*

*வேதத்தை தமிழ் செய்தருளிய நஞ்சடகோபனை பாடினையோ? வென அரங்கர் கேட்டலும். கம்பர் பாடிய அந்தாதியை அறிந்துகொள்ள அருள்வீராக. தம்மை கம்பர் பாடி இருக்க திருப்தியுறாமல் ''சடகோபனை பாடினையோ? என்றது அன்புமிகுதி என்ப*

**நாதனரங்க யைந்துரை யென்ன நற் கம்பனுன்றன்
பாதம் பரவிய பைந்தமிழ் நூறும் பரிவுடனே
யோதும் படி யெனக் குள்ளந் தனையருளேதரிய
வேதம் தமிழ் செய்த மெய்ப் பொருளேயிதென்
விணணப்பமே.** —*பாயிரம் 4.*

*அரங்கன் கட்டளையால் கம்பர் உம்மை துதித்த இவ் வந்தாதியை, அறியும்படி அருள்வீராக, எத்துணையோ புலவர் தோன்றினும் இராமாயணத்தை தமிழில் செய்த புண்ணியத்தை இவ்வொருவரே செய்தமையால் நற் கம்ப னென்றார். இது மழலை ஒத்த இன்பம் பயப்பதால் பைந்தமிழ் என்றார்.*

### கம்பர் அருளிய சடகோபரந்தாதி

**வேதத்தின் முன் செல்க மெய்யுணர்ந்தோர் விரிஞ்சன்
முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின் முன் செல்க குணங்கடந்த
போதக் கடவெங்கள்தென் குரு கூர்புனிதன் கவியோர்
பாதத்தின் முன் செல்லுமே தொல்லை மூலப் பரஞ்சுடவே.**

*முதற் பாடல் சடகோபரந்தாதி கம்பர்*

திருமாலின் எல்லை கடந்த அப்பாலும் பரவி நின்றது சடகோபரது பாடல் என்ப. விரிஞ்சன் முதலோர் கோதற்ற ஞான கொழுந்தின் பாதத்தின் முன் செல்க. ஞானதாற் பெற்ற அறிவுடையார் என்ப. திருவாய் மொழியை கற்றவர்களுக்கு நற்குணங்களையும் தந்தருளுகின்ற தென் குருகூர் புனிதனை போற்றும். சடகோபரந்நாதி 100பாடல்கள் கொண்டுள்ளன.

## 6. ஏர் எழுபது

ஏர் எழுபது, எழுபது பாடல்களைக் கொண்டது. விவசாயிகளை, உழவர்களை. உழவு கருவிகளை சிறப்பிக்கும் இப்பாடல்கள் சடையப்ப வள்ளலை மிகவும் கவர்ந்ததாக கூறுவார்கள். கம்பர் கவி சக்கரவர்த்தியாவதற்கு ஏர் எழுபது திருக்கை வழக்கமே காரணம் என்பர். இவைகளை சிறிது காண்போம்.

**ஆழித் தேவர் கடலானார் அல்லாத் தேவராம் அம்பலத்ததிர்**
**ஊழித் தேவர் தாங்கூடி உலகங் காக்க வல்லாரோ?**
**வாழித் தேவர் திரு மக்கள் வையம் புரக்கும் பெருக்காளர்**
**மோழித் தேவர் பெருமைக்கு வேறுந்தேவர் கூறேனே.**

—பாயிரம் 7.

**நீற்றேனும் மலரேனும் நெடியேனும் என்கிற**
**தோற்றாளர் இவராலே தொல்லுலகம் நிலை பெறுமோ?**
**மாற்றாக காவேரி வளநாடர் உழுங் கலப்பையை**
**உற்றாணி உளதாயின் உலகு நிலைக் குலையாதே.**

கம்பர்—ஏர்—எழுபது 4.

உலகத் தேவரெல்லாம் கூடினும் மோழித் தேவர் பெருமைக்கு எதிரில்லை என்பதாக கலப்பை ஊற்றாணிக்கு (கார்) மாற்றாணி இல்லை; என்பதும் உலகம் இதனால்

தான் அமைதி பெரு ம்என்றும் மோழிபிடிக்கும் விவசாயி யின் பெருமைக்கு ஈடில்லை என்றும் கம்பர் சிறப்பித் துள்ளது கம்பரின் மறுபக்கத்தை தரிசிப்பதாகும்.

தென்னவன் முடி சேரன் முடி தேங்கு பொன்னி நாடன் முடி
கண்ணன் முடி கடல்சூழ்ந்த காசினியோர் தங்கள் முடி
இன்ன முடி அன்றயும் மற்றெடுத்துரைத்த முடிகளெல்லாம்
மன்னு முடி வேளாளர் வயலின் முடி கொண்டன்றே,

—கம்யர் ஏர் எழுபது

விவசாயின் வயலின் நாற்று முடிக்கு ஈடு மன்னன் முடியோ மற்ற முடிகளோ பொருட்டல்ல என்பதாம். நாற்று முடியேபிற எந்த முடிகளுக்கும் ஆதாரமானது என்கிறார் கம்பர்.

தொழுங்குலத்தில் பிறந்தானென் சுடர் கொடிமன்னவர்
எழுங்குலத்தில் பிறந்தாலென் இவர்க்குப்பின்
வணிகனெனும்
செழுங்குலத்தில் பிறந்தாலென் சிறப்புடையார் ஆயின்
உழுங்குலத்தில் பிறந்தாரே உலகுய்ய பிறந்தார்

—ஏர் எழுபது

உழுங்குலமே சிறப்பு என்பதாக சிறப்பிக்கும் ஏர் எழுவது. உழுங்குலத்தை உயர்த்தி பாடியதாகும்.

ஏர் எழுபது பற்றி தொண்டை மண்டல சதகமும் சோழ மண்டல சதகமும் பாடியுள்ளது.

## 7. திருக்கை வழக்கம்

யாமர் புகழ் இயல் கம்பநாடன் இராமரோடும்
பாமாலை சூட்டும் குலமுடையானைப் பாடிபுரக்கக்
கோமாறன் இட்ட பொன் சிங்காதனம் பெற்ற கொற்றவனை
தோமாலை அச்சம் தவிர்ப்பான் வெண்ணெய்
திரிகர்த்தனே.

—பாயிரம் 3.

புரந்தர தாரு புதுவை சடையன்
இருந்த வியலூர் தெற்கு மேற்கு—பரந்த பொன்னி
ஆற்று நீரால் விளையும் அப்பால் கிழக்கரிசி
மாற்று நீரால் விளையுமாம்.

## 8. காஞ்சி புராணம்

## 9. காஞ்சி பிள்ளைத் தமிழ்

## 10. காஞ்சி குறவஞ்சி

இந்த மூன்று நூட்களைப் பற்றி கம்பர் ஆய்வடங்கள் குறிப்பிடுகிறது [11] வேறு விபரமில்லை.

கம்பர் தன் வாச தேசமாகிய காஞ்சி நகரத்திற் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள பெருமாள் மீதுண் டாகிய பக்தி பரவசத்தால், காஞ்சி பிள்ளைத்தமிழ் காஞ்சி குறவஞ்சி காஞ்சி புராணம் முதலிய பல பிரபந்தங்களியற்றி னார். என்று தெரிகிறது என்று கூறுகிறது.[12]

### 11. செம்பொற் சிலை எழுபது

இது வன்னிய பூபதிகளுடைய சிலைகளைப் போர் படைகளை சிறப்பிக்கும் புரட்சி படைப்பாகும். எட்டு பாயிரங்களை கொண்டதாக எழுபது பாக்கள் விவரித்து பாடுவதாக கம்பர் வரலாறு கூறுகிறது.[13]

வில்லையும் அம்பையும் வீரத்தையும் போற்றி செம்பொற்சிலை எழுபது எனும் சீரிய நூலைக் கம்பர் பாடியுள்ளார் என்று புலவர் செந்துரை முத்து குறிப்பிடுகிறார்.[14]

## 12. மும்மணிக்கோவை

இப்பெயரில் பல புலவர்கள் பாடிய நூல்கள் உள்ளன. கம்பர் இயற்றியதை சில பெரியோர்கள் படித்ததாக கூறினார்கள். மா. இராசமாணிக்கனார், சோழன் கம்ப நாட்டை கம்பருக்கு கொடுத்தான் அதற்கு நன்றியாக மும்மணிக் கோவை பாடினார் என்கிறார்.

## 13. சோழர் குறவஞ்சி

சரபோந்திர குறவஞ்சி, பல குறவஞ்சி நூல்களை குறிப்பிடுகிறது. அதில் கம்பர் இயற்றிய சோழர் குறவஞ்சி என்று காணப்படுகிறது. வேறு விபரம் கிடைக்கவில்லை.

புலவர் சா. சிவசாமி அவர்களும் தம் 'கம்பர் ஆய்வடங்கள்' நூலில் சோழர் குறவஞ்சி பற்றி குறிப்பிடுகிறார்.

## 14. தனிப்பாடல்கள்

கம்பர் சடையப்ப வள்ளலை சிறப்பித்து பாடியது.

**மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று**
**வீட்டளவும் பால் சொறியும் வெண்ணெயே நாட்டில்**
**''அடையா நெடுங்கதவும் அஞ்சேல் என்ற சொல்லும்''**
**உடையார் சடையப்பனூர்.**

மாலை நேரத்தே சடையப்ப வள்ளலுடைய மாட்டு மந்தைகள் குட்டை நீரிலே நீந்தியாடும்போது வரால்மீன்கள் எருமை மடியை மோதுமாம். தன் கன்றுதான் என்று கருதி எருமை அங்கிருந்து சடையப்ப வள்ளல் வீட்டு தொழுவம் வரை பால் சொறிந்தே செல்லுமாம். அந்த வள்ளல் வீடு அடையாத,மூடாத நெடுங்கதவு கொண்டவை

அஞ்சல் என்ற சொல்லும் உடையான், என் சடையன் என அவரது வெண்ணெய்நல்லூரை பெருமைபடபாடுபடுகிறார்.

பதினென் குடிமக்களில் ஒருவராக மாமண்டூர் கருமான் சிங்கனை பெருமைபடுத்தும் சமத்துவ நோக்கம் பற்றி கம்பர் அருளும் காட்சி.

**ஆரியான் ஆழிஅயன் எழுத்து ஆணி என்பார்—**
**கோழியான் குன்று ஏறிய வேல் என்பான்—**
**பூழியான்**
**அங்கை மழு என்பான் அருள் பெரிய மாமண்டூர்**
**சிங்கன் உலை கலத்தில் சென்று.**

—*கம்பர் தனிப்பாடல்*

**திருமால் சக்கரம் செய்து தர வேண்டுவார்**
**பரமன் மழுபடையை அமைத்துத் தரதூண்டுவார்**
**பிரமன் எழுத்தாணி வடித்துத் தரவேண்டுவார்**
**முருகன் கை வேலை வடித்துதர சீண்டுவார்**

என் சொல்லை நம்பாதவர்கள் சிங்கன் உலை களத்தே சென்று காணுங்கள் என எதார்த்த நிலையே, சமத்துவம் என நிரூபிக்கிறார். நான்கு தேவர்களைக் கொண்டு சிங்கன் உலைக் களத்தே காக்க வைத்து சிங்கனை பெருமை படுத்தும் கம்பரின் பெரிய மனம், அது அவரது கவியிலே வெளிப்படுகிறது. அது மட்டுமா?

பதினென் குடிமக்களில் ஒருவரான சலவைத் தொழிலாளி சீராமனை புகழ்வதை காணுங்கள்.

**சிரம் பார்த்தான் ஈசன் அயன் தேவிதனைப்**
**பார்த்தான்**
**கரம் பார்த்தான் செங்கமல கண்ணன் உரஞ்சேர்**
**மலை வெளுத்த திண் புயத்து வண்ணான் சீராமன்**
**கலை வெளுத்த நேர்த்திதனைக் கொண்டு**

—*கம்பர் தனிப்பாடல்*

திண்மை மிருகபிலை மலையும் வெளுக்கும் வல்லவராக சலவைத் தொழிலாளி சீராமனை சீர்தூக்கி பாராட்டு கிறார்.

சீராமன் வெளுத்த வெண்மையால் கங்காதரனான பரமன், வெள்ளிய கங்கை விலகிவிட்டாளா எனப் பார்த்தார். அயன் தேவியைப் பார்த்தார். (பிரமன் சரஸ்வதியை பார்த்தாராம்.) வெண்ணிற ஆடையோ எனப் பார்த்தார். செங்கமலக்கண்ணனும் தன் கரம் பார்த்தார். தன் கை "வெண் சங்கோ" எனப் பார்த்தார்.

சீராமனும், சிங்கனும், இலக்கியத்தில் வாழ்ந்து வருவதே கம்பனருள் என விளங்கும்.

கம்பரின் எளிமைக்கும் சமத்துவத்திற்கும் மற்றொரு எடுத்துக்காட்டு. பதினென் குடிமக்களில் ஒருவரான சவர தொழிலாளி தம்பிபுகான் என்பவனை சிறப்பித்து அருளுகிறார்.

**ஆரார் தலை வணங்கார் ஆரார்தாங் கையெடார்**
**ஆரார் தான் சத்திரத்தில் ஆறாதார்—சீராரும்**
**தென் பூளியூர் மேவுஞ் சிவனருள் சேர் அம்பட்டத்**
**தம்பி புகான் வாசலிலே தான்.**

—கம்பர் தனிப்பாடல்

**சிதம்பரம் தம்பி புகானுக்கு தில்லை ஆடலரசு**
**அருள் உண்டாம்**
**அவனது வாயிற் சென்று தலை வணங்காதார்**
**யார் யார்?**
**அவனது கத்தி மழுப்பினால் சுகம் காணாதார்**
**யார் யார்?**
**அவனது எதிர் சென்று தலை குனியாதார் யார் யார்?**
**அவனது கைப்பட்டவுடன் உடன் தன் கையைத்**
**தூக்காதார் யார் யார்?**

என்கிறார்.

கம்பரது உள்ள பண்பும் தெய்வ அன்பும் சிந்தித்துப் பார்க்க நன்கு விளங்கும்.

**சோழ நாட்டு எல்லையை சுட்டி**

கடல் கிழக்குத் தெற்குக் கரையொரு வெள்ளாறு
வடதிசை யிற் கோட்டைகரையாம்—வடதிசையில்
ஏனாட்டுப் பண்ணையிருபத்து நாற்காதம்
சோனாட்டுக் கெல்லை யென சொல்

—*கம்பர் தனிப்பாடல்*

கிழக்கு எல்லை கடல்
மேற்கு எல்லை கோட்டக்கரை
தெற்கு எல்லை வெள்ளாறு
வடக்கு எல்லை ஏனாட்டுப்பண்ணை

24 காதம் தூரம் நாட்டு எல்லை. 1 காதம் 10 மைல் (17-50 கி.மீ.)

**பாண்டிய நாட்டு எல்லை** 56 *காதம்*

வெள்ளாறது வடக்காம் மேற்குப் பெருவழியாம்
தெள்ளார் புனற் கன்னி தெற்காகும்— உள்ளார்
ஆண்ட கடல் கிழக்காம் ஐம்பத்தாறுகாதம்
பாண்டி நாட்டெல்லை பதி

—**கம்பர்**

**சேர நாட்டு எல்லை** 80 *காதம்*

வடக்கு திசை பழனி வான் கீழ் தென்காசி
குடகு திசை கோழிக் கோடாம்— கடற்கரையின்
ஓரமோ தெற்காகும் உள் என்பதின் காதம்
சேரனாட்டு எல்லையெனச் செப்பு.

—**கம்பர்**

தொண்டை நாட்டு எல்லை 20 காதம்

**மேற்குப் பவளமலைவேங்கட நேர் வடக்காம்**
**ஆர்க்கும் உவரியணி கிழக்கு—பார்க்குளுயர்**
**தெற்குப் பினாகிதிகழ் இருபதின் காதம்**
**நற்றொண்டை நாடடெனவே நாட்டு**

**—கம்பர்**

கம்பரின் தனிப்பாடல்கள் இவை மட்டுமல்ல.

## 15. ''இராமாயண உரைநடை''

## 16. ''தமிழ் அகராதி''

கம்பர் சடகோபரந்தாதி சரசுவதி அந்தாதி இலக்குமி அந்தாதி காஞ்சிபுராணம் காஞ்சி பிள்ளைத் தமிழ், சோழர் குறவஞ்சி, திருக்கை வழக்கம் நூலையும் ஒரகாரதியும் இராமாயணத்தை உரைநடையிலும் இயற்றினார் என்று கூறுகின்றனர். [14]

## 17. தொண்டை மண்டல சதகம்

இந்நூலையும் கம்பர் இயற்றியதாக,பதுமனார் தமிழ்த் துணைவன் 10 வகுப்பு பாடநூல் 23ம் பக்கம். ஜெயக்கொடி பதிப்பகம் 1994, கூறுகிறது. ஆனால் நூல் பற்றி விபரம் ஏதுமில்லை.

### அடிக்குறிப்பு

1. நாலாயிர திவ்யபிரபந்தம் திருவெழுக் கூற்றிருக்கை :

2. நாலாயிர திவ்யபிரபந்தம் சிறியமடல்

3. நாலாயிர திவ்யபிரபந்தம் பெரிய மடல்.

4. 1. குரு பரம்பரை 2. நாலாயிர திவ்யபிரபந்தம் 3. மற்றும் வைணவ ஏடுகள்.

5. காஞ்சி ஸ்ரீமடம் சார்பாக வெளியிட்ட சரஸ்வதி அந்தாதி முன்னுரை.

6. சரஸ்வதி அந்தாதி பக்.19

7. 1. தமிழ்நாடு பாடநூல் நிறுவனம் எம். ஏ. பாட நூல் 1991 2, V.R.கண்ணன் இலக்கிய வரலாறு, இந்தியபிரசார சபா வெளியீடு.

8. 1. ஆழ்வார் கலித்துறை அந்தாதி 2. வித். கி. வேங்கிடசாமி ரெட்டியார் பதிப்பித்த நாலாயிர திவ்யபிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது. பதிப்பு 1973.

9. கம்பநாடார், செல்வ கேசவராயர்.

10. புலவர். சா. சிவசாமி, கம்பர் ஆய்வடங்கள் 1974.

11. ச. த. மூர்த்தி கவிச்சக்கரவர்த்தி கம்பர்.

12. பண்டித அ.கி.நாயுடு கம்பர் வரலாறு.

13. கம்பன் ஒரு திறனாய்வு பக். 70.

14. புலவர் மாரிமுத்து கம்பர் பக்.

# 6. கம்பர் காலம் காண இடையூரான தனிப்பாடல் திரட்டுகளில் சில

ஓங்கிய செந்தமிழ் தாதற்கு அடிமை அவ்வூர் அதனால்
நாம்கவி சொல்வதுமில்லை என்றே கம்பநாடன்
சொல்ல
ஆங்கவன் ஏறும் சிவிகை சுமந்து அடப்பையிட்டும்
தாங்கவி கொண்டது கூவம் தியாக சமுத்திரமே.

கம்பரைப் பற்றி யாரோ பாடியதாக உள்ள இப்பாடல் அபிதான சிந்தாமணி பக்கம். 344 உள்ளது. இதையே ஒட்ட கூத்தர் பாடியதாக, மீனாட்சி வெளியீடு தனிப் பாடல் திரட்டு பக்.70ல் உள்ளது. இதையே புகழேந்தி பாடியதாக, க. சு. பிள்ளை தனிப்பாடல், 57ல் உள்ளது. தவிர தாதன் ஊரையே கம்பர் பாட மறுத்ததாக இப் பாடல் கூறுகிறது, ஆனால் தாதனையே கம்பர் பாடியதாக, நாவலர் சரிதை பக். 75ல் உள்ளது. இவைகள் எத்துணை முரண்பாடுகள் என்பது ஈண்டு அறிக. கூவம் ஊரை கம்பர் பாட மறுத்தார் என்று கூத்தரோ, புகழேந்தியோ, பாடியிருக்க முடியாது என்பது அறிக.

''அடைந்தாரை காக்கும் அகளங்கா துங்கா
நடந்தாயோ நாலாறு அடி''

என்ற பாடலை கூத்தர் பாடியதாக தமிழ் நாவலர் சரிதை பக். 106லும் அபிதான சிந்தாமணி பக். 289லும் உள்ளது. இதையே கம்பர் பாடியதாக மீனாட்சி தனிப்பாடல் திரட்டில், பக். 85லும் காசு பிள்ளை தனிப்பாடல் திரட்டு, பக். 78லும் உள்ளது. ''அகளங்கன்'' என்பது ஒரு சோழனைக் குறிக்கும் அவனுக்கும் கூத்தருக்கும் அல்லது கம்பருக்கும் ஆதாரமின்றி வந்த பாடல், இருவர் பாடிய தாக வெளியிடுவது சரியா?

''இன்றல்லோ கம்பன் இறந்தான்'' என்று ஒரு பாடல் இதை கூத்தர் பாடியதாக, மீனாட்சி தனிப்பா, பக்.55லும், கா. சு. பிள்ளை தனிப்பா, பக். 50லும் இருக்க, இதை வாணிதாதன் பாடியதாக, தமிழ் நாவலர் சரிதை, பக். 89லும் தமிழ் தந்த கவி அமுதம், பக். 50லும் இருப்பது எப்படி?

''தினை விளைத்தார்'' என்ற பாடலும் ''அரச குலதிலகன்'' என்ற பாடலும். குறையுளார் எங்கிறார்'' என்ற பாடலும் முறையே சேர, சோழ, பாண்டியன் மூவரும் ஏகம்பனைப் புகழ்ந்து பாடுவதாக தமிழ் நாவலர் சரிதை, பக். 128லும் இதே மூன்று பாடல்களும் கம்பர் பாடு வதாக மீனாட்சி தனிப்பா, பக். 72லும் இருப்பது என்ன அறியாமை.

''மா வுறங்கின புள்ளுறங்கின'' என்ற பாடலை கூத்தர் தமிழ் நாவலர் சரிதை, பக். 114ல் பாடுகிறார். இதையே கம்பர் மீனாடசி தனிப்பா. பக். 77லும், கவி சக்கரவர்த்தி கம்பர் என்ற நூலிலும் பாடுவதாக உள்ளது சரிதானா?

''நெற்படி விளைக் கழனி'' என்ற பாடலை, கம்பர் வீட்டு வேலைக்காரி பாடினாளாம் மீனாட்சி தனிபா. பக். 102 இதையே கம்பரும் பாடியதாக நாவலர் சரிதை,

பக். 85ல் உள்ளது. இவ்வாசிரியர் இது பற்றியோ, வேலைக்காரி பற்றியோ, விபரம் தருவார்களா?

மேலும் மோசமான அபத்தங்களை அறிவோம்.

''வாய்த்த வயிரபுரம் மகாளியே'' என்ற பாடல். பொய்யா மொழி பாடியதாக சாசனாதாரம் உள்ளது [1] இப்பாடலைக் கம்பர் பாடியதாக த. ச. மூர்த்தி கவிசக்கரவர்த்தி கம்பர் பக். 23 விநோதரச சமஞ்சரி, அபிதான சிந்தாமணி இப்படி 7 நூலில் மாறுபடுகிறது.

''தேரையர் செவ்விளநீர் உண்ணாபழி சுமப்பர்''என்ற பாடலை. சிமான் சீனக்கன் அந்தபுரத்தில், கட்டிலில் பொய்யாமொழி படுத்திருக்க கணவன்தான் என்று சீனக்கன் மனைவி பக்கத்தில் படுத்துக் கொண்டாளாம், விழித்த பொய்யா மொழி, திடுக்கிட்டு பாடினாராம் [2] இதையே சேரன் மனைவியோடு கம்பர் படுத்து விட்டு பாடினாராம் [3] இதே பாடலை சோழன் மனைவியிடம் கம்பர் பாடினதாக [4] மூன்று மனைவியரிடம் இரு கவிகள் பாடியதாக கொஞ்சமும் சிந்தனையற்ற செயல் அல்லவா? இது,

''வாசமலர் மடந்தை'' என்ற பாடலை பொய்யா மொழி பாடியதாக அபிதான சிந்தாமணி 1209 பக்கம். கம்பர் பாடியதாக மீனாட்சி தனி பாடல் பக். 70.

''மன்னனும் நீயோ என்ற பாடலைக் கம்பர் பாடியது இதில் ஒரு அடி மட்டும் இரு நூலில் மாறி உள்ளது. மண்ணுலகம் இவ்வளவோ? என்கிறது நா. சரிதை பக். 79. வளநாடும் உன்னதே என்கிறது கலையரசி தனிபா. பக். 80.

''மாங்குயிலால் வல்லி'' என்ற பாடலை கூத்தர் காங்கேயன்மேல் பாடியதாக. காசுபிள்ளை தனி பா.

பக். 50. (12நூ) கூத்தர் மாணாக்கர் பாடியதாக நாவலர் சரிதை பக். 114. (12 நூ) இதையே கம்பர் பாடியதாக மீனாட்சி தனி பாடல் பக். 83. (9 நூ) இதையே தஞ்சை வாணன் பாடியதாக தமிழ் நாவலர் சரிதை பக். 159 (13நூ) கவிகளையும் காலத்தையுங்கூட மதிக்காதது சகிக்க முடி கிறதா? யோசியுங்கள்.

"அலங்கணி மார்பு" என்ற பாடலை, ஏகம்பவாணன் தாதி பாடியதாக த. நாவலர் சரிதை பக். 154. கம்பர் பாடியதாக கா. சு. பிள்ளை தனி பா, பக்கம். 82. இப்படி ஏராளம். இவைகளை வைத்துக்கொண்டு எப்படி கவி களின் காலம் கணிக்க முடியும். எனவே தான் கம்பர் காலம் காண இவைகள் இடையூறானவை என்கிறோம். இறுதியாக மேற்படி பாடல்களுக்குரிய கவிகள் காலம் காண்போம்.

| | | |
|---|---|---|
| 1. | கம்பர் காலம் | கி.பி. 840— 920 கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே |
| 2, | வாணியதாதன் | கி.பி. 1070—1118 நவலர் சரிதை |
| 3. | ஒட்டகூத்தர் | கி.பி. 1118—1163 (மூவருலா |
| 4. | தஞ்சைவாணன் | கி.பி. 1196—1266 நாவலர் சரிதை |
| 5. | பொய்யாமொழி | கி.பி. 1268—1311 செந்தமிழ் இதழ் |
| 6. | புகழேந்தி | கி.பி. 13 நூ தமிழ் புலவரகராதி |
| 7. | ஔவை | கி.பி. 12 நூ தமிழ் புலவரகராதி |
| 8. | சீனக்கன் | கி.பி. 13 நூ செந்தமிழ் செல்வி |

இப்படி ஐந்து நூற்றாண்டுகளில் வாழ்ந்த புலவர்களை ஏக காலத்தில் வாழ்ந்ததாக கண்ணையும் கருத்தையும்

குருடாக்கும் தவறானவைகளை சம்பந்தப்பட்டவர்கள் இனியேனும் திருத்தி வெளியிடுவார்களா?

ஒரு பாட்டில் வரும் "புதுமகளை" பொதுமகள் என்றும்; "தோற்பை (தோல்பை) என்பதை தோப்பு என்றும்; காளிம்பன் என்பது செல்வந்தனைக் குறிக்கும். நிறை மேய்ப்பவனாகவும்; "அண்ணல்" திருவாலி, அணி என்ற பாவலரை நகை செய்யும் தட்டான் என்றும் தவறாக பொருள் கொள்ளப்பட்டுள்ளது மட்டுமன்று. இல்லாத சொல்லுக்கு தவறான பொருள் கூறியும் சில நூல் உள்ளன. இவைகள் களையப்பட வேண்டியது அவசியம்.

நடக்கில் அன்னமாம் என்று பாட்டு (9 நூற்றாண்டில் கம்பர் தம் மனைவியாகப் போகும் நிகர்த்த வல்லியைப் பாடுகிறார்.) இதற்கு தவறான பொருள் தரப்பட்டுள்ளது.

—நாவலர் சரிதை 81 பக்கம்.

தவிர இப்பாடலை எந்த சம்பந்தமும் இல்லாத 18ஆம் நூற்றாண்டை சேர்ந்த சுப்பிர தீபக் கவிராயர் பாடியதாக உள்ளது. —கலையரசி தனிப்பாடல் 122 பக்.

இவைகளிலிருந்து இப்பாட்டுக்களை கொண்டு எந்த முடிவுக்கும் வர இயலாது என்பது நிச்சயம்.

கம்பர் ஆயிரம் பொன்னுக்குத்தான் கவி பாடுவார் என்றும் "காசுக்கு கம்பன்" என்றும் கூறுவர். இது சரியா பார்ப்போம்.

ஒரு பெண் 500 பொன் கொடுத்தாள் என்பதற்காக கீழ்க்கண்ட பாடலை கம்பர் 2அடி, பாதி பாடினாராம்.

"தண்ணீரும் காவிரியே" என்பது அப்பாட்டு. மீதி பாடலை ஔவை பாடினாராம். கூழுக்கு,

கா. சு. தனி. 9 பக்கம்

இதே பாடலை பொய்யாமொழியும் ஔவையும் பாடிய தாக, த. நா. சரிதை 32 பக்கம், ஆக 500 பொன்னுக்கு பொய்யாமொழி பாடியதாக உள்ளது.

கம்பர் காசுக்கு பாடுபவர் அல்ல, என்பதை பதினென் குடிமக்களில் விவசாயி, சலவை, சவர, கருமான், தொழி லாளிகளை பாடினாரே. அதிலிருந்து தெரிந்து கொள்ள லாம். விவசாயிகளையும் ஏர் கருவிகளைப்பாடும் கவிஞர் காசுக்குப் பாடவில்லை என்பது விளங்கும்.

மேற்கண்ட பாடல்கள், தனிப்பாடல் திரட்டுக்களான, சில நூல்களில் கம்பர் அருளியதாக உள்ளது. தவிர இன்னும் பல பாடல்கள் யாரோ பாடியதை கம்பர் பாடின தாகவும், கம்பர் பாடின பல பாடல்களை யாரோ பாடின தாகவும், ஒரே பாடலைப் பலர்ப் பாடியதாகவும் உள்ளது, வருந்தத்தக்கது மட்டுமல்ல. அது புகழுக்குரிய கவிச் சக்கரவர்த்திகளை அவமதிப்பதாகவும் உள்ளது.

வரலாற்று ஆராய்ச்சிக்கும் இலக்கிய ஆராய்ச்சிக்கும் பயனுள்ள நூல்களில் காணப்படும் குறைபாடுகள் கம்பர் காலத்தை நிர்ணயிக்க இடையூரானது என்பதை அறிந்து கொள்வோம்.

## அடிக்குறிப்பு

1. தமிழ் நாவலர் சரிதை சாசன எண் A. R. No. 254, 225, 256 Of 1912
2. தமிழ் நாவலர் சரிதை பக். 68
3. கா. சு. பிள்ளை தனிப்பாடல் பக். 87
4. கலைச்செல்வி தனிப்பாடல் பக். 79

# 7. கம்பர் காலம் காண . இடையூரான சடையப்பவள்ளல்கள் அறுவர்

## 1வது சடையப்ப வள்ளல்

சோழ வளநாட்டில் காவிரி வடகரையில் உள்ள, தற்போது கதிராமங்களமென வழங்கும், வெண்ணெய் நல்லூரில் கார் காத்த மரபில் தோன்றிய சங்கரன் மூதலியார் மகனார் சடையப்ப வள்ளல்தான், இராம காவியம் தமிழில் இயற்றக் கம்பருக்குப் பெரிதும் உதவி யமையால், சர ராமன் எனவும், குந்திரி கர்த்தன் எனவும் சிறப்புப் பெயர் பெற்றவராவார். இவரது தந்தையின் பெயர் சங்கர முதலியார், இவரது சகோதரர் கண்ணப்ப முதலியாரை, இணையாரா மார்பன் எனவும் வழங்கப்படு கிறது. இவரது மகன் மகா தியாகி சேதிராயன் எனப் படும் [1]

கம்பர் ஏர் எழுபது பாடி அரங்கேற்றம் செய்தபோது இந்தச் சேதிராயனைப் பாம்பு கடித்து விஷம் ஏறிட, இதைக் கூறினால் அரங்கேற்றம் தடையாமெனக் கருதி இருக்க, இதைக் கம்பர் அறிந்து நீக்கமடைய செய்தாராம்.

''அழுவதும் கொண்டு புலம்பாது
நஞ்சுண்டது மறைத்தே
ஏரெழுபதுங் கொண்டு புகழ்கம்ப—
வாணன் எழுப்ப......[2]

''பாவலர் தாம் ஏரெழுபது ஓதி
அரங்கேற்றும் களரிலே கரிவிடநாகங் கடிக்குங்கை[3]

இதனால் ஏரெழுபது திருக்கை வழக்கம், கம்பர் கவிச் சக்கரவர்த்தியாவதற்குமுன் இளம் வயதிலேயே அரங் கேற்றம் நடந்துள்ளதாக அறியலாம். அப்போது சடையப் பர் தொடர்பு உள்ளது என்பதற்கு மகா தியாகி சேதிராய னுக்கு பாம்பு கடித்ததாக பாடல் 57ன் கருத்தும் நம்பும்படி யாக உள்ளது.

இடைக்கால சோழராட்சியின் முதலாவது சோழன் சுராதித்த சோழன் கி.பி.826—850 என்றுதான் வரலாறு தொடங்கவேண்டும். இவனது மகன் விஜயாலய சோழனாட் சியைத்தான் கி.பி. 850—871 என்று வரலாறுகள் துவங்கு கிறது. அப்போது காஞ்சி பல்லவ மன்னன் தந்தி வர்மனின் மகன் நிருபதுங்க பல்லவன் இவனது தம்பிகள் கம்பவர்ம பல்லவன் மாற்றாந்தாய் மகன், அபாரஜித பல்லவன், பாண் டிய நாட்டில் குமார பரசக்கர கோலாகலப் பாண்டியனை அடுத்து ஸ்ரீவல்லப பாண்டியன். அடுத்து வரகுணவர்ம பாண்டியன் கி. பி. 862—895. சேரநாட்டில் தாணு ரவி ஆட்சி நடைபெறுகிறது, இவனுடைய ஒரு மகளை, விஜயாலயன் மகன் முதலாம் ஆதித்தனது மகன் பராந்தக னுக்கு மணம் முடித்தான் ஆதித்தனோ! நிருபநுங்கன் மகளையும் மணந்தவன்: இக்கால கட்டத்தில் கம்பவர்மன் நிருபதுங்கனின் மேற்பார்வையில் இளவரசனாக தென் னாற்காடு காவலனாக இருந்தான். சேர சோழ பாண்டிய பல்லவ மன்னர் காலம் வரலாற்றை அடிப்படையாக கொண்டது.[4] காஞ்சி பல்லவ வம்சத்து கம்பவர்மனின் 19ஆம் ஆட்சி ஆண்டு (கி.பி. 889) கல்வெட்டு ஒன்று திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் ஆலயத்தில் உள்ளது.[5] ஆகியோர் காலத்தில் வாழ்ந்த சடையப்பர் என்பதை,

கம்பவர்மன் (கி. பி. 870—912) காலத்தில் சடையன் என்ற ஒரு வள்ளல் கோடி நெற்கொடையளித்தான் என்கிறது செந்தமிழ் இதழ்[6] நெற்கொடை பற்றி இரு கல்வெட்டு கூறும் என்றும் இதனை உத்தம சோழனின் செப்புபட்டயம் கூறும் என்கிறது.[7] நாம் செப்பு பட்டயம் பெற்று பரிசோதித்தோம் 500 காடி நெல் ஒரு நிபந்தம் விஷய மாக இருந்தது. இலங்கை விஷயமாக தேடி வருகிறோம். அவை சென்னை பொருட்காட்சிசாலையில் உள்ளது உத்தம சோழன் பெயரை கிரந்த எழுத்தினால் பொறிக்கப்பட்ட காசும் அங்குள்ளது.

ஈழ நாட்டு வறுமையைப் போக்க "ஆயிரம் கப்பல் நெல்" கொடுத்தார் சடையப்ப வள்ளல் என்கிறது.[8]

**இதனையே மேலும் உறுதிப்படுத்தி பாடலும் கூறுகிறது**

**தேனார் தொடையார் பர ராச சிங்கபெருமாள்**
**செந்தமிழுக்கே**
**கானார் நெல்லின் மலைக்கோடி கண்டிநாடு**
**கரைசேரக்**
**கூனார் கப்பல் ஆயிரத்தில் கொடு போயளித்த**
**கொடை தடக்கை**
**மானாகரன் சங்கரன் சடையன் வளர்சேர்**
**சோழமண்டலமே**[9]

சங்கரன் சடையப்பர் ஆயிரம் கப்பலில் நெல் ஏற்றி ஈழத்திலுள்ள கண்டி நாட்டிற்கு அனுப்பியதாக இப்பாடல் கூறுகிறது.

சங்கர முதலியார் மகன் சடையப்பர். இவர்காலத்தே ஈழத்தில் வற்கடம் ஏற்பட்டு மக்கள் உணவின்றி வாடினர். சடையப்பர் கொடை சிறப்பறிந்து ஈழத்தை ஆண்ட

பரராச சிங்கன் கடிதம் எழுதித் தூது அனுப்பி ஆயிரக் கணக்கான நெல் மூட்டைகளை பல கலங்களினால் பெற்றான். ஈழநாட்டு மக்கள் பசிப்பிணி அகன்றது.[10]

எனவே கம்பரின் புரவலர் சடையப்ப வள்ளல் பெரும் நிலக்கிழாரும் பல கிராமங்களை உடையவரும் திக்கெல்லாம் புகழ்பெற்ற பெரும் செல்வந்தர் என்றும் மன்னர்களுக்கும் உதவிய மாபெரும் வள்ளல் எனவும் விளங்குகிறது.

இக்காலத்தில் தென்னாற்காட்டிலுள்ள சேதி நாட்டை கக்கலன் என்பான் ஆட்சி செய்தான். கி. பி. 880—நீலகண்ட சாஸ்திரி—தென்னிந்திய வரலாறு. கக்கலன் மருமகனான ராஷ்டிரர்கூட இரண்டாம் கிருஷ்ணன், இவனது ஒரு மகளையும் மணந்தவன் முதலாம் ஆதித்த சோழன் (கி. பி, 871—907) எனவே சோழமண்டலம் தொண்டை மண்டலமும் அதன் மன்னர்களும் சடையப்ப வள்ளலுக்கும் இவர் மூலமாகக் கம்பருக்கும் நெருக்கமான தொடர்பு இருந்ததென அறியலாம்.

மேற்கண்ட ஆதாரங்களால் கம்பர் 9 ஆம் நூற்றாண்டு என்பதும் குறிப்பாகக் கம்ப இராமாயண அரங்கேற்றம் கி. பி. 885 என்பதும் தெளிவாகிறது. எனவே கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான்.

சடையப்ப வள்ளலின் கொடை ஆயிரங்காடி, ஐநூறு காடி நெல் வரபெற்ற இலங்கை மன்னன் பரராச சிங்கன் சடையப்பருக்கு நன்றிகூறிப் பாடப்பட்டதாக ஒரு பாடலை குறித்து கூறியுள்ளது.[11]

**2வது சடையப்ப வள்ளல்** (பாடல் 54)

**புதுவை சடையன் பொருந்து சங்கரனுக்கு**
**உதவி தொழில் புரி ஒட்ட கூத்தனை**
**கவிக் களிறு கைக்கும் கவிராட்சதன் என**
**வேறு மங்கள நாள் வியந்து காங்கேயன் மேல்**
**கூறு நாலாயிரக் கோவைக் கொண்டுயர்ந்தோன்,**

—சோழ மண்டல சதகம்
—செந்தமிழ் தொகுதி 3 பக்கம் 6.

**பதி நோக்கி............பொன்னி**

**நதி நோக்கி வாழ நவ புதுச்சேரி......**

—நாலாயிரக்கோவை. கூத்தர்
—செந்தமிழ் சிலம்பு 28, பக் 37

சோழ நாட்டுக்கும் தொண்டை நாட்டுக்கும் இடையிலான நடு நாடு என வழங்கப்பட்ட திரு.வெண்ணெய் நல்லூரில் (பாண்டிச்சேரி அடுத்த கொடைவள்ளலாக வாழ்ந்த) காங்கேயன் பிள்ளை, மகனார் சங்கரன் பிள்ளை என்பாரின் மகனுக்கு பாட்டனார் பெயரான காங்கேய பூபதி என வழங்குகிறது.[12]

ஒட்டகூத்தர் முதலில் இந்த சங்கரனிடம் உதவி தொழில் புரிந்து வந்தார் பின் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கும் கூத்தரை கண்டு. காங்கேய பூபதி கவி களிறுயெனவும், கவிராட்சதன் எனவும், கவுடப் புலவனாக்கினார், ஆகவே கூத்தர் மகிழ்ந்து, காங்கேயன்மேல் நாலாயிரம் கோவை பாடி, அதனால் உயர்ந்ததாக பாடல் (54) கூறுகிறது.

பின் இவரது தமிழ் ஆற்றல் கவிதிறம் கண்டு முதலாம் குலோத்துங்கன் ஆட்சியில் (1070-1118)அவைப்புலவராக்கி முறையே விக்கிரம சோழன் 1118—1135 இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலும் 1135-1150 ராசாதிராசன் அவைப்புலவராக ஆசானாக அமைச்சராக இருந்து மூவர் உலாவும், களிங்கப்பரணியும், (களிங்கத்துப் பரணி வேறு) பிறவும் பாடி புகழ் எய்தியவராகும். கூத்தரை உருவாக்கிய சங்கரனுக்கு பாட்லில் புதுவை சடையன் என வருவதால் முன் கண்ட சங்கர சடையனும் (கம்பரின் புரவலர்) இவரும் ஒருவரே என சிலர் கருதுகின்றனர். இவரது காலம் 12ஆம் நூற்றாண்டு என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த இரு சடையன்களைப் பற்றி ஆய்வாளர்கள் கூற்றைக் காண்போம்.

புதுவை சேதிராயனென்பான் புதுவையூரில் வாழ்ந்த சடையன் என்பானுக்கு மகனாவான். இதைப் ''புதுவை வாழ் சடையனுதவு செய்பூதலம் பரவு சேதிபன்'' என்ற, சாசனப்பாடலால் அறியலாம். புதுவை சடையன் வேறு இருவரையும் ஒருவராகக் கருதுவோருமுளர்.[13]

புதுவை சேதிராயனும் வெண்ணெயூர் சடையனும் ஒரே மனிதராகக் கூறப்படுவது குறித்தும், கூத்தர் உலாவில் வரும் ''திரிகர்த்தன், சேதிராயன், என்ற பட்டம், கம்பரின் காலத்துச் சடையப்பனைக் குறிக்கும் என்று ஒருதலையாகக் கூறமுடியாது. என்று வ.வே-சு. அவர்கள் கூறுகிறார்கள்.[14]

புதுவை சடையன், திருவெண்ணெய் நல்லூர் சடையன் ஆக இரு வள்ளல்களையும் சரிவரத் தெரிந்து கொள்ளாமல் இருவரும் ஒருவரே என எழுதிவிட்டார்கள் என்று ''இரு சடையப்ப வள்ளல்கள் என்ற தலைப்பில் விரிவாக ஒரு ஆய்வுக்கட்டுரை. 1953, 54ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது.[15]

இவைதவிர மேலும் சில சேதிராயன்களும் நமது ஆய்வில் காணப்படுவதுடன் அவர்களையும் கம்பரின் புரவலனாகக் கருதியும் குறிப்பிட்டுள்ளதைக் காண்போம்.

**3வது சேதிராயர்**

இவர் 11ஆம் நூற்றாண்டு வாழ்ந்தவர். இவர், திருவாரூர் அடுத்துள்ள மெய்ப்பொருள் நாயினாரது சேதி நாட்டு மன்னர் மரபினர். இவர் தில்லை சிவனார் மீது திருவிசைப்பாடி அதை 9ஆம் திருமறையில் சேர்க்கப்பட்டுள்ளது.[16]

''சேதி நல் நாட்டு நீடு திருக்கோவிலூரின் மன்னமாது ஒருபாகர் அன்பின் வழி வருமலாடர் கோமான்.''[17]

எனவே இவர் கம்பரின் சடையரோ, கூத்தரின் சடையரோ அல்லர் என்பது தெளிவு.

**4வது சேதிராயன்**

**1. திருக்கோவிலூர் கல்வெட்டு :** இவர் சேதிதிருநாடர் சேவகன் சேதிராயன் என்ற மலைய குல அரசன், குறுநில மன்னன் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகவும், திருக்கோவிலூர் கல்வெட்டு கூறுகிறது என்றும், இவரே கம்பரின் புரவலராகலாம் என்று கூறுவார்கள்.

இது சரியல்ல, இவரும் கூத்தர் காலத்தே வாழ்ந்தவர் என்பதாலும் இவர் சோழனின் சிற்றரசனானதாலும் இதைப்போன்று சிற்றரசர்களையும் படைத்தளபதிகளையும் புகழ்ந்து (கலிங்கப்பரணியில்) கூத்தர் பாடியுள்ளார். அதில், கலிங்கம் சென்ற தொண்டைமான், முனையர்கோன் சேதிபர்கோன். காடவன் வேணார்வேந்து, அருந்தபாலன். வத்தவன். காரனைக் காவலர், அடிகள் வல்லவன், சேதி நாடன், திரிகர்த்தன் என்போரையும் கூத்தர் பாடியுள்ளார்.[18]

சேதிபர்கோன், சேதி நாட்டு மலையமாநாடு என்னும் திருக்கோவிலூரிலிருந்து ஆட்சி புரிந்தவன், குறுநில மன்னன், விக்கிரம சோழனுக்கு திறை செலுத்தியவன் கி. பி. 1135-50[19] எனவே இவர் கம்பரின் சடையப்பரல்லர் என்பது விளங்கும்.

**5வது சடையப்பர்**

**2. திருக்கோடிக்கா கல்வெட்டு :** இந்த சடையப்பரும் பெரும் வள்ளலென்று தெரிகிறது இவனே சேதிப

னென்றும், பிள்ளை பெருமாள் மகன் என்றும் புலவரையும் வறியோரையும் காத்த புரவலன் என்றும் இவ்வுலகையே கொடுத்தாலும் பொய் மொழியான் என்று கூறுகிறது.[20]

திருக்கோடிக்கா என்பது திருவிடைமருதூர் அருகே உள்ள திருக்கோடிக்காவல் என்பதாகும்.[21] இந்த திருக்கோடிக்கா கல்வெட்டு குறிப்பிடும் சடையனையும், முதற் குலோத்துங்கன் 1070—1118 காலத்தை குறிக்கும் என ஆய்வாளர் குறித்துள்ளனர். இதன் காரணமாகவே, கம்பர் முதற்குலோத்துங்கன் காலமென்பாருமுளர்.

மேற்படி இக்கல்வெட்டில் ''பிள்ளை பெருமாள் மகன்'' என வருவதை யாரும் கண்டு கொண்டதாகத் தெரிய வில்லை. எனவே இவர் (1ஆம் குலோத்துங்கன்) காலமாகக் குறிப்பிட்டுள்ளதும் சடையன் சேதிபன், என்பது கொண்டும் கூத்தர் காலத்தில் கம்பர் வாழ்ந்தார் என்ற எண்ணத்திலும் ஆராய்ச்சியாளர்கள் ஆண்டுள்ளார்கள் என்றே நாம் கருது கிறோம். ஆனால் இந்தச் சடையனும் சேதிபனும் காலத் தாலும் வாழ்ந்த இடத்தாலும் வேறுபட்டவராகவே கருத வேண்டியுள்ளது. இவரும் கம்பர், கூத்தர் இருவரின் சடையன் அல்லர் என்பது விளங்கும்.

தவிர தஞ்சைச் சோழர்களின் சிற்றரசராக மழவராயன் பல்லவராயன், சேதிராயன் என்றும் வாழ்ந்துள்ளார்கள்.

**6வது சடையன்**

**3. மூவலூர் கல்வெட்டு :** மூவலூர் சிவன் கோயில் கல்வெட்டில்.

**1. சேமா வயங்கு செய்யா சேதிபர்கேன்**
**மாமால் புதுவை சடையன்**

2. காவிரியை சோணாட்டை காராளர் தம்மரபை
பூவலய முள்ளத்தகும் புதுவையூரை சிறப்பித்தான்
பிள்ளை பெருமாள் பிறந்து......

3. மெய்தழுவி வந்து விருந்துண்டு மீளுமவர்
கைகழுவநீர் போதுங் காவேரி-பொய்கழுவும்
பேர்வேர்சடையன் புதுவையான்இல்ல றத்தை
யார் போற்றவல்லார் அறிந்து. [22]

—மூவலூர் கல்வெட்டு

கம்பர் சடையப்பரை புகழ்வதாகக் கூறப்படும் இந்த "மெய்கழுவி வந்து" என்ற பாட்டில் பேர்வேற் சடையன் என்று மூவலூர் கல்வெட்டிலும்.

"புதுவையான் இல்லறத்தை, என்ற பாட வேறு பாட்டுடனும் "புதுவாபுரி"யென்ற சொல்லுடன் "திருக் கோடிக்கா" கல்வெட்டிலும் காண்பது ஏன்? எனச் சிந்திக் கத் தக்கதாகும், தவிர இப்பாடலின் ஈற்றடி,

பிள்ளை பெருமாள் பிறந்து!' எனவருதலையும் ஈண்டு அறிய தக்கதாகும் கூத்தருடைய காங்கேயன் வீட்டிலும் பிள்ளை பெருமாள் என்பாரில்லை; கம்பரின் சடையப்பரின் வீட்டிலும் பிள்ளை பெருமாள் என்பாரில்லை. என்பதும் நினைவு கூறத்தக்கதாகும். தவிர. நாம் கண்ட ஆறு "தனிப்பாடல்" திரட்டுகளிலும் இந்த "மெய் கழுவி வந்து" என்ற பாடல் எங்குமில்லை. ஆனால் தமிழ் நாவலர் சரிதையில் மட்டும் உள்ளது. அதிலும் இப்பாட்லுக்கு மேலே கல்வெட்டில் காட்டப்பட்ட முன் இரண்டு பாடல் கள் இல்லை என்பது வியப்பாகும். இதிலிருந்து "மெய் கழுவி" என்ற பாடல் நாவலர் சரிதையில், கம்பரின் தனி பாடலாக சேர்க்கப்பட்டதாலோ, மூவலூர் திருக்கோடிக்கா கல்வெட்டுகளில் சடையன் என உள்ளதாலோ கம்பரின் புரவலரை குறித்ததாகாது காலத்தாலும், இடத்தாலும்

வேறுபட்டதாகவே கருத ஆதாரமுள்ளது தவிர மெய் கழுவி, என்ற பாடலே கம்பர் பாடியதாக இருக்க முடியாது எனக் கருதி வந்தோம் இதை உறுதிபடுத்துவதாக,

மூவலூர் சிவன் கோயிலில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு வேணாட்டு சிற்றரசன் வஞ்சி மாத்தாண்டன் கி.பி.1450ம் ஆண்டு (15 நூற்றாண்டு) புதுவை சடையன் வழித்தோன்ற லான பிள்ளை பெருமாள் என்பானுக்கு எழுதப்பட்ட பாகுட கவியாகும் என்கிறது. [23]

இதே பாகுட கவியைச் சற்று மாற்றித் திருககோடிக்கா கல்வெட்டு கூறுகிறது. வேணாட்டு சிற்றரசன் தன் பாகுடக் கவியைத் தன் நினைவாகப் பொறித்தது 9ஆம் நூற்றாண்டு கம்பரின் சடையப்பனை, குறிக்குமென்றோ, இதனால் கம்பர் கால ஆராய்ச்சியாளர்கள் இடர்படுவார் கள் என்றோ, வஞ்சி மார்த்தாண்டன் கருதவில்லை. ஆகவே மூவலூர் கல்வெட்டும் திருக்கோடிக்கா கல்வெட்டும் கம்பரின் புரவலரைக் குறிப்பிடுவதாகாது. எனவே, இக் கல்வெட்டை வைத்துக் கம்பர் காலம் 11. 12ஆம் நூற் றாண்டு என கூறிய ஆராய்ச்சிகள் பொருந்தி வரவில்லை. எனத் தெளிவாகிறது.

ஆறு சடையப்ப வள்ளல்களை இதுவரை யாருமே குறிப்பிடவில்லை. இரு சடையப்பரை மட்டுமே கருதி ஆய்ந்துள்ளது அறிந்தோம். 12ஆம் நூற்றாண்டின் திருக்கோடிக்கா கல்வெட்டைக் கொண்டே கம்பர் காலம் 9ஆம் நூற்றாண்டு என்பதை மறுத்துள்ளதாகவும் அறிய முடிகிறது. திருக்கோடிக்கா கல்வெட்டைக்கொண்டே கம்பர் காலம் 12ஆம் நூற்றாண்டு என்று பலரும் கருதி வந்துள்ளார்கள் என்பதும், அக் கல்வெட்டு கம்பரின் புரவலர் சடையப்பரை குறிக்கவில்லை என்பதும் தெளி வாகியுள்ளது. எனவே கம்பர் காலம் ஒன்பதாம் நூற் றாண்டுதான் என்பது உறுதி.

சடையப்பர், பண்ணை வெண்ணெய் சடையன் மூவேந்தர்க்கு ஒரே சமயத்தில் விருந்தளிக்கும் தகுதி பெற்று இருத்தினால் திரிகர்த்தராயன் எனப் பெயர் பெற்றார்.[24]

**பன்னிரெண்டு பாடலில் சடையப்பர் பெயர்**

நூறு பாடலுக்கு ஒரு பாடலில் சடையப்பரை சிறப்பித்தார் கம்பர், அரங்கேற்றத்தின்போது ஆயிரத்தில் ஒருவராகப் பாடிய பாடல்களின் தொடக்கம்

| | | |
|---|---|---|
| 1. | பாயிரம் | ''நடைய்பினின்றுயர்'' |
| 2. | வேள்விப்படலம் | விண்ணவர்போய |
| 3. | அகலிகைப்படலம் | ''அரமடைந்தையர் கற்பகநவ'' |
| 4. | மிதிலைப்படலம் | வண்ணமாலைகை |
| 5. | சேது பந்தனபடலம் | மஞ்செரித்திகழ் தரு |
| 6. | நாகபாச படலம் | வாசங்கவந்த |
| 7. | மருத்துவ மலை படலம் | வன்னிநாட்டி |
| 8. | யுத்த, திருமுடி படலம் | அரியணை அனுமன் தாங்க |
| 9. | பால காப்பு | நடையினு னின்று உயர் |
| 10. | பாலவேள்வி | மன்னவர் வறுமை நோய்க்கு |
| 11. | பாலமிதிலை | பண்ணை வெண்ணெய் |
| 12. | யுத்த காண்டம் | கொடைமீளி |

ஆக, 12 பாடல்களில் கம்பர் சடையப்பரைப் பாடி உள்ளார். இதனால் கம்பர் பாடிய பாடல்கள் 12000மாக இருக்க வேண்டும் இருப்பது 10600 பாடல்கள் உதாரணத்திற்கு ஒரு பாடல்

**விண்ணவர்போய பின்றை விரிந்த மழையினாலே**
**தண்ணெனுங் கானம்நீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்**
**மன்னவர் வறுமை நோய்க்கு மருந்தென சடையன் வெண்ணெய்**
**அண்ணல்தன் சொல்லே யன்னபடைக்கல மருளினானே**

வேள்வி படலம் 417

(கருத்து)

மக்களின் வறுமை போக்க மருந்தாவார் சடையன். அவர் சொல்லை ஒத்த பல அத்திரங்களை விசுவாமித்திரர் இராமனுக்கு அருளினார். என்று சடையப்பவள்ளலைச் சிறப்பித்து கம்பர் பாடியது, சடையப்ப வள்ளல் மீது கொண்டிருந்த நன்றிப் பெருக்கை இது காட்டுகிறது.

மகாகவி பாரதிபோல். இளம் வயதிலேயே கம்பரின் கவித்திறங்கண்டும் ஆமருவியப்பன் திருவருளாலும் தேரழுந்தூர் ஆன்றோர்கள் ஆதரவாலும், கம்பரது ஆர்வமும் சடையப்பரைப் புரவலனாக்கியது எனலாம். கம்பரை. தமிழிலக்கணம் மற்றும் வடமொழியும் கற்க ஆவனச் செய்தவர் சடையப்பராகும்.

கம்பரை இராமாயணம் தமிழில் பாட வைக்கக் கீழ்க் கண்ட காரணங்களாக இருக்கலாம். தெலுங்கு நாட்டிலும், அவர்களை கொண்டு தமிழ் நாட்டிலும். மகா

மண்டலேசுவரன், பெட்டரன், ராஜேந்திர சோழன், பெத்தப்படி சோழன், கண்ணரதேவன், கொங்கராயன் கொல்லி பாகைக்குத் தலைவனான தம் பயன் கட்டிதேவ மகா யாதவராயர்கள், விக்கிரம சோழன் ஆட்சிக்கு உட்பட்டவர்கள். (குறுநில மன்னர்களாக இருந்தார்கள்) [25]

மேற்கண்டவர்கள் தெலுங்கர்,பல்லவ காலந்தொட்டுத் தெலுங்கு மொழியும் பௌத்தமும் ஜைனமும் தமிழகத்தில் குடிகொண்டிருந்தது. தஞ்சைத் தரணியிலே இருந்து தெலுங்கு இலக்கியங்கள் தமிழ்மண்ணில் தோன்றியமைக்கு ஆதாரங்கள் உண்டு. [26]

கச்சேரியாகவும் பிரசங்கமாகவும் பஜன்களாகவும் யட்ட கானம் தெருக்கூத்து என விளங்கின. இந்நிலையில் வால்மீகி இராமாயணத்தை தமிழில் பாட வைக்க சடையப்பரும், அதைப்பாட ஆசைகொண்டு கம்பரும், வடமொழி கற்கவும் இலக்கணம் இலக்கியங்களில் தேறவும், சித்தித்தனர். சடையப்பர் ஆதரவால் கற்று தேர்ந்து இராம காவியத்தை கம்பர் இயற்றினார் என்பது ஒன்று பட்ட கருத்து.

வைணவத்தையும் வைணவர்களையும் ஓரளவு ஒதுக்கப்பட்ட நிலையில் தோன்றியவரே கம்பர். [27]

## அடிக் குறிப்புகள்

1. அபிதான சிந்தாமணி பக் 552.
2. தொண்டை மண்டல சதகம்
3. கம்பரின் திருக்கை வழக்கம் 56 பக் கவிச்சக்கரவர்த்தி கம்பர் த. ச. மூர்த்தி

4. 62 கே. எ. நீலகண்ட சாஸ்திரி தென்னிந்திய வரலாறு

5. திருவொற்றியூர் பதிகம் பக்கம் 19.

6. செந்தமிழ் தொகுதி 52. பக்கம் 225.

7. உத்தம சோழன் செப்பேடு கி. பி. 984-985. 14, S.I.I.III. நெ 128

8. கவி சக்கரவர்த்தி கம்பர் வரலாறு பக். 12.

9. சோழ மண்டல சதகம்

10. புலவர் மாரிமுத்து 'கம்பர்'

11. பக்கம் 2 கம்பர் ஒரு திறனாய்வு நூல் பாகம் 2

12. செந்தமிழ் சிலம்பு 28 பக்கம் 37.

13. தமிழ் நாவலர் சரிதை பக்கம் 72.

14. வ. வே. சு. அய்யர் கம்பர் ஆராய்ச்சி கட்டுரை 1971

15. செந்தமிழ் செல்வி, சிலம்பு 28 பக். 33

16. தமிழ் புலவர் அகராதி பக்கம் 197.

17. மெய்பொருள் நாயினார் புராணம்.

18. தி. சா. சதாசிவ பண்டாரத்தார் இலக்கியமும் கல்வெட்டும்

19. இலக்கியமும் கல்வெட்டும் பக். 160

20. 191. EP Rep 58/30-31 தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும். திருக்கோடிக்கா கல்வெட்டு

21. ஊரும் பேரும் பக்கம். 160

22. மூவலூர் கல்வெட்டு H. R. No 29 of 1925

23. செந்தமிழ் செல்வி. சிலம்பு 28 பக்கம் 37.

24. பக். 57 புலவரும் புரவலரும் 7ஆம் வகுப்பு தமிழ் பாடநூல் 1989.

25. ஒட்டக்கூத்தரின் மூவருலா

26. அமுதசுரபி தீபாவளி மலர் 1987.

27. டாக்டர் ராஜமாணிக்கனார் தமிழ் அமுதம்.

# 8. கம்பரும் ஒட்டகூத்தரும் சமகாலத்தவரல்லர்

பொற்றாமரை மானொழியாது பொலியுமார்
பெற்றாங்கு மேனி ரகுராம சரிதையாவுங்
கற்றார் கவியின் பெரிதாம் தமிழ்க் கம்பநாடன்
உற்றாங்கு உரைத்தான் உரையாதன ஓதுகிற்பாம்[1]

15ஆம் நூற்றாண்டில் ஒரு அரசகேசரி வடமொழி ரகுவம்சத்தை தமிழில் பாடினார் அவர் வேறு.[2]

அரசகேசரி என்ற கவி ஒருவர் உத்திர காண்டம் பாடியுள்ளார். அவர் கம்பர் உரையாதன ஓதுகிற்பாம், என்று கூறி இப்பாடலைப் பாடியுள்ளார். இதிலிருந்து இவர் கம்பருக்குப் பின்பும் கூத்தருக்கு முன்பும் தோன்றி இதனைப் பாடியிருத்தல் வேண்டும். என்ற கருத்துப்படி கூத்தரும் கம்பரும் சமகாலத்தவரல்லர்.

உத்திர காண்டத்தை ஒட்டக்கூத்தர் பாடியிருந்தால், அரசகேசரி யார்—கம்பரைக் குறிப்பிட்டதுபோல், கூத்தரையும்குறிப்பிட்டு இருப்பார். கம்பரைப் பற்றி கூத்தர் ஒன்றும் கூறாது இருக்கமுடியாது. ஒட்டக்கூத்தரின் உத்தர காண்டத்தைக் கம்பர் ஏற்றது உண்மையாயின் அரங்கேற்றத்தில் ஒட்டக்கூத்தர் கலந்து கொண்டிருப்பார், இரண்டுமில்லை சடையப்பரின் மகனார் கலந்து கொண்டார்.

அவரைப்பற்றிக் கம்பர் ஒரு பாடல் பாடியுள்ளார். கூத்தரைப்பற்றி ஒருபாடலும் கம்பர் பாடாதது சிந்திக்கத் தக்கது என்று வ. வே. ஸு. ஐயரவர்கள் தம் ஆராய்ச்சிக் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.[3]

ஒட்டக்கூத்தர் சிலாசாசங்களின் 2ஆம் குலோத்துங்கன் (1135 - 1150) அவையில்தான் உத்தரகாண்டத்தை அரங்கேற்றியதாகக் கூறுகிறார்கள்.[4]

இதையே உறுதிப்படுத்துவதாக, சோழமண்டல சதக பாடல் கூறுகிறது.

**பூன்நிலாவும் கம்பநலம் பொலியும் தமிழால்**
**பொலிவு எய்து**
**காணும் ஆறு காண்டம் கூறும் கதையின் பெரிய கதை**
**—என்றும்**
**தாள் நிலாவும் கழல் அபயன் சபையில் பயில்**
**உத்தரகாண்டம்**
**வாணிதாசன அரங்கேற்றி வைத்தார்**
**சோழ மண்டலமே.**

—சோழ மண்டல சதகம்.

ஸ்ரீ ராமானுஜர் காலமாவதற்கு முன்னமே விக்கிரம சோழன் (1118 - 1135) இறந்துபோய் விட்டான் என்றும், ராமானுஜர் கி,பி.1137ல் பரமபதம் அடைந்தார் என குரு பரம்பரை கூறுவதால் இந்த குலோத்துங்கன் 1137க்கு முன் நாலைந்து ஆண்டுக்கு முன்னமே இறந்து போய் இருக்க வேண்டும் என்று ஸ்ரீமான் ராகவையங்கார் ஒப்புக்கொள் கிறார். அப்படியானால் கூத்தர் உத்தரகாண்டத்தை 1134க்கு முன் அரங்கேற்றி இருக்கவேண்டும் இதன்படி பார்த்தால்

கம்பராமாயணம் இதற்குமுன் எப்போதோ அரங்கேறி இருக்கவேண்டும். கம்பர் பிறந்தது 1120 சமீபம் என்றால் 1137க்குள் 17 ஆண்டில் பிறந்து, வளர்ந்து, படித்து, ராமாயணம் பாடி இருக்கமுடியாது. என்கிறார் வ. வே. சு. ஐயரவர்கள்.

கி. பி. 1118ல் கம்பர் பிறந்தார் என்கிறது செந்தமிழ் ஆண்டு குறிப்பு கூறுகிறது. [5]

செந்தமிழின் இக்குறிப்பு எந்த ஆதாரத்தையும் காட்டிக் கூறவில்லை, இது ஏற்கத்தக்கதன்று. ஆனால் இதன் அடிப்படையில் தான் சிலர் கம்பர் 1120 - 1200 எனக் கருதி கூத்தர் காலத்தில் கம்பர் வாழ்ந்ததாக கூறப்படுகிறது போலும்.

1185ல் அரங்கேற்றம் என்றும் கூறப்படுகிறது. இதற்கு பாயிரம்பாடிக் கொடுத்த அம்பிகாபதிக்கு அப்போது வயது 20 இருக்கும்; இளம் வயது வித்வானாக இருந்தபோது தான்.

அமராவதி காதல் விஷயமாகச் சோழனால் கொலையுண்டான். எனவே 1185ல் அம்பிகாபதி உயிரோடு இருக்க வாய்ப்பில்லை. அரங்கேற்றமும் அப்போது இல்லை. என்பது ஈண்டு அறிக.

உத்தரகாண்டத்தை இயற்றியவர் வாணிதாதன் என்ற புலவரே ஒழிய ஒட்டக்கூத்தரல்ல, என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டிக்கிறார்கள். கம்பராமாயணத்தை நன்கு கற்ற பிறகே உத்தரகாண்டத்தை இயற்றி இருக்கிறார். என்பதற்கு உத்தரகாண்டத்தில் அகச்சான்று உண்டு. ராமாயணத்தைப் படிக்காமல் கூத்தர் அதைத் தாமாகவே இயற்றினார் என்ற கூற்று பொய் என்பதற்கு இதைவிடச் சான்று தேவையில்லை. என்கிறார் [6] கு. அழகிரிசாமி.

சாசன தமிழ் கவி சரிதையின் புறத்திரட்டில் கம்ப ராமாயணப் பாடல்களும் இதற்கு முற்பட்ட இலக்கியங்களி லும் உள்ள பாடல்களும் காணப்படுவதாலும் ஒட்டக் கூத்தர் பாடல்கள் காணப்படாததாலும் கம்பர் காலம் 10 நூற்றாண்டு எனக் கூறுவார்கள்[7]. எனவே கூத்தர் சமகாலத்தவரல்லர்.[7]

தண்டி அலங்காரம் என்ற தமிழ் நூலைக் கம்பர் பேரனும் அம்பிகாபதி மகனுமான தண்டியெனும் ஆசிரிய ரால் செம்பியன் 2 ஆம் குலோத்துங்கன் (1135 - 1150) அவையில் அரங்கேற்றப்பட்டது. இதனாசிரியர் நடனத் தில் வல்லவரென்றும் 123 சூத்திரங்களைக் கொண்டது நூல் என்றும் அதன் உரைமேற்கோளில் ஒட்டக்கூத்தர் குறிப் பிட்டுள்ளார் என்றும் கூறப்படுகிறது.[8]

—இக்கருத்து 1185ல் அரங்கேற்றம் என்பதையே தகர்த்து விடுகிறது.

**''கம்பர் இராமாயண அரங்கேற்றம்''**

**''கூத்தர் உத்தரகரண்ட அரங்கேற்றம்''**

**''தண்டி அலங்காரம் அரங்கேற்றம்''**

இவை மூன்றும் இதே சோழன் அவையிலும் காலத் திலும் நடந்ததாகக் குறிப்பிடப்படுவதே அபத்தமாக உள்ளது.

கம்பராமாயணம் அரங்கேறிய பிறகே உத்தரகாண்டம் அரங்கேறி இருக்கவேண்டும். இதன் பிறகு வெகுகாலம் தள்ளியே தண்டி அலங்காரம் அரங்கேற்றம் நடந்திருக்க வேண்டும். இதற்கான குறைந்த பட்ச காலம்கூடக் கணக் கிட வாய்ப்பில்லை. கம்பர் கூத்தர் சமகாலத்தவரல்லர், என்பதற்கு இதைவிடச் சான்று தேவையில்லை.

**தண்டி என்பார் இருவர்**

சிலர் ஒரு தண்டியே வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லவராய் உபயகவியென நாமம் வழங்க பெற்றிருந்தனர் என்றும் அவரே காவிய தரிசனம், தண்டி அலங்காரம் இரண்டிற்கும் ஆசிரியரென்றும், ஆதலால் அவற்றுள் எதனை முதலாகக் கொள்ளினும் அமையும் என்றும் கூறுப. இருசாரார் கூற்றும் தப்பென மறுக்க தண்டியலங்காரம் இயற்றினார் அம்பிகாபதி புத்திரர் அம்பிகாபதி, கம்பர் மகன்.

கம்பர் குலோத்துங்க சோழன் காலத்தில் வெண்ணெய் நல்லூர் சடையப்ப முதலியார் முன்னர், ''எண்ணிய சகாத்தம் ஏழின் மேல்'' தமது ராமாயணம் அரங்கேற்றினார். ''அதற்கு 107 வருடத்திற்குமுன், குமரகோட்டத்தில் (காஞ்சியில்) அரங்கேற்றிய ஸ்காந்தத்திற்கு, வீரசோழியத்தினின்றும் இலக்கண விதி காட்டப்பட்டது. ஆதலால் இது பொருந்தாமைக் காண்க. அன்றியுங் காவிய தரிசனம் செய்த தண்டியாசிரியர், ஓர் சமணர், தண்டி அலங்காரமுடையார் சைவர், ஆதலால் இருவரும் வேறு. மிகப் பாடிய நூலாகிய, காவிய தரிசனம் வீரசோழிய வலங்காரம், தண்டியலங்காரம் இரண்டுக்கும் முதனூலாயிருந்ததென்க. என்கிறது வீரசோழிய மதிப்புரை[9]

கம்பராமாயண அரங்கேற்றம் கி. பி. 1185 என்று தான் பெரும்பாலான ஆராய்ச்சியாளர்களும் சிலாசாசனாதிகளும் கூறுவதாகக் காணப்படுகிறது. இக்கால கட்டத்தில் கம்பர் வயது சுமார் 60-65 எனக்கொண்டால் பேரன் தண்டியின் வயது சுமார் 10-15 ஆண்டுக்குமேலிருக்க வாய்ப்பில்லை. எனவே ராமாயண அரங்கேற்றம் 1135ல் என்றால் தண்டியின் அரங்கேற்றம் 1150க்கு மேல் தான் இருக்கமுடியும். எனவே கூத்தர் காலத்தண்டியை அவரது மாணவர் என

வ. வே. சு. குறிக்கிறார், கி. பி. 1185ல் கம்பராமாயணம் அரங்கேற்றம் எனில் கூத்தரின் உத்தரகாண்டம் அதன் பிறகு நடந்ததே அப்பொழுது கூத்தர் உயிரோடு இல்லை. எனவே கூத்தர் உத்தரகாண்டம் பாடி அரங்கேற்றிய காலம் 2ஆம் குலோத்துங்கன் 1135-1150 என்பது உறுதி என ஆராய்ச்சியாளர் சாசனாதிகள் கூற்றை ஏற்றுக் கொண்டால் இராமாயண அரங்கேற்றம் அதற்கு முன்பு தான் என்பதை ஏற்றே ஆகவேண்டும். ஆக 1185ல் அரங்கேற்றம் இல்லை என்பது உறுதியாகிறது. எனவே கூத்தரும் கம்பரும் சமகாலத்தவரல்லர்.

கூத்தரின் உத்தரகாண்டத்தை கம்பர் ஏற்று அரங்கேற்றி இருந்தால் குறைந்தபட்சம் கூத்தரின் பாயிரமாவது இடம்பெற்றிருக்கும். கம்பராவது கூத்தரது உத்தர காண்டம் குறித்து ஏதேனும் பாடி இருக்கலாம். இரண்டும் இல்லை.என்பதால் கூத்தரும் கம்பரும் சமகாலத்தவரல்லர்.

மேலும் கூத்தர் உத்தரகாண்டம் சோழனவையில் அரங்கேற்றினார் என்பதிலிருந்து, கூத்தர் அதை கம்பரிடம் தரவில்லை. கம்பரும் பெறவில்லை. என்பது தெளிவு. இதற்கு வேறு சான்று தேவையில்லை. அடுத்து கம்பரது இராமாயணத்திற்கு முன் தனது இராமாயணம் எடுபடாது என கூத்தர் தாம் எழுதிய இராமாயணத்தைக் கிழித்து கொண்டிருந்தாராம்.

மாறு வேடத்தில் கம்பர் அங்குச் சென்று கம்பர் இறந்து விட்டதாக அவரே கூறினாராம்—

கவிச்சக்கரவர்த்தியான கூத்தரும் அதை நம்பி,

**இன்றல்லோ கம்பர் இறந்தநாள் என் கவிதை**
**இன்றல்லோ ராசசபைக்கேற்ற நாள்—இன்றல்லோ**
**பூமடந்தை வாழ புவி மடந்தை வீற்றிருக்க**
**நாமடந்தை நூல் வாங்கு நாள்**

என்ற பாடலைப் பாடினாராம். கம்பர் இறந்தது கலைமடந்தை மங்கள நாண் இழக்கும் நாளாம். தமிழர் தம் பண்புக்கும், கலைமகள் மீது கொண்டுள்ள பக்திக்கும் இது முரணானது. கம்பரே இதைச் சகிக்கமாட்டார். கூத்தர் இப்படி ஒரு பாடலை ஒரு போதும் பாடமாட்டார். இது அபத்தமான கற்பனை. இவைபோன்றவைகளை நாம் புறக்கணிப்பது தவறாகாது.

மேற்படி பாடலைக் கூத்தர் பாடியதும் கம்பர் இறந்து வீழ்ந்தாராம். வீழ்ந்தவர் கம்பர்தான் என அறிந்த கூத்தர், அதே பாடலை சில சொற்களை மாற்றிப் பாட, கம்பர் எழுந்தாராம். கூத்தர் கிழித்தெறிந்தது போக, கம்பர் பாடாத உத்தரகாண்டம் மட்டும் எஞ்சி இருந்ததாம். அதைக் கம்பர் தன் இராமாயணத்துடன் சேர்த்துக்கொள்ள பெற்றாராம். இப்படி ஒரு அதீத கற்பனை யாரை வீழ்த்த? அல்லது வாழ்த்த?

நாட்டில் பல இராமாயணங்கள் விளங்குகிறது. கூத்தரின் படைப்புகள் போற்றப்படுகின்றன. அவரது இராமாயணமும் ஏன் போற்றப்படாது. இயற்றிய எவரும் அதைத்தானே கிழித்தெரிவது என்பது எங்ஙனமும் இயலாத ஒன்று. கம்பருக்கும் கூத்தருக்கும் உள்ள தொடர்பு இந்தக் கற்பனை கதை ஒன்று.

மற்றொன்று, சோழன் இருவரையும் கம்பராமாயணம் பாடச்சொன்னான். கம்பர் பாடாமலே உரம்பெற்று தின்று உலாவி செருக்கினான். கூத்தரோ பெரும்பகுதி பாடி முடித்து அடக்கமாக மட்டாக பாடியதாகக் கூறினாராம். கம்பரைக் கேட்டபோது திரு வணைப்படலம் வரை பாடியதாகப் பொய் கூறினாராம். இப்படி ஒரு கதை உண்டு. அதை உறுதிப்படுத்துவது போன்று நேரில் இருந்து அறிந்தது போல் புலவர் புராணத்தில்,

''அன்று தொட்டு ஒட்டக்கூத்தன்
''அங்கக் கதை நன்றுபாடல்களாக நவின்றான்

''மற்றோன் (கம்பன்)
ஒன்றும் ஓதலனாகி உரம்பெற
தின்று உலாவி செருக்கினான்......
அது பொய்யென அறிந்த செங்குந்தன்...... [10]
(கூத்தர்)

கொஞ்சமும் பொருத்தமற்ற செருக்குற்ற இதைத்தவிர கம்பருக்கும் கூத்தருக்கும் வேறு எந்த சம்பந்தமுமில்லை. எனவே கம்பரும் கூத்தரும் சம காலத்தவரல்லர்.

கூத்தரால் மூவருலாவும் பிள்ளைத்தமிழ் பாடலும் கலிங்கப்பரணியும் பெற்ற சோழமன்னர்கள் காலம் கி. பி. 1120 - 1200 குறிப்பாக,

| | | |
|---|---|---|
| விக்கிரமசோழன் | — | 1118-1135 |
| 2ஆம் குலோத்துங்கன் : | — | 1135-1150 |
| 2ஆம் இராசராசன் | — | 1146-1163 ஆகும். |

இம்மூவர் காலத்திலும் கூத்தர் வாழ்ந்திருந்தார் ஆதலின் அவர் காலமும் அதுவேயாம் எனத் துணியலாம்.[11]

விக்கிரமசோழனுலாவில் ஒரு கன்னியை வியந்து அதை ஒட்டி ஒரு வெண்பா, பாடவேண்டினான் விக்கிரமன்.

கையும் மலரடியும் கண்ணுங்கனி வாயுஞ்
செய்ய கரிய திருமாலே — வையம்
அளந்தா யகளங்கா வாலிலை மேற்பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தா ளென்மான்.

—ஒட்டக்கூத்தர்

இவ்வாறு ஒட்டி பாடியமையால் ஒட்டக்கூத்தரானார். 2ஆம் இராசராசன் இளமை காலத்தில் கூத்தர் மிகவும் முதுமை பருவமும் உடையவராய் ஓர் சமயம் இருக்கை யின்று எழும்போது எழுந்து தளர்ச்சியுற்று விழுவது கண்டு இம்மன்னர் பெருமான்

''நாத் தொலைவில்லை யாயினுந்தளர்ந்து
மூத்த திவ் யாக்கை வாழ் பல்லாண்டு''

என வாழ்த்தி கை கொடுத்துதவி செய்தான். அதனை புலவர் பாராட்டி,

**காலையை தடவியவை வேலக்கர் குலமடியச்**
**சிலையை தடவிய கையேயிது செகத் தண்டத்துள்ள**
**மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்த வொண்ணார்**
**தலையைத் தடவி நடக்குங் கொள்யானை செயதுங்கனே** —கூத்தர்
—தக்கயாக பரணி. கழக வெளியீடு

இவன் காலத்திற்கு பிறகு கூத்தர் யாரையும் பாடிய தாக இல்லை. எனவே இவர் காலத்தே கூத்தர் காலம் இறுதியென்பர்.

வ. வே. சு. ஐயரவர்கள் கூறுவதுபோல் இக்காலகட்டத் தில் கம்பர் உயிருடன் இல்லை. இருந்தால் அவர் ஸ்ரீராமானுஜரை புகழ்ந்து பாடி இருப்பார்.

ஒட்டக்கூத்தர் காலத்தில் ஸ்ரீராமானுஜர் இருந்தார். எனவேதான் அவரை நாடு கடத்தியதும் சிதம்பரம் கோவிந்தராஜ பெருமாளைக் கடலில் எறிந்ததும் பற்றி புகழ்ந்து கூத்தர் சோழனுலாவில் பாடியுள்ளார்.

அதனை டாக்டர் இராச. மாணிக்கனார் இவ்வாறு குறிப்பிடுகுறார். தில்லையிலிருந்த கோவிந்தராஜர் சிலையைக் கடலில் எறிந்து விட்டான். கோயிலைக் கண்காணிக்கும் மகேஸ்வரர்களை வைணவர்களோடு பழக கூடாது எனக் கட்டுப்பாடு செய்தான். சேக்கிழாரும் புறச் சமய வெறுப்பிலிருந்து தப்பவில்லை. ''மாலும் அயனும் காணாத சிவன்'' எனப் பொருள்பட பெரிய புராணத்தில் பல இடங்களில் கூறியுள்ளார். வைணவத்தை ஓரளவு எதிர்த்தனர் எனும் சாயலையும் பெரிய புராணத்தில் காண லாம். அரியும் சிவனும் ஒன்று, என்பதை கம்ப இராமா யணத்தில் பல இடங்களில் வற்புறுத்தியுள்ளார்.

—தமிழ் அமுதம். டாக்டர் இராச.மாணிக்கனார்,

தில்லையிலிருந்த கோவிந்தராஜ பெருமானை கடலில் எறிந்த சோழனை கூத்தர் மரகதமேரு என்று புகழ்ந்தார்.

**தில்லைத் திருமன்றின் முன்றிற்சிறு தெய்வம்**
**தொல்லைகுறும்பு தொகுத்து எடுத்து.**

—கூத்தர் குலோத்துங்கனுலா.

**முன்றிற் கிடந்த கருங்கடல் போய்**
**முன்னைக் கடல் புகழ் பின்னைத் தில்லை**
**மன்றிக் கிடங்கண்ட கொண்டல் பெற்ற**
**மரகத மேருவை வாழ்த்தினவே.**

கூத்தர் தக்கயாகபரணி

பொன்னிற் குயற்றிப் புறம் பிற்குறும் பறுத்து
முன்னிற் கடல்றுண் மூழ்குவித்த சென்னி

—கூத்தர். ராஜராஜதேவருலா

இச்சோழனை, வைணவர்களை வேர் அறக்களைத் தவன். என்கிறது 12 செந்தமிழ் இதழ்.

இவன் பதினாறு ஆண்டு ஆட்சிசெய்து நோய்வாப்பட்டு (கிருமிகண்டு) கோயிலிற் கிடந்தான். ஆண் சந்ததியில்லை. முற்சோழ மரபில் ஒருவனை நியமித்து ஆட்சி செய்ய வைத்து பார்த்து இறந்ததாக, நாலாண்டு கழித்து ராஜராஜதேவர் எனப் பெயரிட்டு ஆளும்படி ஏற்பாடு செய்து இறந்தான். என்கிறது [13] வரலாறு.

இவன் வைணவம் பரவ வொட்டாமல் தடுத்து சைவம் தழைக்க செய்து சிவாலயங்களுக்கு வேண்டுவன உதவிவந்தான், என செந்தமிழ்[14] செப்புகிறது. குலோத்துங்கனை அவனது ஆசிரியரும் சமஸ்தான புலவருமான ஒட்டக்கூத்தர் ஒன்றிக்கதிகமான நூல்களில் புகழப்படுகிறான் குலோத்துங்க சோழனுலா, தக்கயாகபரணி, என்பனவற்றில் சிதம்பரத்தில் இருந்த பெருமாள் கோயில் எடுபட்டு அம்மூர்த்தியை கடலில் எறியப்பட்டது என்று சற்று மகிழ்ச்சியோடு சொல்லப்படுகிறது. இம்மூர்த்தியே பின் ஸ்ரீராமாநுஜரால் திருப்பதியில் ஸ்தாபிச்கப்பட்டது என்று சரித்திர பேராசிரியர் எழுதியுள்ளார்[15].

இவனே கிருமிகண்ட சோழன், அபயன், ராமானுஜரை நாட்டைவிட்டு விரட்டியவன் என்கிறார் மறுமலர்ச்சி ஆசிரியர் [16] சிதம்பரம் பெருமாள் சிலையைக் கடலில் போட்டவன் "சென்னி பிறரென்று கூறீரே" இராமாயணம் "புவி புகழ் சென்னி பேரமல்லன்" இவன் கூத்தரிடம் கல்வி பயின்றவன் என்று சிங்காரவேலு முதலியார் [17] குறிப்பிடுகிறார். இதில் சென்னி பிறரென்று கூறீரே என்பது முதலாம் ஆதித்தனை குறிப்பதாகும். புவி புகழ், சென்னி, பேரமல்லன் என்பனவும் கிருமி கண்டனை குறிப்பதாகாது என பிறிதொரு இடத்தில் ஆதாரமுடன் குறிப்பிட்டுள்ளோம்.

தவிர சைன கோயில்களையும் இடித்தவன் இவனே என்று முதலாங்குலோத்துங்கனை அபிதான சிந்தாமணி

யும் [18] குறிப்பிடுகிறது இது சரியல்ல. இரண்டாம் குலோத்துங்கனைத் தான் பல சான்றுகள் குறிப்பிடுகின்றன. இந்த சோழன் கொடுமைத் தாங்காமல் இராமாநுஜர் திருவரங்கத்தை விடுத்து கன்னட நாட்டிற்கு பிந்து தேவரிடம் சென்றுவிட்டார் [19] என்கிறது செந்தமிழ் இதழ்.

கம்பராமாயணத்தில் ''சென்னி'' என இரு இடங்களில் மட்டும் கம்பர் குறிப்பிடுகிறார். ''புவிபுகழ் சென்னி'' கிஷ்கிந்தா காண்டம் பில நீங்குபடலம். சென்னி நாள் தெரியல்'' வீரன் தியாக விநோதன்'' யுத்தகாண்டம் மருத்துவப் படலத்திலும் காணலாம். ''தெய்வ பொன்னி நாட்டு உவமை வைப் புலன் நோக்கி வீரன்'' என்பது ஒரு சோழனுடைய இயற்பெயர் என்றும் அந்த சோழனே கூத்தரால் பாடப்பெற்ற 2ஆம் குலோத்துங்கன் என்கிறார் இராகவையங்கார் இதை ஆதரித்து உ.வே.சா. அவர்களும் தம் யுத்தகாண்ட முன்னுரையில் தெரிவிக்கிறார்.

இவைகள் பொதுப் பெயரோ, இயற்பெயரோ ஆகாது என ஆராய்ச்சியாளர்கள் கண்டிருக்கிறார்கள் குறிப்பாக வ.வே.சு. ஐயரவர்கள் கூறியுள்ளார். இப்பெயர் உள்ள சோழன் வீரசைவன் சிதம்பரத்தில் இருந்த கோவிந்தராஜ பெருமாள் விக்கிரகத்தைக் கடலிலிட உத்திரவிட்டான் இப்பேர்பட்டவனை ஸ்ரீவைஷ்ணவனான கம்பன் தன் ராமாயணத்தில் எப்படி ஏற்றிச் சொல்லி இருப்பார். வீரசைவன் எப்படி ராமாயணம் பாட உதவி இருப்பான் என்கிறார் தம் கம்பர் ஆய்வில்.

நமது பெரியோர்களால் புழுவன் என்று அழைக்கப்படும் வீரசைவனான சோழவரசன் துவேசம் காரணமாக எதிராசர் (ராமானுஜர்) மேல் நாடு எழுந்தருளியபோது முதலியாண்டான் ஆசாரியாருக்கு திருமேனி காப்பாக கூடவே சென்றதாக குறிப்பிடுகிறது [20]

## புகழேந்தியும் சமகாலத்தவரல்ல

13ஆம் நூற்றாண்டில் இலங்கையில் ஆட்சி செய்த ஆரிய சேகரனை புகழேந்தி பாடியதாக நாவலர் சரிதையில் ''கவியரசர் தம் முனவி'' என ஒரு பாடல் உள்ளது. [21]

சித்தூர் மாவட்டத்தில் மகாதேவ மங்களத்து திருக்கண்டீஸ்வரர் கோயில் கல்வெட்டு ஒன்று ''ஐநூற்றுவதேச வள்ளுவன் புகழேந்தி'' என்பதற்கு சாசனாதாரம் உள்ளது. [22] இவைகள் உண்மையெனில் புகழேந்தியும் கம்பரும் ஒட்டக்கூத்தரும் சமகாலத்தவரல்லர்.

திருவரங்கத்தில் கம்பராமாயணத்தை முன்னிலை வகித்து அரங்கேற்றி தந்தவர் ஸ்ரீமந்நாதமுனிகள் என்பதற்கு பல ஆதாரங்கள் உள்ளன. இவரது காலம் 823—917 (தி லைப் ஆப் தி ராமானுஜா.) எனவே கூத்தரும் கம்பரும் சமகாலத்தவரல்லர்.

ஸ்ரீமந்நாதமுனிகள் ஆழ்வார்கள் அருளிய திருவாய் மொழிகளை யாவரும் கைகொள்ளத் தக்க முறையில் பாராயணத்திலும் ஆட்சியிலும் வைத்தார். அந்த நாலாயிர திவ்யபிரந்தத்தில் கம்பர் அருளிய ÷ பாசுரங்கள் இடம் பெற்றுள்ளது. எனவே கம்பரும் கூத்தரும் சமகாலத்தவரல்லர்.

சோழ மண்டலத்தில் குலோத்துங்கன் ஆட்சி செய்து கொண்டிருந்தபோது நடந்த சமாச்சாரம் அவனுக்கு வைணவத்தை அவ்வளவாக பிடிக்காது. தில்லை கோயிலில் நடராஜர் ஆடும் சன்னதிக்கு வெகு அருகாமையில் இருந்த வைணவப் பெருமாள் சந்நிதி அவன் கண்ணை உறுத்தியது. பாம்பணையில் ஹிரா சாகரத்தில் (கடலில்) கிடக்க

வேண்டியவர் அங்கேயே போய் இருக்கட்டும் என்று சொல்லி கடலில் தூக்கிபோடச் சொல்லிவிட்டான் என்கிறார்[23] சக்தி இதழ்.

இவன் எப்படி கம்பர் ராமாயணம் பாடவோ, அதை அரங்கேற்றவோ அனுமதித்து இருப்பான். ஸ்ரீராமானுஜரை போல், தில்லை பெருமாள் போல் கம்பரையும் நாட்டை விட்டே விரட்டி இருப்பான். எனவே கூத்தரும் கம்பரும் சமகாலத்தவராக இருக்கவே முடியாது. இருவரையும் இணைத்து கூறும் கதைகள் அனைத்தும் கற்பனை உண்மையே அல்ல,

சைவ பத்தனான குலோத்துங்கன் வைணவர்களைப் பிடித்து சிவன்தான் பெரியவன் என்று சொல்லவைத்து உபத்திரவப்படுத்திக்கொண்டிருந்தான். ஸ்ரீராமானுஜரைப் பிடித்து வரும்படி, சேவகர்களை அனுப்ப, செய்தி தெரிந்து குருவுக்கு என்ன நேருமோ? என அஞ்சி அவரிடமிருந்து காஷாய திருத்தாண்டங்களைப் பெற்று, கூரத்தாழ்வான் என்ற சீடர் பூண்டு, வெள்ளை வேட்டியை ராமானுஜர் ஏற்றுக்கொண்டார். கூரத்தாழ்வானையே, ராமானுஜர் என்று அரச சபைக்கு அழைத்துச் சென்றனர். ராமானுஜர் கன்னட தேசம் போய்ச் சேர்ந்தார் என்கிறது.[24]

உடையவர் திருவரங்கத்தை விட்டகல காரணமான கிருமிகண்டன் மாண்டபின் ஸ்ரீராமானுஜர் முன்போல் திருவரங்கத்தில் எழுந்தருளி இருக்க சோழவரசன் மகன் இவரை வந்து தொழுது திருவரங்க திருப்பதியை நீர்வார்த்துத் தானசாசனம் (கல்வெட்டு) பண்ணுவித்தான். இந்த நிகழ்ச்சி ஆர்யபாடான் வாசலில் சிலாலிகிதம் ஆக்கி வைத்தான். எதிராஜ பாதுகா எழுதியுள்ளது.

ஒட்டகூத்தரை கம்பரோடு சமகாலத்தவரென்றால் முரண்பாடுகள் பல உளன என்கிறார் இடைக்கால புலவர் நூல் ஆசிரியர்[25]

## அடிக்குறிப்பு

1. அரசகேசரி உத்திரகாண்டம் பாடியவர்.
2. தமிழ்ப் புலவர் அகராதி பக். 321
3. கவிச்சக்கரவர்த்தி க்ம்பர் ஆராய்ச்சிக் கட்டுரை. பக். 15
4. செந்தமிழ் தொகுதி 3
5. செந்தமிழ் தொகுதி
6. கு, அழகிரிசாமி சக்தி ராமாயணம் முன்னுரை
7. தமிழ்ப் புலவர் அகராதி பக். 98
8. தமிழ்ப் புலவர் அகராதி மற்றும் சில நூல்களும்
9. புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியம் பெருந்தேவனார் (மாணாக்கர்)உரையோடு. யாழ்பாணம் வை. தாமோதரம் பிள்ளை மதிப்புரை பக்கம் 25
10. ஸ்ரீமத் முருகதாஸ் ஆசிரியர் புலவர் புராணம்
11. கவிமன்னர் மூவர் கழக வெளியீடு
12. செந்தமிழ் பக்கம். 470
13. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்
14. செந்தமிழ் வால்யம் 7 பக், 466
15. சரித்திர பேராசிரியர் டாக்டர். கிருஷ்ணசாமி ஐய்யங்கார் எழுதிய ''பண்டைய இந்தியா''
16. ஆசிரியர் மறுமலர்ச்சி
17. அபிதான சிந்தாமணி பக்கம் 486

18. அபிதான சிந்தாமணி பக்கம் 759

19. செந்தமிழ் தொகுதி

20. ''யதிராஜ பாதுகா'' 1987

21. தமிழ் நாவலர் சரிதை பக்கம் 120,

22. த. நாவலர் சரிதை எ. ஆர். எண். 169/1941-1

23. சக்தி இதழ் ஏப்ரல் 1991

24. சக்தி ஜனவரி 1992 பக்.111'

25. இடைக்காலப் புலவர்கள் வித். வே. ராமலிங்கம்

# 9. ஔவையாரும் கம்பரும் சமகாலத்தவரல்லர்

கம்பரும் ஔவையாரும் சந்தித்தார்களாம்.

கம்பர் ஒரு காலடீ ''நாலிலைப் பந்தலிலே''

எனச் சொல்லி, ஔவையாரிடம் பொருள் கேட்டாராம். அதற்கு, ஔவை ''எட்டேகால் லட்சணமே, ''எமனேறும் பரியே, ''மட்டில் பெரியம்மை வாகனமே, ''முட்டமேற் கூரையில்லா வீடே, ''குலராமன் தூதுவனே, ''ஆரையடா சொன்னாயடா?''

எனப் பதிலுரைத்தாராம். கம்பரின் கண்ணியத்தையும் ஔவையாரின் பண்பையும் சிறிதும் சிந்திக்காத சிந்தனையே அற்ற யாரோ கட்டிவிட்ட இப்பாட்டு பாவலர்களைப் பழிப்பதாக, அவமதிப்பதாக உள்ளது. இதனைக்கொண்டு ஔவையாரும் கம்பரும் சமகாலத்தவர் என்பது வியப்பாகும்! இவை போன்றவற்றை அறவே நீக்கி கவிமேதைகளைக் கௌரவிப்போமாக.

நிலத்தில் உழுது கொண்டிருந்த வேளாளனைக் கம்பர் பாடவும் அவன் நிலத்தில் புதையல் கிடைத்ததாம். அதனைக் கம்பரிடம் அவன் கொடுக்க, கம்பர் அதைப்பெற மறுத்துவிட்டாராம். இத்தகைய கம்பர், காசுக்கும், ஆயிரம் பொன்னுக்கும் பாடினார் எனில் எதை நம்புவது.

எனவே, தனிப்பாடல் திரட்டுகளில் அவ்வாறு உள்ளது என்பதை விளக்கினோம். இவற்றை ஆய்ந்து காணாது இப்பாடல்களைக் கொண்டு கம்பர் காலம் கூறுவது பொருந்தாது என்பது திண்ணம்.

**ஔவையார் மூவர்**

1. கி. மு. 62ல் அதியமான் அஞ்சி என்பவரால் ஆதரிக்கப் பெற்ற ஔவை (இது வள்ளுவர் காலம்) திருவள்ளுவருடன் பிறந்தார் என்ற கருத்தை அறிஞர்கள் ஏற்கவில்லை. திருவள்ளுவரையும் தொண்டமானையும் பாடியுள்ளார். நெல்லிக்கனி வழங்கிய ஔவை இவரே.
—பக். 27 தமிழ் புலவர் அகராதி

2. கி. பி. 8ஆம் நூற்றாண்டில் சுந்தரர், சேரமான் பெருமாள் நாயினார் காலத்தே விளங்கிய ஔவையார் ஒருவரின் பெயர் அறியப்படுகிறது.
—பக். 80 தமிழ் புலவர் அகராதி

3. கி.பி.12 நூற்றாண்டில், ஒட்டக்கூத்தர், புகழேந்தி காலத்தில் விளங்கிய ஔவையே. ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி. வாக் குண்டாம் மேலும் பல நூல் வழங்கியவர்.
—பக். 28 தமிழ் புலவர் அகராதி

குறிப்பு : முதலாவது ஔவை, முற்கால சோழ ராட்சியிலும் 2வது ஔவை, பல்லவராட்சியிலும், மூன்றா மவர் பிற்கால சோழராட்சி 12நூற்றாண்டு என்பதாலும் 9ஆம் நூற்றாண்டு கம்பர் காலத்தே ஔவையார் யாரும் இல்லை. ஆனாலும் ஒரு சில சம்பவங்களைச் சுட்டி சம காலத்தவரென்பர் அது சரியா? என்பதை அறிவோம்.

1. சோழன் கம்பரைப் போலப் பெரிய காப்பியம் பாடுவாரில்லை என்றபோது ஔவை, ''வான்

குருவியின் கூடு'' சித்திரமும் கைப் பழக்கம் என்று பாடி பதிலிறுத்ததாக

—பக். 11 மீனாட்சி-தனிப்பாடல் திரட்டு

2. சித்திரமும் கைப்பழக்கம் என்ற பாடலை, ஒளவை பிறவி குணம் பற்றி பாடியதாக

—பக். 27 கலையரசி-தனி.பா.தி

3. கம்பரை. யார் வெல்ல இயலும்? என்று சோழன் வினவியபோது ''காணாமல் வேண தெல்லாம் கத்தலாம், என்று ஒளவை பாடியதாக

—பக். 12 மீனாட்சி, தனி.பா.தி

4. காணாமல் வேண தெல்லாம் என்ற பாடல், வலியாரைக் கண்டு மெலியார் அஞ்சுவர், என்ற பொருளில் ஒளவை பாடியதாக

பக்' 27 கலையரசி-த.பா.தி.

5. சோழன் பல சமயங்களில் கம்பரை வியந்தபோது, மாறாக ''விரகரிருவர் புகழ்ந்திடவே வேண்டும் என்று ஒளவை பாடியதாக

—பக். 305 அபிதான சிந்தாமணி

6. ''விரகரிருவர் என்ற பாடலை, இரு வேளாளரை ஒளவை பாடியதாக

—பக். 52 தமிழ் நாவலர் சரிதை

7. இதே பாடலைக் குறித்து ஆடம்பரக் கவிகளைச் சுட்டி ஒளவை பாடியதாக

—பக். 28 கலையரசி-த.பா.தி.

இவற்றால் கம்பருக்கும் ஒளவைக்கும் சம்பந்தமே இல்லை என்பது விளங்கும். எனவே கம்பரும் ஒளவையும் சமகாலத்தவரல்லர்.

# 10. கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே!

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல்
சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய ராமகாதை பங்குனி அத்த நாளில்
கண்ணிய அரங்கர் முன்னே கவியரங்கேற்றினானே.

இப்பாடல் சகாத்தம் 807 எனத் திட்டவட்டமாகக் கூறி ங்குனி மாதம் அஸ்த நட்சத்திரம் என்றும் தெரிவிக்கிறது. சகாத்த ஆண்டோடு 78 சேர்த்தால் கி. பி. ஆண்டாகும். 807+78=கிபி 885ஆக ஒன்பதாம் நூற்றாண்டு எனக்கூற இந்த ஒரு ஆதாரம் உள்ளது 12 நூற்றாண்டிற்கு ஒன்றுகூட இல்லை என்பதை கு. அழகிரி தம் ஆய்வில்[1] தெரிவித்துள்ளார். இன்று நாம் இருபத்திமூன்று ஆதாரங்களைக் கண்டுபிடித்துள்ளோம்.

இந்தப் பாடலைக் கடந்த கால ஆராய்ச்சியாளர்கள் ஏற்கவில்லை. கீழ்கண்ட காரணங்கள் சொல்லப்படுகிறது. 1வது காரணம் ஷ்டி பாடலில் அரங்கேற்றம் என்ற சொல் வருகிறது, அச்சொல் 15ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட சொல்[2] என்பதாம். ஆனால் ஏர் எழுபதிலும், கம்ப ராமாயணத்திலும் அச்சொல் இடம் பெற்றிருக்கிறது.

| | |
|---|---|
| அரங்கிடை மடந்தையர் | பால நகர படலம் |
| அணி அரங்கம் | குலமுறைப் படலம் |
| அரங்கின் ஆடுவார்க்கு | இரணிய வதைப்படலம் |
| ஏற்றிய ஆண்தகை | எழுச்சி படலம் |
| நாண் இனிது ஏற்றினான் | கார்முகப் படலம் |
| ஞானச்சுடர் விளக்கேற்றி | |
| னேன் | பூதத்தாழ்வார் |
| அரங்கேற்றும் களரிலே | ஏரெழுபது (கம்பர்) |

எனவே, அரங்கம், ஏற்றம், அரங்கேற்றம் என்ற சொல் கம்பர் பாடலிலேயே இருக்கிறது, என்பதால் (கம்பர் காலம் 15ஆம் நூற்றாண்டுக்குப் பின் எனக் கூறாது விடுத்தனரே!) எனவே முதற் காரணம் சரியல்ல என விளங்கும்.

**இரண்டாவது காரணம்**

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழு என்பது, என், நூற்று ஏழு எனப் பொருள்படுத்தி ஆயிரம் பேரெண் ஒழித்து. உலக வழக்கு நெறியே தழுவி, சிற்றெண்ணாலே கூறியுள்ளது எனக்கொண்டு,

நூற்று ஏழுடன் ஆயிரம் சேர்த்து 1107. கி.பி.1185 எனக் கொள்ளப் பொருத்தமாகும் என்பர், இரா.ராகவையங்கார் என்றும்

**மூன்றாவது காரணம்**

முந்நூற்று ஏழின்மேல் என்ற பாடமும் இங்ஙனம் பொருள் கொள்ளுமிடத்துப் பொருந்திவிடும் என்கிறார். திருமணம் செல்வகேசவராய முதலியார் தம்-(கம்பநாடார்) ஆய்வு நூலில்,

இதுபற்றி ரசிகமணி டி.கே.சி. அவர்கள் பதிலே போதுமானதாகும். அதனைப் பார்ப்போம்.

சகாத்தம் எண்ணூற்று ஏழாம் ஆண்டு பங்குனி அஸ்த நாளில் கம்பர் அரங்கேற்றினார் என்று குறிப்பு வருகிறது, இக்காலவரையறைக் குறிப்புக் காரணமாகக் கம்பர் உயர்ந்து விடுவார் என்று எண்ணவேண்டிய துண்டோ? இல்லை, ஆனாலும் நம்மவரில் சிலருக்கு எப்படியோ பயம் வந்துவிட்டது.

கம்பருடைய காலைப்பிடித்துத் தரதரவென்றிழுத்து, அவரைப் பிற்காலத்தவர்தான் என்று சொல்லி விட்டார் கள்.

807 சகாத்த வருடமெனில் கி. பி. 885 ஆகும் 9ஆம் நூற்றாண்டுக் கம்பர் காலம் என ஏற்படும் இப்படிச் செய்யுளை வைத்துக் கொண்டு சொல்லுவதால் யாதொரு கஷ்டமும் இல்லை.

எண்ணுகிற எண், நூற்று ஏழு எனப் பொருள்கொண்டு அதில் ஆயிரம் சேர்த்து கம்பரை 12ஆம் நூற்றாண்டுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

எண்ணும், நூற்று ஏழு, என்று பொருள் சொல்லு கிறதையே வியக்கிறோம்! அதோடு ஆயிரம் சேர்த்துக் கொள்ளுங்கள், என்று சொல்லுகிற தைரியத்தைப் பார்த் தால், என்ன சொல்லுவது என்று தெரியவில்லை. மனம் நொந்து தெரிவிக்கிறார். டி.கே.சி. அவர்கள்.

வீரசோழிய உரையாசிரியர் காலம் 11ஆம் நூற்றாண்டு அவரும் தமக்குப்பின் நூறு வருஷம் கழித்து 12ஆம் நூற்றாண்டிலுள்ள கம்பரைக் குறிப்பிடுகிறார் என்றால் இது இலக்கிய ஆரூடம்தான்.[3] என்று இடித்துரைக் கின்றார் டி. கே. சி. அவர்கள்.

**நான்காவது காரணம்**

307 எனப் பாடபேதம் உள்ளது என்பதாகும்.

307 சகாத்தம் எனில் 4ஆவது நூற்றாண்டாகும். ஆயிரம் சேர்த்தால் 14ஆம் நூற்றாண்டாகும் இது பொருத்தமற்றது, பாடபேதம் அச்சுப்பிழையெனக் கொள்ளலாம்.

**ஐந்தாவது காரணம்**

"கம்ப நாடன்" என்ற சொல் வருவதால் அது பிற்காலப் பாடல் எனப்படுகிறது.

கம்பராமாயண அரங்கேற்றத்தின்போது பலரிடம் மதிப்புரை கோரப்பட்டது. அவ்வாறு பாயிரம் பாடித் தரப்பட்டவற்றில்,

1. எண்ணிய சகாத்தம் என்ற—பாயிரத்திலும்
2. அம்பிலே சிலையை என்ற—பாயிரத்திலும்
3. இம்பர் நாட்டில் என்ற—பாயிரத்திலும்
4. சம்பு அநாள்தன் என்று, அம்பிகாபதி (கம்பரின் மகன்) — பாயிரத்திலும் "கம்பநாடன்" என்னும் சொல் வருகிறது.
5. தராதலத்திலுள்ள என்ற—பாயிரத்திலும்

6. வாழ்வார் திருவெண்ணெய் என்ற பாயிரங்களில்; கம்பநாட்டாழ்வார் என்றும் வருகிறது,

கம்பரை ஆழ்வார் எனப் பெரும்பாலும் வைணவ நூல்களில் சிறப்பிக்கப்படுவதாலும் குறிப்பாகத் திருவரங்கத்தில் ஸ்ரீநாதமுனிகள் முன்னிலையில் ஆழ்வார் எனப் போற்றப்பட்டது. அம்பிலே, என்ற பாடலில் கவிச்சக்கரவர்த்தி என வழங்கப்பட்டது என்பர்.

திருவரங்கத்தில் நான்முகன் கோபுரவாசலைத் தாண்டிக் "கம்பர் மண்டபம், எதிரிலே ஸ்ரீமத்நாத முனிகள்

சந்நிதி, இவரே கவிச்சக்கரவர்த்தி **"கம்பநாடரின்"** கம்ப இராமாயணத்தை நரசிங்கப்பெருமாள் எதிரிலே கேட்டருளினார் என்பது வரலாற்றுச் சான்றாகும். தென் கீழ்ப்பக்க கம்பத்திலே **"கம்பநாடார்"** சிலை கம்பீரமாக நிற்கிற காட்சியைப் பார்க்கலாம். [1]

மேற்கண்ட "கம்பநாடன்" எனவரும் பாடல் எல்லாம் பிற்காலத்தியது என்பது பொருந்தவில்லை அரங்கேற்றத்திலும் அவை இடம் பெற்றதாக அறியப்பட்டது.

ஸ்ரீமந் நாதமுனிகள் கி. பி. 823—917 கலி 3905, இவர் ஆழ்வார்கள் காலத்திற்குப் பின் ஸ்ரீ நம்மாழ்வாரது திருவாய் மொழியினை யாவரும் கை கொள்ளத் தக்கமுறையில் பாராயணத்திலும் ஆட்சியிலும் வைத்தார் என்கிறது-தமிழ்ப்புலவர் அகராதி.

இவரே நாலாயிர திவ்ய பிரபந்தம் தொகுத்தவர். தாளம் வழங்கி நான்கு தமிழ் மறைக்கு இன்னிசைத் தந்த வள்ளல். கம்பரின் நான்கு பாசுரம் திவ்யபிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## இது ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடாத சான்று

(இவர் காலத்தில் அரங்கேற்றம் என்பது 9ஆம் நூற்றாண்டைக் குறிப்பதாகும், கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான்.)

**ஆறாவது காரணம்**

முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் (ஆண்டு கி. பி. 885இல்) அவன் நாடு விரிந்திருக்கவில்லை என்பதாகும்.

கம்பர் இராமாயணம் பாடியமைக்கு ஆதாரம்தான் தேவை, நாடு விரிந்திருக்க தேவையில்லை.

முதலாம் ஆதித்தன் ஆட்சி எல்லை கி. பி. 890இல் தான் விரியத்தொடங்கிற்று, என்கிறார், —டாக்டர் கே. கே. பிள்ளை[5]

ராஷ்டிரக்கூட எல்லையைத் தொட்டது கி.பி.893இல் என்கிறார் தம் வரலாற்றில். [6]

—தென்னிந்திய வரலாறு கே. ஏ. நீலகண்டசாஸ்திரி

தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் கூறும் இவனது ஆட்சியில் தொண்டைமண்டலம் மட்டுமே இருந்தது என்பதற்குக் கம்பரின் இரு பாடல்கள் மட்டுமே போதுமானதாகும். அவை, கம்பர்காலச் சோழராட்சி பகுதியில் காண்க.

இராமன் சூரியகுல மரபில் வந்துள்ள, திருமால் வடிவிலுள்ள பரம்பொருள், என்பதைத் தெரிந்த கம்பர் 9ஆம் நூற்றாண்டு அளவில் இராமன் வரலாறு வடமொழி செல்வாக்குப் பெற்ற பல்லவர் காலத்தில் மாறி உண்மை போல வழங்குகிறது. இதைக்கண்டு நொந்து வான்மீகி நூலிற்குத் தம் முன்னையோரில் கூறிய வரலாற்று முறையைத் தழுவி எதிர் நூல் பாடி இருப்பதைக் கண்டேன் என்று புலவர் கு. திருமேனி 9ஆம் நூற்றாண்டையே குறிப்பிடுகிறார். தம் நூல் [7]

வீர சோழிய இலக்கண பழைய ஏட்டுச் சுவடியை ஆராய்ந்து வேற்றுமைப்படலம் ஏழாவது கலித்துறை உரையில் உதாரணமாகக் "கம்பரிடையே பெருமையுள்ளது" வீரசோழியம் வீர ராஜேந்திரன் (1067-1070) காலத்தில் இயற்றப்பட்டது. ஆகவே இக்காலத்திற்கு முற்பட்டதாக கம்பர் காலம் கொள்ளப்படவேண்டும். என்று-மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் [9] இதழ் கூறுகிறது.

மேற்படி வீர சோழியம் மூலமும் உரையும் பதிப்புரையில் 24 பக்கம் 17ஆம் வரியில் கம்பனாரிடை பெருமையுளது

என்று பெருந்தேவனார் குறித்துள்ளார். நூலின் பதிப்புரையில் வீரசோழியம் இயற்றிய புத்தமித்திரனார் மாணாக்கர் பெருந்தேவனார் என்றுள்ளது. இதன் காலம் கி. பி. 1063—1069 [10]

வீர ராசேந்திர சோழன் அவைப்புலவர் புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியம் எனும் தமிழ் இலக்கணத்திற்கு அவர் தம் மாணாக்கர் பெருந்தேவனார் எழுதிய உரையில் கம்பனாரிடை பெருமையுளது என்னும் வாக்கியம் வருகிறது உரை எழுதியதின் மூலம் நூலாசிரியருக்குச் செலுத்த வேண்டிய கடனைச் செலுத்தியதாக உரையின் இறுதியில் (பெருந்தேவனார்) கூறுகிறார். உரையின் வரலாற்றுச் செய்திகள் வீரராசேந்திரன் அவன் சகோதரன் அவன் தந்தை பற்றியது, பின் ஆண்ட சோழர் செய்திகள் இடம் பெறவில்லை, எனவே, நூலாசிரியரின் சமகாலத்தவரே உரையாசிரியர் என்பது உறுதி [11]

பின்னத்தூர் நாராயணசாமி ஐயரவர்களும் மோகனூர் கோவிந்தராஜ் ஐயங்கார் அவர்களும் கம்பர் 9ஆம் நூற்றாண்டு என்பதை ஆதரிக்கிறார்கள் என இராமசாமி புலவர் குறிப்பிடுகிறார்.

எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழு, என்ற பாடலை ஏற்பதில் எந்தச் சிரமமும் இல்லை. அதிக பலமான காரணம் இருந்தால் ஒழிய இப்பாடலின் (கி. பி. 885) அரங்கேற்றம் என்பதைத் தள்ளிவிட நமக்குப் பாத்தியதை இல்லை என்கிறார். —வ. வே. சு. ஐயர்

டாக்டர் வா. சுப. மாணிக்கம் தாம் எழுதிய கம்பர் என்ற நூலில் கம்பர் காலம் 9ஆம் நூற்றாண்டை ஆதரிக்கிறார்.

புலவர் கு. பாலசுந்தர முதலியார் தாம் இயற்றிய சடையனும் வள்ளுவரும் கம்பரும் என்ற நூலில் 9 ஆம் நூற்றாண்டு எனக் கூறியுள்ளார்.

**ஆதித்தன் குலமுதல்வன் 'மனுவினை யார் அறியாதார்**
**போதித்த உயிரனைத்தும் பெரும்ப சியால் வருந்தாமல்**
**சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை முலை சுரப்பச்**
**சாதித்த 'பெருந்தகையும் இவர் குலத்தோர்**
**தராபதிகாண்**

*பெருந்தகை-பிருதுமன்னன், கம்-குலமுறை கிளத்துப் படலர்.*

*இப்பாடலில் வரும் 'மனு. என்பானும் 'பெருந்தகை, எனும் பிருது மன்னனும் ஆதித்தனுடைய குல முன்னோர்கள் (சூரிய குலம்) ஆதித்த சோழனும் சூரிய குலத்தவன் ஆனதால் ஆதித்த சோழனையும் கம்பர் சுட்டி காட்டுவதாக, கம்பனடிப் பொடி (சா. கணேசன்) அவர்களும் இப்பாடல் துணைக்கொண்டு கம்பர் காலம் கண்டுள்ளார். கம்ப இராமாயண அரங்கேற்றம் எண்ணிய சகாத்தம் 807 கலியாண்டு 3986க்கு சரியான விசுவாசு பங்குனித் திங்கள் 4ந்தேதி கி. பி. 886 பிப்ரவரி 22 புதன் அத்த நாளை அறுதியிட்டுள்ளார்கள். அதற்குச் சான்றாக, ஆதித்தன் (871—907) இராம காதையில் கொண்டுள்ள ஈடுபாட்டில் தன் பெயரைத் கோதண்டராமன் என்றும் தனது பள்ளிப் படைக்குத் (தன் சமாதிக்கு) கோதண்ட ராமேச்சுவரம் என்ற ஆதித்தேசுவரம் எனப் பெயர் கொண்டுள்ளதையும் குறிப்பிடுகிறார். —சடையனும் கம்பனும்*

*கவிச்சக்கரவர்த்தி கம்பர் தம் இராம காவியத்தைத் திருவரங்கத்தில் வைணவ ஆசார்யரான ஸ்ரீமத் நாதமுனிகள் முன்னிலையில் அரங்கேற்றினார் (நாதமுனிகள் காலம் (கி. பி. 823—918) கம்பர் காலத்தை அறுதியிடும் சான்றுகளிலே இது ஒன்று.* [12]

*ஸ்ரீமந் நாதமுனிகள் வழியில் வந்த ஆசாரியர் இராமானுஜராவார் இவரது காலம் (1017-1137) இவர் தாம் அருளிய ஸ்ரீ பாஷியத்தை ஆரம்பிக்கும்போது முதலில் மங்கள ஸ்லோகத்தில்*

(காப்புப் பாடல்) கம்பர் தம் இராமாயணத்தில் முதல் காப்பாக அருளிய ''உலகம் யாவையும்'' என்ற பாடற் பொருளையே இவரும் பின்பற்றியுள்ளார். பக்கம் 9 பாடல் பார்க்க

ஸ்ரீ ராமாநுஜர் அருளிய மங்கள ஸ்லோகம்

**அகிலபுவன ஜன்ம ஸ்தேம பங்காதி லீலே**
**விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷே**
**ச்ருதி சிரசி விதீப்தே ப்ரம்மணி ஸ்ரீனிவாஸே**
**பவது மம பரஸ்மின் சேமுஷீ பக்திரூபா''**

கம்பராமாயணத்தில் உள்ள சடையப்பர் பெயர்களை நீக்கினால், கம்பநாட்டாழ்வார் அருளிய கம்பராமாயணம் திவ்யபிரபந்தத்தில் இடம்பெறும் என்று அரங்கேற்றத்தின் போது கம்பரிடம் தெரிவிக்க, சடையப்பர் மீதிருந்த நன்றி காரணமாகக் கம்பர் மறுத்து விட்டார் என்றும், ஆகவே கம்பராமாயணம் தவிர, மேற்கண்ட, பாசுரங்களும் சடகோபரந்தாதியும் சேவிக்கப்படுவதாக வைணவ பெரிய வர்கள் பலரும் தெரிவித்தார்கள். —ஆசிரியர்

ஆராய்ச்சியாளர் எவரும் எடுத்துக் காட்டாத சான்று.

கவிஜயன், கவிச்சக்கரவர்த்தி, கம்பநாட்டாழ்வார், என்று கம்பரை ஆச்சார்ய புருஷர்களான ஆழ்வார்கள் வரிசையில் வைத்து வைணவர்கள் ஆலயங்களில் சேவித்து வருகிறார்கள் என்பது மற்ற பலரும் அறியாதது. ஆராய்ச்சி நூல்களில் அவைகள் எடுத்து காட்டப்பட வில்லை, என்பது குறிப்பிடத்தக்கது.

**ஆவின் கொடை சரகர் ஆயிரத்து நூறு ஒழித்துத்**
**தேவன் திருவழுந்தூர் நல்நாட்டு—மூவலூர்**
**சீரார் குணாதித்தன் சேய் அமைய பாடினான்**
**காரார் காகுத்தன் கதை.**

இப்பாடலில் உள்ள காலம்; ஆவின்-வெண்ணெயூர்; கொடை-வள்ளல் (சடையன்) சரகர் சகஆண்டு; ஆயிரத்து-ஆயிரத்தில்; 1000இல் நூறு ஒழித்து - நூறு கழித்து ஒன்பதாம் நூற்றாண்டில் மூவலூர் ஆதித்தன் மகன் (கம்பன்) காகுத்தன் (ராமன்) கதை அமையப் பாடினார், எனப் பொருள் கொள்ளலாம்.

9ஆம் நூற்றாண்டு எனில் - அரங்கேற்றம் கி.பி.88 எனக் கொள்ளலாம்.

ஆனால் ஆய்வாளர் கொள்கை வேறாய் இருக்கிறது. ஆயிரத்து நூறு ஒழித்து என்பது 1100 ஆண்டு முடிந்து எனக்கொண்டு 78 சேர்த்து கி. பி. 1178 என்கிறார்கள். வேறு ஒரு நூல் கூறுகிறது. ஏழு ஆண்டு அரங்கேற்ற முயற்சியாக 1185ல் அரங்கேறியது எனக் கொள்ளப்படுகிறது. அதற்குத் ''தகுந்தாற்போல் அக்கால சோழன் 3ஆம் குலோத்துங்கனுக்கும் கம்பருக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டுக் கம்பனை நாடு கடத்தியதாகவும் அதுபற்றி கம்பர் பாடியதாக,

பின்வரும் பாடலை ஆந்திர பிரதாபருத்திரனைப் பார்த்துக் கம்பர் பாடியதாக பண்டிதர் ஆ. கி. நாயுடு குறிப்பிடுகிறார். [13]

கி. பி. 1162-1897இல் கம்பர் ஆந்திர வந்ததாக சீ செந்தமிழ் [14] கூறுகிறது.

பிரதாப ருத்திரன் கல்வெட்டு :
1162 - 1182 என்று அபிதான சிந்தாமணி.
1158 - 1190 என்று தென்னிந்திய வரலாறு.

கம்பர் பிரதாப ருத்திரன்மீது பாடியதாகவும் பிரதாப ருத்திரனிடம் கம்பர் சென்று அவனை அடைப்பைக் காரனாக்கிச் சோழனை மிரட்டியதாகவும், எத்த ஆதாரமும்

இன்றி. பண்டிதர் ஆகி நாயுடு தம் கம்பர் வரலாற்றில் குறிப்பிடுகிறார்.

**அவனி முழுதுண்டு அயிராவதத்துள்**
**பவனி தொழுவார் படுத்தும் — புவனி**
**உருத்திரா உன்னுடைய வோரங்க நாட்டிற்**
**குருத்திரா வாழைகுழாம்.**

கருத்து

அவனியோர் அனைவரும் வந்து உண்ணுதலாலும் உன் பவனி தொழுபவர்கள் கூட்டம் அடையும் மகிழ்ச்சியைக் காண நீ வாழையடி வாழை என வாழ்வாயாக. குருத்-திரா (குருத்து - இரா குருத்து இல்லாத) வாழைக்குழாம் எனவும் பொருள் கூறப்பட்டுள்ளது.

விவசாயிகளைப் பாடிய வாயால் வேந்தனைப் பாடாத கம்பர்; போர்க்களத்து வெற்றியிலும் மிக்கது ''நெற்போர் களம், என்ற கம்பர்; பிரதாபருத்திரனைப் பாடி இருந்தால் அது அதிசயம் தான். ஷெ பிரதாபருத்திரன் காலம்; கல்வெட்டு இவற்றைப் பார்த்தாலே, ஷெ பாடல் கம்ப ருடையதல்ல என விளங்குமே.

பிரதாபருத்திரன் பன்னிரெண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒரங்கல் நாட்டை ஆண்ட கணபதி வேந்தருள் ஒருவன். பிரதாபருத்திரீயம் என்னும் வடநூலுக்குரியவன் காலம் கி. பி. 1162 என்று தெரிகிறது. மேலே கண்ட கல்வெட்டு சோழவேந்தன் நகரத்தைக் கைப்பற்றினான், என்று த.வ.ம.ப. கூறுகிறது. கணபதி வேந்தருள்ளும் ஒரிசா நாட்டு வேந்தருள்ளும் இப்பெயருடைய வேந்தர்கள் காணப்படுகிறார்கள். அவர்கள் வரலாறும் சோழநாட் டோடு தொடர்புறுகிறது. ஆயினும் அவர்கள் காலத்தால் பிற்படுகின்றனர்.

கம்பர் இவனையடைந்து இவனது துணையால் சோழன்பால் தமக்கிருந்த செற்றத்தை (விரோதத்தை) நீக்கி கொண்டிருப்பார் எனக் கருதுகின்றனர். இவ்வாறு பிற்காலத்தில் வேறு வகையாகத் திரித்துக் கூறப்படு வதாயிற்று. [15].

தன்னாட்டு மன்னன் தவறிழைந்தாலும் கவிகளுக்கரச னான கம்பர் போன்றோர், தமிழ் மொழிக்குத் தமிழ்த் தாய்க்கு, எதிராக, தன் நாட்டை, மொழியைக் காட்டிக் கொடுக்கும் தன்மானமற்றவரா? சிந்திக்கவேண்டும்.

இப்பாடலால் கம்பர் காலமும் நிகழ்ச்சியும் உண்மை யெனில், கீழ்கண்ட பதில்கள் வேண்டியுள்ளது.

1161—1197இல் பிரதாபருத்திரனிடம் கம்பர் போனார். எந்தச் சோழன் காலம்? எந்த நகரத்தை பிடித்தான். இதற் கான விபரம் இல்லை.

விக்கிரமன் 1118 - 1135 ஆட்சியில் திருக்காளத்தி பகுதி யில் யாதவராயர்கள் குறுநில மன்னராக இருந்தார்கள்,

1146-1173இல் 2ஆம் இராஜராஜன் ஆட்சியில் உறுதியும் ஒழுங்கும் இழந்துவிட்டது. சோழர்களின் மேலாட்சி யிலிருந்து தெலுங்கு நாட்டு குறுநில மன்னர்கள் நழுவி னார்கள், [16]

3ஆம் குலோத்துங்கன் 1178-1218 தெலுங்கு குறுநில மன்னர்களில் நல்ல சித்தன் காஞ்சியை 1192இல் பிடித்து விட்டான். அடுத்த ஆண்டிலேயே தெலுங்கு நாடும் குலோத் துங்கன் வசமாயிற்று. பக். 288. தமிழக வ. ம ப.

இக்காலங்களில் தொண்டைநாட்டிலோ, சோழநாட் டிலோ, பிரதாபருத்திரன் பற்றி ஏதுமில்லை. காகதீயர்

களால் படையெடுத்துப் பிரதாபருத்திரனைக் கொன்றார்கள். அவன் தம்பி மகன் கணபதியைச் சிறைப்படுத்தினார்கள். இங்கல்ல—

—கி. பி. 1196இல்—ஆந்திரத்தில். என்பது வரலாறு

தெலுங்கு நாட்டின் சில பகுதி சோழ நாடாவதும் மீண்டும் தெலுங்கர் வசமாவதும் வாடிக்கையான வரலாறுதான்! எனவே கம்பரால் பிரதாபருத்திரன் படையெடுத்து வந்துபோர் தொடுத்ததாக வரலாறு இல்லை.

பண்டிதர் ஆ. கி. நாயுடு அவர்கள் சில தெலுங்கு சொற்கள் கம்பராமாயணத்தில் இடம்பெற்றுள்ளது குறித்துப் பிரதாபன் கதையை ஆதரிக்கிறார். பிரதாபனின் சொந்தக்காரர் என்றும், கம்பர் தெலுங்கர் என்றும் அவர் குறிப்பிடுகிறார். [17]

10 தெலுங்குச் சொற்களுக்காக அவர் தெலுங்கராகப் பிறந்திருக்க வேண்டுமானால் 10,000 பைந்தமிழ்பாக்களுக்காகக் கம்பர் தமிழராகப் பிறந்திருக்கக் கூடாதோ?

## கம்ப இராமாயணத்தில் தெலுங்குச் சொற்கள்

ஊமை — **மூங்கையர்** சொற்பெற்றென்ன
— இராவண மந்திர படலம்

கொசு — **மகரதம்** அனையவர்
— திரு அவதாரப் படலம்

மூங்கில் — **வெதிர்** பொன் கோலினர்
— அயோத்தியாகாண்டம்

காற்று — **காலின்** மதலை
— கிட்கிந்தா படலம்

குவியல் — அவரிழை குப்பை
— பிலநீங்கு படலம்

நேற்று — நென்னல் கண்டதிருமேனி
—கடல் காண்படலம்

சோம்பேறி — தள்ளவாரி நிலைமையும்
—ஒற்று கேள்வி படலம்

அதிசயம் — அக்கட இராவணர் கடைந்த
—இராவண மந்திர படலம்

அவ்வாறு — ஆந்து செய்துவான்
—இராவண வதை படலம்

நீர் — வெள்ளம் (மலையாளம்)
—அரசியல் படலம்

தெலுங்குச் சோழர்களும், பல்லவர்களும், யாதவர்களும் காஞ்சி பல்லவரிடம் குறுநில மன்னவராக இருந்து, தெலுங்கு மொழியும். இலக்கியங்களையும் பாடினார்கள் சோழராட்சி துவங்கிய பிறகும் இவை நீடித்தன என்பதற்கு ஆதாரமுண்டு.

கம்ப இராமாயணத்தில் சில தெலுங்கு சொற்கள் இடம் பெறுவதற்காகச் கம்பர் தெலுங்கு தேசம் சென்றார் என்பதை வ.வே.சு. அவர்கள் மறுத்தும், சேரமன்னனிடம் சென்றார் என்பதை ஆதரித்தும் எழுதியுள்ளார் [18]

1ஆம் பிரதாபருத்திரன் காலம் 1162 - 1196 இவன் கதைபோலவே வேறு ஒரு கதை. இதற்கும் ஒருபாட்டுதான் ஆதாரமாகக் கூறுவார்கள்.

ஆதொண்டைச்சக்ரவர்த்தி 1063 - 1070 கம்பருக்கு உபகாரம் செய்தபோது பாடியது என்று தனிப்பாடலில் வருகிறது.

**வெற்றிபுனை தத்திக்கும் வேம்புக்கும் பெண்ணைக்கும்**
**சுற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே—கற்றோர்**
**திறம் தாங்கும் தாங்கும் செகமுழுவதும் தாங்கும்**
**அறம் தாங்கும் தொண்டை அரசு,**

அறம் தாங்கும் ''தொண்டை அரசு'' என்றுதான் பாடல் கூறுகிறது. ஆதொண்டை சக்ரவர்த்தி என்று கூறவில்லை.

**கருத்து**

அரசு மரத்து நிழல், அத்தி, வேம்பு, பனை மரத்து நிழலை விட, மூவேந்தர்களை விடத் தொண்டை மன்னன் சிறப்பு என்பதாக அறத்தைத் தாங்கும் இதயம், உலகைத் தாங்கும் தோள்கள், கற்றோரை உரிய வகையில் தாங்கும் இலக்கண நூல் தொண்டைமண்டல அரசு எனலாம்.

இப்பாடல் நாவலர் சரிதையில் இல்லை. இப்பாடல் தொண்டை சக்ரவர்த்தியைக் குறிப்பதாகவும், அவன் காலம் (1063-1070) வீரசோழன் மகனாகக் குறிக்கப்பட்டுள்ளது. இவன் அவையில் புத்தமித்திரர் வீரசோழிய செய்தார்.

வேறு ஒரு நூல் 2ஆம் குலோத்துங்கன் (1135-1150) என்கிறது.

**முதலாவது காரணம்**

ஆதொண்டை சக்கரவர்த்தி காஞ்சி பல்லவர்களை வென்று காஞ்சியைக் கொண்டமையால் தொண்டை நாடு ஆனது என்றும்,

சோழர்கள் காலத்தில் தொண்டை நாட்டில் கம்பர் பெயரால் ''கம்பநாடு'' வழங்கி வந்ததாகக் கூறப்படுகிறது.

இப்பாடலைக்கொண்டு கம்பர் காலம் கூறப்படுகிறது என்றால், பிரதாபருத்திரன் காலமா? ஆதொண்டைச் சக்கரவர்த்தி காலமா? கம்பர் காலம் எது? ஒன்றும் பொருந்துவதாக இல்லை.

**இரண்டாவது காரணம்**

தொண்டை நாடு, என்பதற்கு வெள்வேற் கிள்ளிக்கும் பீலிவலை என்ற நாகக்கன்னிக்கும் தொண்டைமான் இளந்திரையன் பிறந்தான்[19] இவனுடைய பெயரால் தொண்டை மண்டலம் தோற்றுவிக்கப்பட்டது என்பது சரியல்ல, கல்லணைக் கட்டியவனும், காவேரிக்குக் கரை கட்டியவனுமான கரிகாலனே தொண்டைமண்டலத்தைத் தோற்றுவித்தவன்.

**மூன்றாவது காரணம்**

மகேந்திர பல்லவனே தொண்டைமாலை அணிந்தவன் கி. பி. (600-659) என்று தளவனூர் குகை கல்வெட்டு கூறுகிறது.

**நான்காவது காரணம்**

பல்லவர் என்ற சொல்லுக்குத் தொண்டையர் என்ற சொல்லும் ஒரு பெயரையே குறிக்கும். சாதவாகனப்பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகு பல்லவர்கள் காஞ்சியில் தங்கள் பெயரில் தொண்டை மண்டல ஆட்சி தொடங்கினார்கள்[20]

எனவே, தொண்டையரசு என்று முடிகிற பாடல் எந்த மன்னனையும் குறிக்காது. அதைக்கொண்டு கம்பர் காலம் குறிப்பிட இயலாது. என்பதையும் அறிந்தோம்.

கம்பர் வேந்தர்களைப் பாடிச் சிறப்பித்ததாக ஆராய்ச்சியாளர் எவரும் குறிப்பிடவில்லை. மாறாகப் போர்க்களத்தினும் நெற்போர் களமே சிறப்பெனப் பாடியுள்ளார்[21]

கம்ப இராமாயணப் பாடல். 30-50 இதைக் குறிக்கும் 9ஆம் நூற்றாண்டுக் கம்பராமாயணம் புஞ்சை பயிரைச் சிறப்பித் துள்ளது. இதை 10 ஆம் நூற்றாண்டுச் சூடாமணியும் பிரதிபலிக்கிறது. [22]

24 காத சோழ நாட்டைத் தவிரப் பிற இடங்களைக் கடல் கவர்ந்ததா? நீ சினம்கொண்டால் எமக்கு வேறு இட மில்லையா? என மன்னனைக்கேட்ட ஒரே கவியரசர் கம்பர் தான்.

மன்னனைப்பாடி பரிசு பெற்றார் என்று எங்கும் கூறப் படவில்லை. நாட்டு மக்களைப் பாடிப் பரிசுகள் பெற்ற தாகப் போற்றப்படுகிறது. [23]

**மன்னனைப் பாடாத மாப்புலவர் வாழ்வதற்குப்**
**பின்னர் அந்நாட்டில் பிழைப்பில்லை — உன்னியுளம்**
**வெம்பிப்புலவர் வேறு வேறு நாடு உற்றார்**
**கம்பர் இதற்கோர் எடுத்துக்காட்டு [24]**

எனவே, மன்னவனும் நீயோ? என்ற பாடலும் காதம் இருபத்தி நான்கு ஒழிய என்ற பாடலும்

கம்பர் இராமாயண அரங்கேற்றம் முடிந்து அம்பிகாபதியை, மன்னன் ஆதித்த சோழனால் கொலை செய்யப்பட்டபிறகு, அமராவதி காதலனை இழக்க, தானே காரணம் என உணர்ந்து தற்கொலை செய்துகொண்ட பிறகு, சோழமகன் கன்னரத்தேவனால், கம்பர் மகள் காவேரி தன் கற்பைக் காத்துக்கொள்ளவும், தந்தை கம்பரின் கௌரவத்தை நிலைநிறுத்தவும் கம்பங்குதுரில் இறங்கி உயிர்துறந்த பிறகு, கம்பர் ஆதித்த சோழனிடம் சென்று நீதி கோரி இருக்கவேண்டும். இதன் காரணமாகக் கன்னரத் தேவன் நாடு கடத்தப்பட்டிருக்க வேண்டும். அல்லது அவன்தானே தன் பாட்டனார் நாட்டுக்கு ஓடியிருக்க

வேண்டும் இந்நிலையில் கம்பருக்கும் ஆதித்தனுக்கும் நடந்த வாக்குவாதம்தான் மேற்படி இருபாடல்களைக் கம்பர் பாட நேர்ந்து இருக்கவேண்டும்.

ஆதித்தன் கம்பரை நாடு கடத்தியதாக ஆதாரம் ஏது மில்லை. மேற்படி பாடலைக்கொண்டு சிலர் அவ்வாறு எழுதி இருக்கலாம். கம்பருக்கு ஏற்பட்ட ஆற்றொனா மனத்தாங்களே அவ்வாறு பாடநேர்ந்தது, பாடிவிட்டுத் தானே தேச சஞ்சாரம் சென்று பிறநாடுகளிலும், பாண்டிய சேர நாட்டிலும் சிறப்புற்று இருந்தபோது பராந்தகன் காலத்தில் தூது அனுப்பித் தன் ஆசானான கம்பனை அழைத்து ஆதரித்தான் எனக் கருத இடமுண்டு.

**எண்ணிய சகாத்தம் என்ற பாடலில், சகாத்தம், கம்பர** நாடன், என்ற இரு சொற்களும்கூடப் பதினாராம் நூற்றாண்டில் தோன்றிய புனைந்துரையே என்று பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை கூறியுள்ளார். [25]

கி. பி. 5ஆம் நூற்றாண்டிலேயே சக ஆண்டு கணக்கு முறை தமிழகத்தில் வழங்கியுள்ளது. அறிஞர் பால் நாடார் கூறியுள்ள சான்று.

The Problem of the Life and Age of Kamban in Tamil Culture VOL. VI. 1. AND 2. AND VOL.VII. [26]

பாண்டிய நாட்டு ஐவர்மலைக் கல்வெட்டு ஒன்று 792ஆம் சக ஆண்டு குறிப்பிடுகிறது.

திருப்பாதிரிப்பூலியூரில் இருந்த சமணப்பள்ளியில் லோக விபாகம் என்னும் சமண நூலின்படி சகஆண்டு 380இல் கி. பி. 458இல்) எழுதப் பெற்ற அந்நூலில் ஜைனர் ஆற்றிய தமிழ்த் தொண்டைக் கருதுவோர் அவர்கள் போற்றிய சகாப்த முறை, படிப்படியாக எய்திய செல்வாக்கை அறியலாம். [27]

கி. பி. 792இல் எழுதப்பட்ட கல்வெட்டில் சகாப்தக் கணக்கு இடம் பெறுமானால் கி.பி.885இல் எழுந்த எண்ணிய சகாப்தம் 807 என்று குறிப்பிடுவதில் பொருத்த மின்மை ஏதுமில்லை.

**''கம்பநாடுடைய வள்ளல் கவிச்சக்கரவர்த்தி பார்மேல்**
**நம்பு பாமாலை யாலே நரருக்கின் றமுதம் ஈந்தான்.**
—இரா. தனியன்

நரருக்கும் இன்று அமுதம் ஈந்தான் என்பதே பாடம். பெரும்பான்மையான சுவடிகளில் உள்ளதும் அதுவே.

1. நரர்க்கு இன்று அமுதம் ஈந்தான் என்னும் பாடத்தைப் பேராசிரியர் வரிப்பதிலிருந்தே கம்பன் அரங்கேற்றியபோது எழுந்த பாராட்டு இது என்று அவர் கருதினார் என்பது விளங்கும்[28]

2. பதினாராம் நூற்றாண்டுப் புனைந்துரையாக; எண்ணிய சகாத்தம் என்பதை, எண் நூற்று ஏழு, எனப் பிரித்து பொருள் கொள்ளலாம் என்பர். பிறகு ஆயிரம் சேர்த்து 1000+107=1107. கி. பி. 1185 என்பது இராகவ ஐயங்கார் கொள்கை. [29]

இப்படி ஏற்பதால் இது போலிச் செய்யுள் என்ற வாதம் அடிபட்டுப் போகிறது; பேரெண்ணான ஆயிரத்தை நீக்கி எண், நூற்று ஏழு, எனக் கொள்வது வழக்கென்று கூறும். இரு அறிஞரும் அவற்றிற்கு ஒரு சான்றோ, உதாரணமோ கூறினாரில்லை. வலிந்து பொருள் கொள்ளுவதாக உள்ளது.

''ஆவின் கொடைச்சரகர் ஆயிரத்து நூறு ஒழித்துத் தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு'' என்ற பாடலில்

ஆயிரத்தோடு நூறு சேர்த்து 1100 கி. பி. 78 ஆக 1178 எனப் பொருள் கொள்ளுவது பொருந்தாது. அதனாலேயே,

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் வெள்ளிவிழா மலராக வந்த சுந்தரகாண்டம் முதற் பகுதி முன்னுரையில் ஆயிரத்து நூறு ஒழித்து என்ற பாடலில் 900 (கி. பி. 978) (ஆயிரத்தில் நூறு கழித்து) பொருள் கொண்டனர். எனவே, கி. பி. 978இல் அரசாண்ட உத்தமசோழன் காலமே கம்பர் காலம் என முன்னுரைக்கூறுகிறது. [30]

இடரில்லா எண்ணிய சகாத்தம் 807ஐ விடுத்து இடர்மிகுந்த ஆவின் கொடை சகரர் பாடலை ஏற்பது பொருத்தமன்று,

கம்பர் 12ஆம் நூற்றாண்டு என்பதற்குத் திரு. இராகவையங்காரும் வையாபுரிப்பிள்ளையும் ஓர் அகச்சான்றும் கூறுவர், அது,

மருத்துவமனைப்படலத்தில் பாடல்

**வன்னி நாட்டிய பொன் மௌலி வானவன் மலரின் மேலோன்**
**கன்னி நாட்டிருவைச் சேர்ந்த கன்னனுமாளும் காணிச்**
**சென்னி நாட்டெரியல் வீரன் தியாகவிநோதன் தெய்வப்**
**பொன்னி நாட்டுவமை வைப்பைப் புலன் கொள நோக்கி போனான்** [31]

இப்பாடலில் வரும் தியாக விநோதன் என்ற சிறப்புப் பெயர் 3ஆம் குலோத்துங்கனையே கம்பர் குறித்தார் என்பது அவர் கொள்கை. இதற்குத்திட்டமான நேரான சான்று எதுவுமில்லை. சோழமன்னர்கள் யாவருமே தியாக விநோதர்களாகப் பிற்பகுதியில் சாசன சான்று காட்டியுள் ளோம். அவை கல்வெட்டுகளில் தெளிவாகின்றன. இதனை உ.வே.சா. அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள்.

சீவக சிந்தாமணி, சூளாமணியின் பாதிப்பு. கம்பராமாயணத்தில் காணலாம் எனச் சில நூல்கள் கூறியுள்ளன. இதுவும் கம்பர் கால ஆய்வுக்கு இடையூரை விளைவித்தவற்றில் ஒன்று. இதனைச் சரியாகக் குறிப்பிடவேண்டுமானால் கம்பராமாயணத்தின் பாதிப்பு எனலாம்.

இதனைக் ''கம்பனும் மில்டனும், ஆசிரியர் வாயிலாகவே காண்போம்.

சீவக சிந்தாமணிக்கும் சூளாமணிக்கும் கம்பன் கடன் பட்டிருப்பதால் அவற்றுக்கு முன்பே கி. பி. 885லேயே கம்பன் காவியம் அரங்கேறியிருக்க முடியாது என்பது அண்ணாமலைப் பவளவிழா மலர் தரும் மூன்றாவது வாதமாகும்.

1. கம்பநாடன் என்பது பிற்காலத்திய பாடல் என்பதும்

2. ஆயிரத்து நூறொழித்து என்பது கி. பி. 978 என்பதும்

ஆனால் சிந்தாமணியின் கருத்துகளும் சூளாமணி விடுத்த முறைகளும் கம்பன் காவியத்தில் அமைந்திருப்பதாக முடிவு செய்வது எளிதல்ல. கம்பன் நூலில் மூன்று சிந்தாமணிக் கருத்துக்களைப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை எடுத்துக்காட்டுவார். ஆனால், அவற்றைக் கொண்டு இராமாயணம் சிந்தாமணிக்குக் கடன்பட்டிருப்பதாக நிறுவமுடியாது. எடுத்துக்காட்டாக,

**வாளினாற் பேசல் அல்லால்**
**வாயினால் பேசல் தோற்றேன்**

—சிந்தாமணி

**வில்லினால் சொலின் அல்லது**
**வெந்திறல் வெற்கச்**
**சொல்லினால் சொலக்கற்றிலம்**
**யாம் யெனச் சொன்னான்**

—கம்ப இராமாயணம்

இவை தொடர்புடையனவேயானால் மக்கள் நாவில் உயிர்த்தெழுந்த ஒன்றையே இங்குக் கவிஞரும் அருள் கின்றனர். என்பதே பொருத்தம்.

அதுபோலவே,

**''துன்பு உளது எனின் அன்றோ சுகம் உளது!''**

—இராமாயணம்

**''துன்பம் உள்ளவர்க்கு அலால்**
**இன்பமில்லையாதலின்',**

—சிந்தாமணி

சிந்தாமணி செய்யுலையே தழுவியது என்று எவ்வாறு சாற்றமுடியும்? பாமர மக்களும் வழிவழியாக இக்கருத்தை யும் சொற்கோவையையும் ஆண்டிருப்பர் என்பது எளிதில் விளங்கும் அன்றோ?

விருத்தம் என்னும் பாவினத்தில் எண்ணிலாக் கதிகளை யும் சந்தங்களையும் படைத்துவரும் தமிழின் ஓசை நய மெல்லாம் ஒளிரச் செய்தவருமான கம்பர் விருத்த முறைக் கும் ஓசை நயத்திற்கும் சூடாமணிக்குக் கடன்பட்டிருப்ப பதாக வெள்ளிவிழா மலர் விளம்புதல் புதுமையே. கம்பர் சிந்தாமணிக்குக் கடன்பட்டிருப்பதாகக் கூறிய பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையும் அவ்வாறு கூறவில்லை.

கம்பர் பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்பதற்கு ஒரு ஆதாரம் தரும் வெள்ளிவிழா மலர் பில நீங்கு படலத்தில்,

**புவிபுகழ் சென்னி பேரபயன் தோள் புகழ்
கவி கடமனை யெனக் கடகராசியும்
கவியுடைத்தூசு மென் சாந்துமாலையும்
வரிழைக்குப் பையும் அளவிலாதது.**

கிட்கிந்த — 828

மேற்படி பாடலில் அமலன் (பேரபயன்) என்னும் பெயரால் ஒரு சோழன் பெயர் குறிப்பிடுவதாகக் காட்டி கி. பி. 970—985 உத்தமசோழனையே குறிப்பிடுகிறது. என்பர். ஆனால் சோழ அரசர்கள் **பலர் அமலன்** எனக் கூறப்பெறுவர். எடுத்துக்காட்டாக, 2ஆம் குலோத்துங்கனை ''அமலன்'' எனக் கூத்தர் பாடியுள்ளார்.[32]

—சோழனுலா கண்ணி 157

எனவே கி. பி. 871—907 ஆதித்த சோழன் காலத்தில் கம்பர் வாழ்ந்தார் என்பதற்கே அகச்சான்று உண்டு. என்று கம்பனடிப்பொடி, சா. கணேசனவர்கள் குறிப்பிட்ட ''ஆதித்தன்'' குல முதல்வன் மனுவினையார் அறியதார்'' என்ற பாடலை விரித்துக்கூறி என், என்பது அன், என மாறிய காலத்தில் கம்பன் தோன்றினான் என்றும் அளபெடை கம்பனின் ஆட்சி பெருக்கமாகும் என்றும் பொய்க்கால் நடை பயில்வோர் வழக்கொழிந்த இலக்கணக் கூறுகளை விடாப்பிடியாகப் பற்றி ஒழுகுவர், என்பது உண்மை. கம்பர் அவ்வாறு என்று, யாவரும் கூறத்துணியார் என்பர். தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்
;

பழகு தமிழை விழுமிய நிலைக்கு உயர்த்தி மொழியை வாழ்வித்து புகழடைந்தவர் கம்பர். கம்பனில் விளங்கும் அளபெடை ஆட்சியும் 'என்' விகுதி வழக்கு கம்பர் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்பதை உறுதி செய்கின்றன. என்பதே ஏற்புடைத்து என்கிறார்.[33]

கம்பர் காப்பியம் செய்த காலம் கி, பி. 875— 880 கம்பரது காலம் கி. பி. 830—900. என்று ஜெகவீர பாண்டியனார் குறிப்பிடுகிறார். [34]

நத்தமேட்டு வேடியப்பன் கோயிலில் உள்ள நடுகல்லில் சகயாண்டு எண்ணூற்றுத் தொண்ணூற்று இரண்டு என்று எழுதியுள்ளது எனக் குறிப்பிட்டுச் சகஆண்டு 892 கி.பி.970 எனவும் ௸ பக்கத்தில் விளக்கப்பட்டுள்ளது; எனவே சகஆண்டு வழக்கம் 9 ஆம் நூற்றாண்டிலும் தொடர்ந்து இருந்து வந்தது என்பது தெளிவு. [35]

**தியாக விநோதர்கள் சாசனாதாரம்**

1. முதலாம் ராஜராஜன் தியாகமே அணியாகக் கொண்டவன்.

—S.I.I. Vol. V. No. 465

2. வீரராஜேந்திரன் தியாகக் கொடியும் வீரக்கொடியும் கொண்டவன்.

—IEPI. Graphia. in Dika. Vol. X. VI. 38

3. அதிராஜேந்திரன் தியாகக் கொடி கொண்டவன்.

—Sid. Vol. VII. No. 11

4. முதலாம் குலோத்துங்கன் வீரமும் தியாகமும் கொண்டவன்.

—SII. Vol. V. No. 1003

எனவே தியாக விநோதன் எனக் கம்பர் குறித்தார் என ஆய்வாளர்கள் கூறுவது, ஒரு சோழனை மட்டும் குறிக்காது என்பது தெளிவு. இதேபோல் பேரமலன் என்றும் கம்பர் குறித்தார் என்று கிட்கிந்தாப் படலப் பாடலையும் மருத்துவப் படலப், பாடல்களையும் சுட்டிக் குறிப்பாக 3ஆம் குலோத்துங்கனைப் பெரும்பாலோர் குறிப்பிடுவது சரியாகாது.

ஒட்டக்கூத்தரும், புகழேந்தியும் கம்பரும் சம காலத்தவர் எனப் புனைந்த சில முரணானத் தனிப்பாடலையும் இரண்டொரு கற்பனைச் செய்தியினையும் கொண்டு நம்பி வந்தமைக்கு இப்பாட்டினையும் இணையாக்கித் துணிந்தனர் என்றே கொள்ள வேண்டியுள்ளது. இத்துடன் ''திருக்கோடிக்கா'' கல்வெட்டு கம்பரின் **சடையப்பனைக்** குறிப்பதாக நம்பப்பட்டதும் கொண்டே இம்முடிவுக்கு வந்துள்ளார்கள் என்பதைத் தவிர வேறில்லை.

கம்பர்காலம் 12ஆம் நூ...பிற்பகுதி 13ஆம் நூ...முற்பகுதியெனத் தவறாக நிர்ணயித்த பேராசிரியர் எஸ். வையாபுரி பிள்ளை அவர்களின் கூற்றுத் தமிழ் அறிஞர் பலரால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. [36]

சென்னை கம்பன் கழகம் 9-10-1975இல் கம்பன் விழாவில், எம். அருணாசலம் அவர்களின் ஆங்கிலக் கட்டுரையில் கம்பர் காலம்.

10ஆவது கட்டுரையில் பல ஆதாரங்களைக் காட்டிக் கம்பரது காலம் 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும் என்று ஐயம் திரிபு அற நிலைநிறுத்தியுள்ளார். இதுதான் பல தமிழ்ச் சான்றோர்களின் முடிந்த முடிவாகும்.

தவிர கம்பரும் ஸ்ரீ வைணவ ஆசாரியருமான ஸ்ரீமந் நாதமுனிகளும் சம காலத்தவர் என்றும் அப்போது ஆண்ட சோழவரசன் கம்பராமாயணத்தை அரசவையில் அரங்கேற்ற இசையாததால், கம்பர் ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாதர் ஆலயத்தில் மேட்டழகிய சிங்கர் சன்னதிக்கு முன்பாகத் தன் காவியத்தை ஸ்ரீமந் நாதமுனிகள் அவர்கள் தலைமையில் வைணவப் பெருமக்களின் மத்தியில் அரங்கேற்றினார் என்பது வரலாற்று நூல்கள் மூலம் அறிய கிடக்கின்றது.

ஸ்ரீமந் நாதமுனிகள் 9ஆம் நூற்றாண்டாகும் என்பது அனைவராலும் ஒப்பி முடிந்த முடிவாகும். ஸ்ரீவைஷ்ணவ சபாவின் பொன்விழா மலரில் ஸ்ரீமந் நாதமுனிகள் வாழ்ந்த காலத்தை கி. பி. 823—917 என்று குறிப்பிட்டுள்ளது; ஆகவே ஸ்ரீமந் நாதமுனிகள் தேடி எடுத்துத் தொகுக்கப் பட்ட நாலாயிர திவ்யபிரபந்தம் 9 ஆம் நூற்றாண்டுக்கு முன்பே வழக்கில் நெடுங்காலமிருந்து பின் வழக்கொழிந்து இருந்தன என்பது பெறப்படும். அவற்றை மறுபடியும் உத்தாரணம் செய்யப்பட்டதை ஸ்ரீமந் நாதமுனிகளின் சரித்திரத்திலிருந்து அறியலாம். [37]

மேற்குறித்த கம்பர் காலம் முதலாம் ஆதித்தசோழன் அரசாண்ட கி. பி. 871—907 என்பதே நிருபணமாகிறது என்பதைக் கவனத்தில் கொண்டால் கம்பர் காலம் 840—922 என்ற நமது ஆய்வுக்கு அணியாகிறது.

## அடிக்குறிப்பு

1. சக்தி ராமாயண முன்னுரையில் கு. அழகிரிசாமி
2. சக்தி ராமாயண முன்னுரையில் கு. அழகிரிசாமி
3. கம்பன் யார் (தமிழ் அமுதம்) டி. கே. சிதம்பரனார்
4. 1. இஸ்வாகு குலதனம் பக்.58 மற்றும் 2. திருவரங்க கோயிலில் கம்பர் மண்டபம்
5. 1, டாக்டர் கே கே. பிள்ளை, தமிழக வரலாறு மக்கள் பண்பாடும் பக்.245
6. நீலகண்ட சாஸ்திரி தென்னிந்திய வரலாறு பக்.257
7. கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகியா? புலவர்கு திருமேனி.

8. தமிழ்ப்புலவர் அகராதி பக்.98

9. செந்தமிழ் இதழ் 1910

10, பழைய வீரசோழிய உரையில் கண்டபடி ஆசிரியர் மா.வ.

11. கம்பனும் மில்டனும் பக்கம் 250

12. திருவரங்கம் கோயிலொழுகு.

13. கம்பர் வரலாறு பக்.70

14. செந்தமிழ். சிலம்பு 13. பக்கம் 278

15. தமிழ்ப் புலவர் சரிதை

16. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக்கம். 288

17. பண்டிதர் ஆ. கி. நாயுடு கவிச் சக்கரவர்த்தி கம்பர் பக்.70

18. வ. வே. சு. கம்பர் ஆய்வுக் கட்டுரை பக்.22

19. தமிழக வரலாறும், மக்கள் பண்பாடும் பக்.186

20. வரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் எஸ். கிருஷ்ண சாமி "பண்டைய இந்தியா"

21. சக்தி ராமாயண முன்னுரை

22. ஆந்திர நாடு எது? சரஸ்வதி பாண்டுரங்கம்

23. பண்டிதர் ஆ. கி, நாயுடு கவிச்சக்கரவர்த்தி கம்பர் பக். 70

24. பண்டிதர் ஆ. கி. நாயுடு கவிச்சக்கரவர்த்தி கம்பர் பக். 70

25. கம்பனும் மில்டனும் பக்கம் 247

26. கம்பனும் மில்டனும் பக்கம் 247

27. கம்பனும் மில்டனும் பக்கம் 247

28. கம்பர் காவியம் பக்கம் 127

29. தமிழ்ச்சுடர் மணிகள் பக்கம் 131

30. அண்ணாமலைப் பல்கலைக்கழக வெள்ளி விழா மலராக வந்த சுந்தரகாண்டம் முன்னுரை.

31. யுத்தகாண்டம் மருத்துமலைப் படலம் 26

32. குலோத்துங்கன் சோழனுலா ஒட்டக்கூத்தர்

33. கம்பனும் மில்டனும்

34. கம்பன் கலைநிலை ஓர் ஆய்வு. பக்கம் 87 கம்பர் காப்பியத்தை ஆய்வுசெய்த பெரிய நூல் இதுவே.

35. தமிழ்நாடு கல்வெட்டுகள் நெ, 6. செங்கம் நடுகற்கள் தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத்துறை தொடர் எண் 1971-119

36. சப்தகிரி மார்ச்சு 1991

37. சப்தகிரி மார்ச்சு 1991

# 11. கம்பர் பெயர்க் காரணம்

## கம்பர் என்ற பெயர்கூட, காலம் காட்டு கிறது!

கம்பனுக்குக் கம்பர் என்ற பெயர் எப்படி வந்தது? என்று பலவாறு ஆராயப்பட்டுள்ளது. ஒரு பெயர் சொல்லை ஆராய வேண்டிய அவசியம் என்ன? கம்பர் என்ற பெயர் அதற்கு முன் தமிழகத்தில் யாருக்கும் வைக்கப்பட்ட தில்லை. அதுதான் காரணம். ஒவ்வொருவரும் கம்பர் பெயர்க்காரணம் கூறிய விதம்.

ஏகம்பர் என்ற காஞ்சி ஏகாம்பரநாதர் (சிவனார்) பெயர் வைக்கப்பட்டு ஏகாரம், குறைத்துக் கம்பர் ஆனது.

தாய் தந்தை இட்ட பெயர் ஏகம்பனே, கவித்துவப் புகழ் பெற்றபோது கம்பராக மருவியது, இது பெரும் பாலோர் கருத்து.

குருகுலத்தில் 'கம்பம்' போல் மந்தமாக நிற்பான் அதனால் கம்பர்.

கம்பங்கொல்லையைக் காத்து வந்தான், அதனால் கம்பர்.

கம்பு கையில் கொண்டு அரசவைக்கு வந்தபோது இந்தக் கம்பனா? என மன்னன் கேட்டார். அதனால் கம்பர், இப்படிப் பலவாறு பல நூல்களில் உள்ளது.

எவருக்கும் அந்தப் பெயர் இல்லாமையால் தான், இவ்வாறு தங்கள் தங்கள் இஷ்டப்படி கூறியுள்ளார்கள். எதற்கும் ஆதாரமில்லை. கம்பர் பிரபலமான பின் கம்பன் என்ற பெயர் பலருக்குச் சூட்டப்பட்டுள்ளது. ஒரு மன்னன் தேவிக்கும் இப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. அதைப் பார்ப்போமாக.

**முதலாவது கம்பர்**

கவிச்சக்கரவர்த்தி கம்பர்

**2 ஆவது கம்பர்**

முதலாம் ராஜ ராஜனின் மணியனான விக்கிர சிங்கமூவேந்தவேலன் எனும் படைத்தலைவன் இயற்பெயர் கம்பர். இவர் சேர மண்டலத்தே படையெடுத்து அங்கிருந்து கொணர்ந்த மரகததேவரை இராசராசன் அன்பால் பெற்றுத் திருபுறபழனத்தில் உள்ள ஆலயத்தில் கி.பி. 999இல் எழுந்தருளிவித்தான். த.வ.ம.ப

**3 ஆவது கம்பர்**

கம்பவர்மபல்லவன் (870—912) இவன் காலத்தில் சடையப்பர், 1000, காடியும் 500 காடியும், நெல், ஈழத்து வறுமை போக்கக் கொடுத்தார். (அப்போது கம்பர் வாழ்ந்து வருகிறார்) [1]

**4 ஆவது கம்பர்**

திருக்கோவிலூரில் உள்ள சாசனத்தில் இரண்டு வெண்பாக்களில் ஒன்று ''வீதிவிடங்கன் கம்பன்'' ஆலியன்மான் சோழன் அதிகாரி என்றும் [2] உள்ளதாகும்.

**5ஆவது கம்பர்**

மற்றொன்றில் காவலன் வாழ்க்கம்பன் எனக் கூறுகிறது.

இவ்விரு பெயரும் ஒருவரே எனக் காட்டுகிறது. இவன் சோழவம்சத்தைச் சேர்ந்தவனும் சோழன் அதிகாரியாய் இருந்து குறுநில மன்னனாகவும் இருந்தவனாக அறியலாம்.[3]

உதாரணம். உத்தம சோழனின் மகன் மதுராந்தக கண்டராதித்தன், ராஜராஜன் ஆட்சியின் முக்கிய அதிகாரி யாக அமர்த்தப்பட்டான்.[4]

திருமுடி சூட்டுப்படலம் 33 பாடல் ''ஆலி நாட்டுச் சந்தனப் புயத்துவள்ளல் சடையனே'' என்ற பாடலைக் கொண்டு மேற்கண்ட ஆலியன்மான் சோழன் அதிகாரியைக் கம்பர் பெருமானாகக் கருதி ஒருசிலர் தங்களையும் குழப்பிக் கொண்டு பின் ஆய்வோரையும் குழப்பிவிட்டார்கள்.

''ஆலிநாட்டுச் சந்தனப் புயத்துச்சடையன், என்றுதான் கூறுகிறது. ஆலியன்மான் சோழன் கம்பனையோ, அதிகாரியையோ, குறிக்காது. அந்தக் காவலர் கம்பனை இந்தப் பாடலைக் கொண்டு சடையனோடு சேர்த்து ஆலி நாட்டு அரசனாகக் கம்பர் இருந்தார். ஆகவே, கம்பர் காலம் அவனாட்சி காலம் என்பாரும் உள்ளனர். இவை பொருத்தமற்றது.

**6ஆவது கம்பர்**

களிக்கம்பர் 63 நாயன்மார்கள் வரிசையில் 42இல் உள்ள நாயன்மார்.

**7ஆவது கம்பர்**

முதற்குலோத்துங்கன் 1070—1118 தேவியரின் ஒருவள் பெயர் கம்பதேவி எனப் பெயர் பெற்றுள்ளாள்.[5]

காஞ்சியை அடுத்த சிற்றீச்சம் பாக்கத்திற்கு அவள் விருப்பமாக "கம்பதேவி நல்லூர் எனப் பெயரிடப்பட்டது.[6]

வடஆற்காடு பிரம்மதேயம் என்ற பிரமதேசம் என்ற ஊருக்கும் "கம்பதேவி நல்லூரர் எனப்பட்டது.[7]

**8ஆவது கம்பர்**

கம்பனார் கோயிலைக் செம்பொன்னால் வேய்ந்த சோழன் அதிராஜேந்திரன் (1067—1070) இவன் காலத்தில் கம்பர் வாழ்ந்ததாகவும் சொல்லப்படுகிறது. கம்பரே எடுத்துக்காட்டாக விளங்குவதாலும் கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான்.

**9ஆவது கம்பர்**

தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி எண் 5இல் இடம் பெற்றுள்ள சென்னை திருவொற்றியூர் ஆதிபுரீச்சுவர ஆலயக் கல்வெட்டு ஒன்று கவி ஐயன் கம்பன் என்று கூறுகிறது. அதன் காலம் 9ஆம் நூற்றாண்டே. நாம் நேரில் பரிசோதித்தோம்.

இக்கம்பரை, 9ஆம் நூற்றாண்டுக் கவிச்சக்கரவர்த்தி கம்பர் தான் என்றும்[8]

12ஆம் நூற்றாண்டில்தான், கவிச்சக்கரவர்த்தி கம்பர் வாழ்ந்தார் என இக்கல்வெட்டு கூறுவதாகவும், (சோழ மன்னன் ஒருவனின் 7ஆம் ஆட்சி ஆண்டைக் குறிப்பதால்[9] முதலாம் பராந்தகனின் ஆட்சி கி. பி. 914ஐ குறிப்பதாக நாமும் கருதினோம். அக்கல்வெட்டில் சதுரானன பண்டிதர், பெயரும் கொற்றமங்களமுடையான் கண்ட ராச்சனான் என்றும் ("கண்டராச்சபுரம்" என்ற ஊர் பெயரும் கொண்டுள்ள கண்டராதித்தன் (பராந்தகன் மகனை) அது குறிப்பதாகவும் உள்ளது.) ஆனால் தமிழகத்

தொல்பொருள் துறையினரிடம் நாம் நேரில் சென்று இக் கல்வெட்டு ஆவணத்தைப் பார்வையிட்டு வினவியபோது கவி ஐயன் கம்பன் என்றும், கவிச்சக்கரவர்த்தியின் பெயர் தான் என்றும் விளக்கமளித்தார்கள். ஆனால் அக் கல்வெட்டு 2ஆம் குலோத்துங்கன் கல்வெட்டு என்றார்கள்.

## அடிக்குறிப்பு

1. இலக்கிய கல்வெட்டு பக். 96
2. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 256
3. செந்தமிழ், சிலம்பு 25
4. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக்கம் 225
5. ஊரும் பேரும் பக்கம் 119. ரா.பி சேதுப்பிள்ளை. 1956
6. 1. ஊரும்பேரும். 105, 45 ஆப் 1921. 2, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 22. பக். 180
7. ஊரும் பேரும் 107, 271 ஆப். 1915. 2, செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 22. பக். 180
8. செந்தமிழ், தொகுதி
9. சென்னைத் திருவொற்றியூர் ஆதிபுரீசுவரர் ஆலயக் கல்வெட்டு. தொகுதி எண். 5

# 12. கம்பரும் கம்பர் கால மன்னர்களும்

## (கி. பி. 825 முதல் 922 வரை)

கம்பர் வரலாறு காலம், பற்றிய முரண்பாடுகள் களைந்து உண்மையான வரலாற்றினையும் வாழ்ந்த கால எல்லைகளையும் அறுதியிடல் வேண்டும். என்று ஆசிரியர் ச. சிவசாமி குறிப்பிட்டுள்ளார்கள்.

—கம்பர் ஆய்வடங்கள்

கம்பர் கால ஆராய்ச்சி இன்னும் முடியவில்லை என்று பல நூல்கள் கூறுகின்றன.

கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான் என்பதற்கு ''எண்ணிய சகாத்தம் என்ற செய்யுளே ஆதாரம். 12ஆம் நூற்றாண்டு என்பதற்கு அசைக்க முடியாத ஆதாரங்கள் இரண்டைக்கூட யாரும் எடுத்துக்காட்டவில்லை.[1] எதிர் காலத்தில் ஆராய்ச்சி நிபுணர்கள் இந்தச் சந்தேகத்தைப் போக்கி உண்மையைக் கண்டுபிடிக்கக்கூடும் என எதிர் பார்ப்போம் என்று கு. அழகிரிசாமி சக்தி இராமாயண முன்னுரையில் கூறுகிறார்.

கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான் என்பதற்கு நூற்றுக்கணக் கான எடுத்துக்காட்டுகளை ஆதாரங்களுடன் தொகுத் து இதுவரை யாரும் எடுத்துக்காட்டாத ஆதாரங் களை அடிப்படையாகக்கொண் ''கவிச்சக்கரவர்த்தி

கம்பர் வாழ்க்கை வரலாறு; கால எல்லையினையும் அறுதி யிடுகிறோம்.

**பல்லவ மன்னர்கள்**

| | |
|---|---|
| 3ஆம் நந்திவர்ம பல்லவன் | கி. பி. 846—859 |
| நிருபதுங்க பல்லவன் | கி. பி. 859—899 |
| அபராஜித பல்லவன் | கி. பி. 885—903 |
| கம்பவர்ம பல்லவன் | கி. பி. 870—912 |

**பாண்டிய மன்னர்கள்**

| | |
|---|---|
| ஸ்ரீமாற பரசக்கரகோலாகலன் | கி. பி. 835—862 |
| ஸ்ரீவல்லப பாண்டியன் | கி. பி. 862—895 |
| வரகுண வர்மபாண்டியன் | சி. பி. 862—895 |
| பராந்தக பாண்டியன் | கி. பி. 880—905 |
| 3ஆம் ராசசிம்மன் | கி. பி. 900—920 |
| வீரபாண்டியன் | கி. பி. 946—966 |

**சோழ மன்னர்கள்**

| | |
|---|---|
| ஸ்ரீமந் நாதமுனிகள் | கி. பி. 823—917 |
| சுராதித்த சோழன் | கி. பி. 826—850 |
| கவிச்சக்கரவர்த்தி கம்பர் | கி. பி. 840—922 |
| விசயாலய சோழன் | கி. பி. 850—871 |
| முதலாம் ஆதித்த சோழன் | கி. பி. 871—907 |
| பராந்தக சோழன் | கி. பி. 907—957 |
| கண்டராதித்தன் | கி. பி. 947—957 |

## சுராதித்த சோழன் கி. பி. 826—850

இவனுக்குக் குமராங்குசன் என்ற பெயரும் உண்டு. இவனே இடைக்கால சோழராட்சிக்கு முதற்காரணமாகும். இவன் முற்சங்க பெருநற்கிள்ளி, கரிகாலன், செங்கண்ணான் வழித்தோன்றலாகும்.

கோனாடு என்ற ஒரு நாடு உறையூருக்கு அருகில் உண்டு. இதற்குக் கொடும்பாளூர் தலைநகராகும். இதனை ஆண்டவர்கள் வேளிர்கள் எனப்படும் குடியைச் சார்ந்தவர்களே இச்சோழர்கள். இவன் திருவிடை மருதூரில் சோழபுரம் கோயிலெடுத்தான். சமணமுனி அமோக வர்ஷனைக்கொண்டு ஆதிபுராணம் எழுதினான். ஏரிக்கரைகள் நிறைந்தக் கொடும்பாளூருக்குக் குறுநில மன்னனாக அரசாண்டுக் கொண்டிருந்தான் என்பதைக் கீழ்க்கண்ட நூல்களும் குறிப்பிட்டுள்ளன. சேக்கிழார் பெருமானும் குறிப்பிடுகிறார்.[2]

## ஸ்ரீமந் நாதமுனிகள் அவதாரம் 828 – 917

வீரநாராயணபுரம் காட்டுமன்னார் கோயில் என்ற ஊரில் ஈஸ்வர முனிவர் திருமகனாய் அவதரித்து நாதர் எனத் திருநாமம் பெற்று, அரவிந்தப்பாவையை மணம் புரிந்து பெற்ற மகற்குத் தந்தை நாமமே ஈஸ்வர முனிகள் என்று பெயரிட்டார். வீரநாராயண புரத்து பெருமா ◦ டம் ஈடுபாடு கொண்டு, யோக நிஷ்டராய் விளங்கியவர். யோக ரகசியம், நியாத்தத்துவம் ஆகிய நூல்களியற்றி உள்ளார்.[3]

இவர் வைணவ ஆசாரியர்களில் முதன்மையானவர். ஸ்ரீநம்மாழ்வார் (சடகோபர்) அருளிச் செய்த திருவாய் மொழி பாசுரங்களையும் ஏனைய ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களையும் யாவரும் கைக்கொள்ளத்தக்க வகையிலும், ஆட்சியிலும். வைத்து நாலாயிர திவ்யப் பிரபந்த மாகத் தொகுத்தவர் இவரே.[4]

## கம்பர் அருளிய பாசுரங்கள் திவ்யப்பிரபந்தத்தில்

திருக்குடந்தையில் (கும்பகோணத்தில்) ஸ்ரீநம்மாழ் வாரைப் பிரதிஷ்டை செய்வித்து ஆரவாமுதாழ்வாரெனப்

பெருமாளுக்குத் திருநாமம் சாற்றினார். கும்பகோணம் சாரங்கபாணிப்பெருமாளைக் கம்பநாட்டாழ்வார் சேவித்து அருளிய பாசுரமும், திருநறையூர் (நாச்சியார் கோயில்) நின்ற பெருமாளைச் சேவித்து அருளிய பாசுரங்களையும், திருமங்கையாழ்வார் அருளிய திருவெழுகூற்றிருக்கை; சிறிய மடல்; பெரிய மடல்; ஆகியவற்றுடன் சேர்த்து, நாலாயிரம் திவ்ய பிரபந்தத்தில் கம்ப நாட்டாழ்வார் அருளிய பாசுரங்களென இடம்பெறச் செய்தவரும் இவரே என்பதை அறிவோம் இதுவரை யாரும் எடுத்துக் காட்டாத சான்றுகளில் ஒன்று இது.

## கி. பி. 840இல் கம்பநாட்டாழ்வார் அவதாரம்

சுராதித்த சோழன் காலத்தில் கி. பி. சுமார் 840 அளவில் தேரழுந்தூரில் காளிகோயில் பூசை செய்யும் உவச்சர் குலத்தில் ஆதித்த அர்ச்சகருக்கும் திலகவதி அம்மையாருக்கும் கம்ப நாட்டாழ்வார் அவதரித்தார். தந்தையிட்ட பெயர் ஏகம்பன் என்பதாகும். பிற்காலத்தில் கவித்துவ புகழ் ஓங்கியபோது முதலெழுத்துக் குறைந்து கம்பர் என வழங்கலாயின என்பது ஆய்வுநூற் கருத்தாகும்.

தேரழுந்தூர் என்பது தேர் அழுந்திய ஊராகும். புராணக்காலத்தில் உபரிசிரவசு என்ற அரசன் தவநெறியால் தன் தேவியோடு வானத்தில் இரதத்தில் செல்லும் போது தேவர்கள். முனிவர்களுக்குப் பாரபட்சமாகத் தீர்ப்புக் கூறினாராம். முனிவர்கள் அவனைச் சபித்தனர். எனவே அவன் தேரோடு பூமியில் விழுந்து தேர்ச்சக்கரங்கள் அழுந்தியமையால் அவ்வூர் அழுந்தூர். திருஅழுந்தூர், அழுந்தை, எனவும் வழங்கி வருகின்றது.

இவ்வூரைச் சுற்றிய காடுகளில் ஸ்ரீகண்ணன் பசுக்களை மேய்த்துக் கோகுல லீலை புரிந்தான் என்றும், ஆகவே

கிருஷ்ணாரணிய சேத்திரமென்றும், இத்தலத்தை இரண்டாவது கோகுலம் துவாரகையென்பார்கள் திருமங்கையாழ்வார் கோகுலமாகவே கருதி பாடியருளியுள்ளார். வைணவர்களுக்கு இவ்வூர் ஒரு திவ்ய சேத்திரமாகும்.

ஆநிரை மேய்த்த செங்கமலக்கண்ணன் ஆமருவியப்பன் திருநாமம் கொண்டு, அணி அழுந்தூரில் கோயில் கொண்டார், தாயார் செங்கமலவல்லி ஸ்ரீநரசிங்க பெருமாள் சன்னதியும் கொண்ட திருக்கோயிலாகும். இதில் ஸ்ரீராம சீதை லட்சுமணன் அனுமன் சன்னதியே, கம்பரின் இதயம் கவர்ந்த "இராமாயண காவிய பாட்டுடைத்தலைவன்" எனில் மிகையாகாது. [5]

கம்பர் தன் தந்தையாருடன் அதிகாலையில் ("கம்பருக்கு அருள் சுரந்த காளி" என விளங்கும்) காளி கோயில் நித்திய பூஜா பணிகளை முடித்து, ஆமருவியப்பன் ஆலயம் வந்து சன்னதிதோரும் சேவித்து வேதபாராயணங்களைச் செவிமடுத்துப் பெருமானையும், பெரியோரையும் வணங்கிப் பின் குருகுலம் செல்வது வழக்கம். இப்பழக்கம் கம்பருக்குச் சடையப்பவள்ளல், புரவலனாக வாய்ப்பாகியது என்ற இச்செய்தி அவ்வூர் ஆன்றோர்களும் ஆலய பட்டாச்சாரிகளும் கூறுவது கர்ண பரம்பரைச் செய்தியாகும். 31-3-91இல் நாம் நேரில் சென்று விசாரித்தபோது கூறினார்கள்.

## யாரும் எடுத்துக்காட்டாத சான்று

ஆமருவியப்பன் ஆலய வரலாறும், கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்பதைச் சக ஆண்டு 807 எனக் குறிப்பிடுகிறது. இதுவே கி. பி. 885இல் அரங்கேற்றத்தைக் குறிக்கும், இது கம்பர் கால ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடாததாகும்,

ஆமருவியப்பன் ஆலயத்தில் கம்பர் தம்பதிகளுக்குச் சன்னதியுள்ளதைக் கோயில் வரலாறும்; பண்டிதர் ஆ. கி. நாயுடு, லிப்கோ ஆங்கில பதிப்பு தவிர. வேறு யாரும் ஆராய்ச்சியாளர்கள் எடுத்துக்காட்டியதாகத் தெரியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இளம் வயதிலிருந்து ஆமருவியப்பன் கோயிலில் கம்பருக்கு இருந்த நெருக்கமான தொடர்பு மற்றும் இராம காவியம் இயற்றி அரங்கேற்றிய கவிச்சக்கரவர்த்தியைக் கம்ப நாட்டாழ்வார் என வைணவர்கள் போற்றி கம்பர் தம்பதிகள் சன்னதி வைத்துச் சிறப்பித்துள்ளனர்.

## கி. பி. 844—854 கம்பர் ஆரம்பக் கல்வி

குருகுலத்தில் கம்பர் கல்விகேள்விகளில் ''விளையும் பயிர் முளையிலே'' என்பதாகச் சிறப்புப் பெற்றார் எனப் பல ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

குருகுலத்தில் கம்பர் தலைமை மாணாக்கராகத் திகழ்ந்தவர். கல்வியில் கருத்தூன்றிக் கவிபாடும் ஆற்றல் வாய்க்கப் பெற்றார் என்று குறிப்பிடுகிறார். [6]

—வித்வான் வே. இராமலிங்கம்

மகாகவிகளின் ஆற்றல் இளம் வயதிலேயே வெளிப் படும் என்பார்கள். கவி ஆற்றலைக் கண்டு பிறவிக் கவிஞன் என்பார்கள். அதுபோலவே, கம்பரின் தமிழறிவும் கவித்துவ மேன்மையும் கண்டு ஆன்றோர்களால் கவரப் பட்டார் எனக் கூறப்படுகிறது.

என்றாலும் தமிழ் இலக்கண இலக்கியமும் வடமொழி யும் பயின்று இராமாயணம் பாடவேண்டுமென அவா கொண்டிருந்ததாக,

"ஆசை பற்றி அறையலுற்றேன் மற்றிக்
............... என்று தம் இராமாயணத்தில் கம்பர் பாடியுள்ளார்.

இக்கிலுயர் காளியம்பன் என்று, கம்பரால் சிறப்பிக்கப் பெற்ற செல்வந்தரான சடையப்ப வள்ளல், கம்பரின் புரவலரானார். [7]

இவருடைய ஆலோசனைப்படியும். சிறப்பானக் கல்வியைப் பயிலத் தொண்டைநாட்டுப் புழற்கோட்டத்தைச் சேர்ந்த திருவொற்றியூர் சதுரானன பண்டிதரிடமும்.

"சோழ நாட்டு ஆலி என்னும் ஊரில் பிறந்து" பொன்னம்பலத்திற் திருவிசைப்பா பாடிய சாசன தமிழ் கவி சரித ஆசிரியரான, திருவாலி அமுதனார், (அப்போது மயிலையில் தங்கித் தமிழ்ப்பணியாற்றி வந்த சிவனடியாரிடத்தும்) கல்வி பயின்றதாகத் தெரிகிறது.

இவரைக் கம்பர் அண்ணல் திருவாலி அமுதனார் எனச் சிறப்பித்துப் பாடியுள்ளார். [8]

**கி. பி. 855**

மேற்படி தமிழ் ஆசான்களிடம் மாணாக்கராக கம்பர் பயின்றார் எனக் கொள்ள சான்றுண்டு, அப்போது கம்பருக்கு சுமார் 15 வயதிருக்கலாம். வடமொழியில் வான்மீகி ராமாயணம் பயின்றார், என்கிறது கோயிலொழுகு [9] ஆதித்த சோழன் காலத்தே கி. பி. 885இல் மூரி அமுதனார் என்ற பெண்பால் சூரிய சந்திரர் உள்ள வரை, அர்த்தநாரி ஈஸ்வரருக்கு வைத்த 15 கழஞ்சு, பொன் கொடுத்தார் என்ற குறிப்பு [10] உள்ளது. இவர் திருவாலி அமுதனார் துணைவியாகலாம்.

"திருவாலி அமுதனார்காலம்" முதலாம் ராஜராஜனுக்கு (998—1014) முன், என்று "திருவிசைப்பா" நூல். பக்கம், 10 கூறுகிறது.

**கி. பி. 846—86**

3ஆம் நந்திவர்ம பல்லவன் அப்போது மகனாகும் காஞ்சியை ஆண்டு கொண்டிருந்தான். இவன் நந்திவர்ம பல்லவன் மகனாகும் தொண்டை நாட்டின் ஒரு பகுதியும் சோழநாட்டின் வடபகுதியும் இந்தப் பல்லவன் கீழ் அரசாண்ட பாண்டியன், ஸ்ரீவல்லபன் கைப்பற்றி இருந் தான். 3ஆம் நந்திவர்மனின் மகன் நிருபதுங்கன். நிருபதுங்கனின் தம்பிகள் கம்பவர்மன், மாற்றாந்தாய் மகன் அபராஜிதனாகும் [11]

**கி. பி. 850—871**

விஜயாலயசோழன் இவன் சுராதித்தன் மகனாகும். இளவரசாய் இருந்து, சோழநாட்டுக்கு 850இல் முடி சூட்டபெற்றான். இவன் முதலில் 'தஞ்சையை ஆண்டு கொண்டிருந்த முத்தரையர்களைத் தாக்கி தஞ்சையைக் கைப்பற்றினான் [12] இந்த வெற்றியின் நிமித்தமாக அங்கு 'நிசும்ப சூதினி' என்ற துர்கை கோயில் கட்டினான். [13] புதுக்கோட்டை நார்த்தா மலையில் 'விஜயாலய சோழீ சுரம்'', கற்றளி சமைத்தான்.

**கி. பி. 854**

''தெள்ளாறு எறிந்த'' என்ற அழியா விருது பெற்ற, காஞ்சி நந்திவர்ம பல்லவன் கி. பி. 853இல் பாண்டியன் ஸ்ரீவல்லபன் மீது போர் தொடுத்தான். இப்போரில் சோழன் விஜயாலயனும் இவனது மகன் இளவரசன் முதலாம் ஆதித்தனும், பல்லவனுக்குத் துணை இருந்து பயனடைந்தார்கள் எனலாம். இப்போரினால் தொண்டை நாட்டு ஒரு பகுதியும் சோழ நாட்டு வடபகுதியும் வென்றார்கள்.

**கி. பி. 859—899**

3ஆம் நந்திவர்மன் தனது மகன் நிருபதுங்கனுக்குக் காஞ்சியில் முடிசூட்டினான். ஆதித்தனும், விஜயாலனும் பல்லவர்களுடன் மிக நெருக்கமாக உறவு கொண்டிருந்தனர். தஞ்சையும் சோழ நாட்டின் வடபகுதியும் விஜயாலயனுக்குப் பரிசாகத் தந்தான். ஆதித்தனுக்கு நிருபதுங்கன் தன் மகள் வீரமாதேவியை மணமுடித்துக் கொடுத்தான். அன்றியும் ராஷ்டிரர்க்கூட இரண்டாம் கிருஷ்ணன் மகள் இளங்கோ பிச்சியும் மணந்தான் [1]4

## கம்ப நாட்டாழ்வார் அவதரித்தது தேரழுந்தூர்

**கம்பன் பிறந்த ஊர் காவிரி தங்கும் ஊர்**
**கும்பமுனி சாபம் குலைந்தவூர்—செம்பதுமத்**
**தாதகத்து நான் முகனும் தாதையுந் தேடிக்காணா**
**ஓதகத்தார் வாழும் அழுந்தூர்**
**ஆமருவித் தேரழுந்தி ஆநிரை தாம் மறைய**
**தேமதுரத் தமிழோதித் தேரெழுந்தூர் உவச்சன்**
**தேனருவித்தமிழாய்! காவிரியாய்! தமிழ்க்கடலாய்!**
**வானகத்தன், கானமுதன், வேதமும், உதித்த ஊர்.**

ஊர் மேற்கே கம்பருக்கு அருள்சுரந்த காளிகோயில் ஒன்று உள்ளது. வயது முதிர்ந்த பெரியவர் உவச்சர் கருப்பையா என்பவர் அக்கோயில் பூசாரியாகப் பணியாற்றுபவர் கூறுவதாவது ; கம்பர் குலத்தைச் சேர்ந்த எங்கள் உறவினர்கள், புதுக்கோட்டைப் பசும்பொன் மாவட்டத்திலும் காளிகோயில் பூஜைதான் குலத்தொழில், இக்கோயில் கம்பர் சிறுபிள்ளையாக இருந்தபோது தகப்பனார் (ஆதித்தன்) உடன் வந்து முறையாக குருக்தோத்திரம் விநாயகர் தோத்திரம் செய்து ஆசமனம் நிவேதனம் அர்ச்சனை செய்து, தந்தையைப்போலவே, வடமொழி

சுலோகம் சொல்லிப் பூஜை செய்து, வருவோர்க்குப் பிரசாதம் வழங்குவாராம். இப்பணியை அதிகாலையிலேயே முடித்து ஸ்ரீஆமருவியப்பன் ஆலயம் சென்று அங்கு நடைபெறும் வேதபாராயணங்களைக் கேட்டு; ஒவ்வொரு சன்னதியாகப் பக்தியுடன் சேவித்துப் பிறகு குருகுலம் செல்வாராம்.

மீண்டும் மாலை வந்து, தீபமேற்றிப் பூஜித்துவிட்டுப் பெருமாள் கோயில் சென்று, ஸ்ரீபிரகலாத ஆழ்வார், ஸ்ரீநரசிங்க பெருமாள், மீது அளவு கடந்த பக்தியோடு விழுந்து சேவிப்பது, இப்படி "இளம் வயதிலிருந்தே அக்கோயிலுக்கும், கம்பருக்கும், நெருங்கிய தொடர்பு இருந்தது என்றும், ஆகவேதான் அக்கோயிலில் கம்பர் தம்பதிகளுக்குச் சன்னதி உள்ளது என்றும், வேறு எங்கும் கம்பருக்குக் கோயில் கிடையாது என்றும் தாங்களும் அதுபோல் தங்கள் பிள்ளைகளுக்குப் பூஜை செய்யவும் சமஸ்கிருத சுலோகங்களைச் சொல்லி வைப்பதும் வாடிக்கையென்றும், மேற்படி செய்திகள் கர்ணபரம்பரை செய்தியாக வருவது என்றும், கம்பர் பூஜை செய்த கோயில் என்றாலும் வருமானம் போதிய அளவு இல்லை, என்றாலும் எங்களில் யாராவது ஒருவர் தொடர்ந்து செய்து வருவதாகக் கூறினார். 31-4-91இல் நம்மிடம் நேரில்கள ஆய்வின்போது உவச்சர் கருப்பையா தெரிவித்தார்.

தேரழுந்தூர் பெரியவர்கள், கர்ண பரம்பரை செய்தியென மேற்படி கூறி மேலும் சிலரைச்சந்திக்க பெயர்களைக் கூறினார்கள்.

ஆமருவியப்பன் ஆலய அர்ச்சகரும் மற்றொருவரும் இக்கோயில் தொடர்பு கம்பருக்குச் சிறு வயது முதலே நெருங்கிய தொடர்பு என்றும், இராமாயண அரங்கேற்ற காலத்திலிருந்து ஸ்ரீநரசிங்க, ஸ்ரீபிரகலாத ஆழ்வார் அடியாராகக் கம்பர் கோயில் கொண்டார், எனக் கூறினார்கள்.

கம்பர் குலத்தினரான உவச்சர்கள் குருக்களுக்குச் சமமாகக் கோயில்களில் வடமொழியில் மந்திரம் கூறுவார்கள்; இவர்கள் காளிகோயில் பூஜைக்கு உரியவர்கள்.[15] என்று டாக்டர் ராஜமாணிக்கனார் எழுதியுள்ளார்.

கவியரசனாகிய கம்பர் பிறந்த ஊராகத் திருஅழுந்தூர் விளங்குகிறது. தன் கவியாகிய அமுதத்தை இராம கதை என்ற பொன் கிண்ணத்திலே தமிழ் மக்களுக்கு உபசரித்து ஊட்டிய புலவர் பெருமானது திரு அவதாரப் பேரூராக விளங்குகிறது திருஅழுந்தூர்.[16]

ஸ்ரீஆமருவியப்பன் ஆலய வரலாறும் கம்பருக்கும் இவ்வாலயத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு எனவும், இதன் காரணமாகவே, இராமாயணத்தில் இரணியவதைப் படலத்தை இயற்றி, தம் படைப்பாகச் சேர்த்தார் என்றும், கோயிலாரே, ஆண்டுதோறும் கம்பருக்கும் மூன்று ,நாள் விழா எடுத்துச் சிறப்பிப்பதாகவும், பங்குனி அஸ்தம் முதல் மூன்று நாள் எனக் கூறுகிறது. கோயில் வரலாறு[17]

கம்பர் பிறந்த ஊர் தேர்ழுந்தூர், தந்தை பெயர் ஆதித்தன்; இவர் உவச்சர் குலத்தவராவர். உவச்சர்கள் காளி கோயில் பூஜை செய்வார்கள் என்று கம்பராமாயண ஆராய்ச்சிக் கட்டுரை எழுதியுள்ளார். வ. வே. ஸு. ஐயர் தம் இராமாயண முன்னுரையில்..

கம்பர் பூஜித்த விநாயகர் ஆலயமும், காளிகோயிலும் இருக்கின்றன என்பதைத் தென்னாட்டுக் கோயில்கள் நூல் குறிப்பிடுகின்றன.[18]

ஈடார் தருஞ்சோதி நாடதனில்
ஊறுந்திரு வழுந்தூ ரில்
பீடாகும் மோச்ச குலத்தொருவன்
அவ்வூர் பெருங்கோயில் வாய்.[10]



கம்பர் இளவயதிலிருந்தே காளியருளால், கவிபாடும் வல்லமை பெற்றவர் என்பதை, தேரழுந்தூரிலும் இங்கிருந்து 2 கி. மீ. தூரத்திலுள்ள சேத்திரபாலபுரத்திலும் கதிராமங்கலம் (சடையப்பரின் வெண்ணெய் நல்லூரிலும்) தமிழாசிரியர்கள் உள்பட பலரும் தெரிவித்தார்கள்.

கம்பர் பள்ளியில் தலைமை மாணாக்கராகக் கல்வியில், கருத்தூன்றிக் கவிபாடும் ஆற்றல் வாய்க்கப் பெற்றார்.[20]

"ஏர் எழுபதில் உழவர் நேர்த்தி பாடியதைச் சடையப்பர் அறிந்து இராமாயணம் பாடல் செய்யச் செய்தார்.[21] என்று அறியப்படுகிறது.

திக்கெல்லாம் புகழ்பெற்ற கொடை வள்ளல் சங்கரன் மகனார் சடையப்பர், ஆமருவியப்பன் ஆலய விழாக்களுக்கு வருகைத் தருவது வழக்கமெனவும் சிறுவன் ஏகம்பன் சிறு வயதிலேயே கல்வி கேள்விகளிலும் கவிபாடுவதிலும் வல்லமை பெற்றவன் எனக் கேள்விப்பட்டுத் திறமையைக் கண்டு வியந்து மேலும் வடமொழியிலும் தமிழ் இலக்கண இலக்கியத்திலும் பண்டிதராக்க, தக்க ஏற்பாடு செய்து உதவியதாகவும், கம்பருக்கு இச்செய்தி பழம் நழுவி பாலில் விழுந்தது போல் சடையப்பரின் மேல் அன்பும் நெருக்கமும் ஏற்பட்டதாகத் திருவழுந்தூர்ப் பெரியோர்கள் நாம் நேரில் சென்று (14-3-1991இல்) விசாரித்தபோது கூறினார்கள்.

தொண்டை நாட்டு ஊற்றுக் காட்டுக் கோட்டத்தில் பண்டைய நாளில் பாலையூர் என்று பெயர்பெற்ற (பாலூர்) ஊர் செங்கற்பட்டு காஞ்சி இடையே உள்ளது.[22] இங்குக் கம்பர் குலத்தினர் கோயில் பூஜைப் பணியாற்றி வருதல் தற்போதும் காணலாம். கம்பரின் தந்தை ஆதித்தன், உவச்சர் குலத்தைச் சேர்ந்தவர்கள் இக் காலத்தே பூசாரி என்று அழைக்கப் படுகிறார்கள்.

ஆதித்தன் திருவழுந்தூர் பிடாரிக் கோயில் பூசாரிப் பணியைக் குலத்தொழிலாகக் கொண்டிருந்தார். சீரணி என்ற பாடலும், கைம்மணி என்ற பாடலும் கம்பர் பிறந்த

குலம் உவச்சர் குலமாகும் என்று புலவர் மாரிமுத்து 'கம்பர்' என்னும் தம் நூலில் எழுதியுள்ளார்.[23]

பேராசிரியர் இராகவையங்கார் அவர்களும் தம் நூலில் உவச்சர் குலத்தினர், பாரசைவர் சாதியினர் என்று குறிப்பிட்டுள்ளார். இதன் விவரத்தைக் "கண்ணுடையம்மன் பள்ளு" என்ற நூலிலும் தெளிய அறியலாம் என்று எழுதியுள்ளார். இவரது இந்தக் கருத்தை உ. வே. சாமிநாதையரவர்கள் ஆதரித்து எழுதியுள்ளார்கள்.

## கம்பரும் கல்வியும்

கம்பர் தமிழ் இலக்கணமும், வடமொழியும், வால்மீகி இராமாயணமும், சென்னை திருவொற்றியூரில் சதுரானன பண்டிதரிடம் பயின்றார் என்பதைக் கீழ்க்கண்ட சான்றுகள் தெரிவிக்கின்றன. சென்னை திருவொற்றியூர் ஆதிபுரீச்சுரர் ஆலயத்தில், பிற்கால சோழராட்சியில் தமிழ் இலக்கணம் கற்பிக்கும் கலாசாலை இருந்து வந்தது என்று குன்றக்குடி அடிகளார்[24] குறிப்பிட்டுள்ளார்கள்.

இங்கிருந்த வட்டப்பாறையம்மன் என்ற காளியம்மன் கோயில் பூசகராகப் கம்பர் குலத்தைச் சேர்ந்த உவச்சர்களே அண்மைக் காலம் வரை இருந்து, தற்போதும் பிரம்மோற்சவத்தில் உவச்சருக்குரிய சன்மானம் வழங்கப்பட்டு வருகிறது, என்று ஆதிபுரீசுரர் ஆலயத்துக் குருக்கள் நமது கள ஆய்வின் போது தெரிவித்தார்கள் (நாள் 14-6-1991)

இன்றும் ஆதிபுரீசுரர் ஆலயத்திற்கு அருகில் சிறப்புற்று விளங்கும் கிராம தேவதைக் கோயில் அர்ச்சகராக உவச்சர்களே உள்ளார்கள், சில குடும்பங்கள் அங்கு வாழ்ந்து வருகின்றன. வட்டப்பாறை அம்மன் அர்ச்சகராக

அவர்களைச் சேர்ந்தோரே இருந்தனர் என்றும் விசாரணையில் தெரிந்தது.

கம்பராமாயணத்தை முதலில் திருவெண்ணெய் நல்லூரில் இயற்றினார் என்பதைத் ''தொடை நிரம்பியதோ... சடையன் வெண்ணெய் நல்லூர் வயற்றந்ததே'' என்ற கம்பராமாயண பாடலால் அறியலாம். வட்டப்பாறையம்மன் ஆலயத்தில் தீப்பந்தங்கள் ஏற்றிவைத்து மாணாக்கர்களைக் கொண்டு இரவெல்லாம் இராமாயணம் இயற்றினார். இதற்குப் பந்தம் பிந்தாமல் ஒளிர அம்மன் திருவருளை வேண்டி கம்பர் ஒரு பாடல் பாடியுள்ளார். மாணாக்கருடன் கம்பர் அமர்ந்து பாடுவதாகப் புராதன படம் ஒன்று அங்குள்ளது[25].

**ஒற்றியூர் காக்க உறைகின்ற காளியே**
**வெற்றியூர்க் காகுத்தன் மெய்சரிதை—பற்றியே**
**நந்தா தெழுதுதற்கு நல்லிரவின் மாணாக்கர்**
**பிந்தாமல் பந்தம் பிடி[26].**

இதனால் கம்பர் சதுரானனப் பண்டிதரிடம் பாண்டியத்தியம் பெற்றார். வடமொழியும் தமிழிலக்கணமும் கற்றார். அதன் பயனாக இராமாயணத்தைப் பெரும் பங்கு திருவொற்றியூரிலேயே இயற்றினார் எனத் தெரிகிறது. இதிலிருந்து திருவொற்றியூர் உவச்சர்கள் கம்பரது நெருங்கிய உறவினர் என்பது விளங்கும்.

திருவொற்றியூரில் கம்பர் தங்கி இருந்து கல்விப்பயின்ற காலத்தில் கம்பரின் கல்வி, கவிவன்மை, ஒழுக்கம், காரணமாக உறவினர் மூலம் திருமணத்திற்கு, சிறந்த கல்வியும் பாண்டித்தியமும், கற்பும் பொற்பும் நிறைந்த அழகு மங்கை ஒருத்தியைப் பற்றிக் கூறிப் பண்டைய வழக்கப்படி கோயிலில் பிள்ளை, பெண்ணைப் பார்த்து, பெண் பிள்ளையைப் பார்த்து இருவரும் விரும்பினால் பெண்,

கேட்க வீட்டிற்குச் செல்லும் வழக்கப்படி ஒரு நாள் கம்பர் பெண்ணைப் பார்த்தார். அதை அவரே பாடுகிறார்.

## அடிக்குறிப்பு


1. கு. அழகிரிசாமி சக்தி ராமாயணம் பக். 36. 1958.
2. (1) செந்தமிழ் தொகுதி 52, 1925. (2) அபிதான சிந்தாமணி. பக். 1611.
3. (1) புலவர் அகராதி, பக். 263. (2) அபிதான சிந்தாமணி.
4. நாலாயிர திவ்ய பிரபந்தம்.
5. தேரழுந்தூர் தல வரலாறு, ஆமருவியப்பன் கோயி லொழுகு.
6. வித். வே. இராமலிங்கம் "இடைக்காலப் புல வர்கள்."
7. கம்பர் தனிப்பாடல், தனிப்பாடல் திரட்டுகள்.
8. தமிழ் நாவலர் சரிதை பக். 83 கம்பர் தனிப்பாடல்.
9. திருவொற்றியூர் ஆதிபுரீசுரர் ஆலய ஒழுகு பக். 34.
10. அமுதசுரபி தீபாவளி மலர் 1983. பக்கம் 296
11. நீலகண்ட சாஸ்திரி தென்னிந்திய வரலாறு.
12. த. வ. ம. ப. S.I.I. II. 76 MARXE.
13. ,, I.S.I.I. III. No. 205.
14. தமிழக வரலாறு பக்கம் 245.

15. "தமிழமுதம்" ஆய்வு நூல்; டாக்டர். மா. ராச மாணிக்கனார்.

16. தென்னாட்டுக் கோயில்கள் பக். 20.

17. ஆமருவியப்பன் ஆலய வரலாறு, தேரழுந்தூர் பக். 23.

18. தென்னாட்டுக் கோயில்கள் பக். 20.

19. புலவர் புராணம்.

20. இடைக்காலப் புலவர்கள் வித். வே. ராமலிங்கம்.

21. ஆந்திர நாடு எது? சரஸ்வதி பாண்டுரங்கம்.

22. MER. 1928, பக். 29. ஊரும் பேரும்.

23. புலவர் மாரிமுத்து கம்பர் பக். 17.

24. அமுதசுரபி தீபாவளி மலர் 1987.

25. ஆதிபுரீசுரர் ஆலய ஒழுகு, இங்குள்ள வட்டப் பாறையம்மன் சன்னதி எதிரில் காளி தீப்பத்தம் ஏந்த, மாணாக்கருடன் கம்பர் ராமாயணம் எழுதுவதாகப் பெரிய நிலைப்படம் உள்ளது.

26. கம்பர் தனிப்பாடல்; நாவலர் சரிதை பக். 84.

# 13. கம்பருக்கும் நிகர்த்த வல்லிக்கும் திருமணம்

*கம்பர் பெண்பார்த்தல்!*

**இல்லென்பார் தாம்மவரை யாமவர் பேர் அறியோம்**
**பல்லொன்று செவ்வாம்பல் முல்லையும் பாரித்துக்**
**கொல்லென்று காமனையும் கண்காட்டி கோபுரத்தின்**
**கீழ்**
**நில்லென்று போனார் என் நெஞ்சை விட்டுப்**
**போகாரே. 1**

(இல்—*மனைவி, அகராதி.* இல்லினை—*மனையாளை,*
*ஸ்ரீமத் கம்பராமாயணம்.)*

*பாடற் கருத்து: 'இல் எனும் மாண்புடைப மகளாக நற் குடும்ப நங்கையாய் உரைத்தனர் உற்றார். அது உண்மையே யாம். அவள் பெயர் அறிந்திலோம்- முல்லை போன்ற பல் வரிசையே மதி முகத்திற்கு எடுத்துக் காட்டு. புத்திளம் புருவவில் சற்றே அசையப் புறப்பட்ட அவள் விழிப் பார்வை, அம்பெனப் பாய்ந்தது! மன்மத பாணமோ? திருக்கோயிலில் திருமகளைப் பெண் பார்க்கும் படலம் சிறிது நேரமே, அதற்குள் புறப்பட்டனர். கோபுரத்தின் கீழ் வந்து ''நில்'' என்று என்னை நிற்க வைத்துப் போயினர். ஆனால், என் இதயக் கமலத்தில்*

இருத்திக் கொண்ட அவள் போகாளே' என்கிறார் கம்பர்.

இல்லத் துணைவி இவள் தான் என்று எண்ணங்கள் அலை மோதின. பின்பு ஒரு நாள், ''நிகர்த்தவல்லி'' எனப் பெயரும் தெரிந்தது. அவர் தந்தையையும் அறிவேன் என்று பின்பொரு நாள் பாடுகிறார்.

**நடக்கில் அன்னமாம் நிற்கில் வஞ்சியாம்**
**கிடக்கில் ஓவியப்பாவை கிடந்ததாம்**
**தடக்கையான் சதுரானன பண்டிதர்**
**மடத்துளாள் என் மனதுறை வல்லியே.**

கம்பரது துணைவியார் பெயர் நிகர்த்த வல்லி என்று புலவர் ச. சிவகாமி தம் கம்பர் ஆய்வடங்கலில் எழுதியுள்ளார். [3]

மனதில் பதிந்து விட்ட மங்கை வல்லியாம். நீண்ட அருட்கரம் (தடக்கை) உடைய சதுரானன பண்டிதர் மகளாம். மடத்துளாள்—மடம் படு சாயலாள்—சிலப்பதிகாரம், மடம்—வீடு, மனை.

என் நினைவில் கொண்ட வல்லியைத் தமிழ் அமுதச் சொல்லியை மணம் முடித்துக் கரம்பிடிக்க வல்லமை இல்லையே என வருந்தி வெம்மை கொண்டார் கம்பர். சடையப்பரால் வான்மீகியை அறிந்தார். வடமொழி தெரிந்தார். தமிழ்ப் புலமை இனிதே கற்றுத் தேர்ந்தார். ஆயினும் திருமணம் முடிக்கும் வசதி குறைவு அன்றோ?

அண்ணல் திருவாலி அமுதனார் எனக் கம்பரால் புகழ்ந்துரைக்கப்பட்டவர் சோழ நாட்டு, திருவாலிமலை

யில் வாழ்ந்தவர். "தமிழ் இலக்கிய வரலாறு" தந்தவர், நான்கு பதிகமும், நாற்பது பாடல்களும் பாடிய பாவலர்.[4]

கம்பர், சடையப்ப வள்ளலை அணுகினார், உள்ளத்தே உள்ளதை உரைத்தார். அதன் பயனைப் பாடுகிறார்.

**புக்குவிடைத்தழுவி கோடுழுத புண்ணெல்லாம்**
**திக்கில் உயர் காளியம்பன் தென்புலன்மா-னக்கணமே**
**தோள்வேது கண்டிலனேல்மற்று சுந்தரப்**
**பொற்றேன்றலுக்கு**
**வாழ்வேதும் கண்டிலமே மற்று.[5]**

காளியம்பன் — செல்வந்தர், தென்புலன்மான்— சடையப்பர்.

**கருத்து**

விரும்பிய கன்னிகையைக் கைப்பிடிக்கக் காளையை அடக்கிப் புண்படுவான்போல், அரும்பிய வல்லியின் காதலால், புண்பட்ட தோள் வேறு — நெஞ்சு வெம்மை உணர்த்த நான்கு திக்கிலும் பெயர் பெற்ற தென்புலன் மான்—தென்னாட்டுச் சீமான் கொடைவள்ளல் சடையப்பர் பேருதவியால் சுந்தரப் பொற்றேன்றலோடு புதுவாழ்வு காணப் பெற்றேன் கண்டிலனேல்—கண்டு கொள்ளாதிருந்தால், வல்லியோடு வாழ்வேதும் கண்டிருப்பேனோ என்னவோ? எனப் பாடியுள்ளார்.

கம்பர் நிகர்த்த வல்லித் திருமணம் மயிலையில் மனம் போல் நிகழுற்றது. அதனை,

**அண்ணல் திருவாலியணி மயிலை அத்தனையும்**
**வெண்ணிலவின்சோதி விரீத்ததே—நண்ணும்**
**தடந்துப் புவிற்பாணன் தன்முகத்தே கொண்டு**
**நடந்துப் புவிற் பாண(ன்)கை.**

—கம்பர். தமிழ்நாவலர் சரிதை பக். 83

**கருத்து**

அண்ணல் திருவாயமுதனார் திருக்கூட்டம் புடைச்சூழப் பால் நிலவுப்போல் குளிர்ச்சியுடன் கூடிய மகிழ்ச்சி பொங்கிப் பூரிக்க வெண்ணிலவான என் பெண் மயில் உள்ளம் உவகைப் பொங்கக் கரம்பிடித்தே மயிலை அத்தனையும் வலம் வந்தபோது அவள் மலர்முகம் சோதியாய் மலர்ந்தது. மகிழ்ந்தவள் 'நண்ணும்(விரும்பிய) வண்ணம் திருமணம் திகழ உலகக் கவிஞனாகக் கம்பரைப் போற்றி ஆன்றோர் வாழ்த்துரைக்க என்கரம் பிடித்த அவளும் கவிஞனாகிப் பூரித்து என் முகம் பார்த்து நடந்தாள்.

கம்பர் கற்பும் பொற்பும் ஒருங்கமைந்த நங்கையை மணந்து, மனையறம் பேணி அம்பிகாபதி எனும் செம்மைத் திருமகனாரைப் பெற்று இனிது வாழ்ந்தார். அம்மகனாரும் பெரும் புலவரே. ''அம்பிகாபதிக் கோவை'' எனும் சீரிய செந்தமிழ் நூல் யாத்தார் என்று சு. ச. ராமசாமி புலவர் கூறுகிறார்.[6]

தமிழ்த்திரு நாடதனில் தைப்பொங்கல் திருவிழா முடிந்ததும் மனம்பொங்க மாமனார் சதுரானனப் பண்டிதர் மகள் நிகர்த்தவல்லியையும் கம்பரையும் சீரும் சிறப்புமாக வரிசையுடன் திருவொற்றியூரிலிருந்து மணமகன் வீட்டுக்கு அனுப்பி வைத்தார் என்று ஆ. கி. நாயுடு எழுதியுள்ளார்.[7]

சடையப்ப வள்ளல் தன் வெண்ணெயூரில் புதுமையாக மணமக்களுக்கு வரவேற்பளித்துச் சிறப்பிக்கக் கருதி, வீதி இருமருங்கும் செங்கரும்பு கால்நட்டு, தே, மா, பலா, தோரணங்கட்டி (கதிராமங்கள ஆன்றோர்கள் கர்ண பரம்பரையாக இவ்வாறு கூறுகிறார்கள்) யானை, குடை படைசூழ, வாத்தியம் இசைக்க, ளங்கம் ஊத, முரசு கொட்ட, ஊர்கூடி வரவேற்றாராம். சடையப்பர்

முன்னிருந்து அழைத்துச் செல்ல சடையப்பர் வீட்டு அருகில் பெரிய பந்தலிட்டு "நெற் கதிரால்" கூரை வேய்ந்து, புதுமணத் தம்பதிகள் புது நாளுக்கென்று தனித்த ஒரு குடில் அமைத்து.

அதைச் "செங்கரும்பால் அடுக்கி செந்நெற் கதிரால் வேய்ந்துப் புதுக்குடில் அமைத்திருந்தாராம். மன்னர் இளவரசர், மந்திரி பிரதானிகள், புலவர்கள், புரவலர்கள் அனைவரும் வந்திருந்து சிறப்பித்ததாகக் கூறுகின்றனர். (அவ்வூர் தமிழாசிரியரும் சிலரும் தெரிவித்தது) மன்னர் இளவரசர் என்போர் விஜயாலயன், மகன் ஆதித்தனாக வும் இருக்க வேண்டும். காலம் கி.பி. 860.

இவ் வரவேற்பையும் நெற்கதிரால் வேய்ந்த புதுக் குடிலையுங் கண்டு மகிழ்ந்த கம்பர், சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

**புதுமாதர் வீட்டைப் புகழ் பெறவே செந்நெற்**
**கதிரானே வேய்ந்தருளுங்கை—பதிநேர்**
**வருவெண்ணெய்நாடன் வரும் நாவலர்க்குத்**
**தருவானவன் சடையன்தான்.**[8]

(மேற்கோள்)

அலங்கு செந்நெல் வேய்ந்த
ஆய் கரும்பின் கொடிக்கூரை.[9]

**தனதானியத்தில் உயர்ந்தோர்கள் தாமே என்னுந்**
**தருக்கேயோ?**
**வினவாதிரவில் நெற்கதிரால் வேய்ந்தோர்**
**வல்லிவிடத்தல்லால்**

கனிசேர்த் தமிழுக்குப் பன்னிரண்டு கடகயானைக்
காட்ளித்து
மனைவாழ் உடையான் வெண்ணெய்நல்லூர்
வாழ்வோன்.
—சோழமண்டலமே.[10]

புதுப்பெண் என்பது பொதுவாகத் திருமணம் நிகழ்ந்த பெண்ணையே குறிக்கும்.

(உதாரணம். புதுப் பெண்ணைக் காணோம் கணவன் போலீசில் புகார் செய்தான் என்று செய்தித்தாள் கூறுகிறது.[11] புதுப் பெண் என்பதைச் சிலர் தாசியெனக் கருதி எழுதியுள்ளமையால் இவ்விளக்கம் தரப்பட்டது.)

கி.பி. 862.

கொங்குநாட்டுத் தலைக்காட்டின் அரசன் பிருதிவிபதி மகன் சிவராமனிடமிருந்து, உறையூரைப் பாண்டியன் ஸ்ரீமாறன் கைப்பற்றி இருந்தான். இவனோடு விஜயாலயன் போர்த் தொடுத்து உறையூரை கி. பி. 862இல் கைப்பற்றினான்.[12]

# அடிக்குறிப்பு

1. கம்பர் தனிப்பாடல் நாவலர் சரிதை. பக். 80.
2. ,, ,, ,, ,, ,, 81.
3. புலவர் ச. சிவகாமி கம்பர் ஆய்வடங்கல் பக். 81.
4. (1) தமிழ் புலவர் அகராதி பக். 231, (2) இலக்கிய வரலாறு, மது. ச. விமலானந்தம்.
5. கம்பர் தனிப்பாடல் த. நா. ச. பக். 82.
6. ராமசாமி புலவர் கம்பராமாயண வசனம்.
7. கம்பர் வரலாறு பக். 50 பண்டிதர் ஆ. கி. நாயுடு.
8. கம்பர் தனிப்பாடல் த. நா. ச. 83
9. புறநானூறு.
10. சோழ மண்டல சதகம்.
11. 30-6-91 தினத்தந்தி செய்தி.
12. (1) ஊரும் பேரும், (2) இலக்கியமும் கல்வெட்டும் சதாசிவ பண்டாரத்தார்.

# 14. கம்பர் கால சோழராட்சி

500 ஆண்டுகளாகப் பல்லவர் பெருமைக்கு உறைவிடமாக இருந்த தொண்டை நாடு ஆதித்தன் உறைவிடமானது.[1] நிருபதுங்கனின் தொண்டை நாடு சார்பாக மருமகப் பிள்ளையும் சோழநாட்டு இளவரசருமான ஆதித்தன் தொண்டை மண்டலத்தை ஆட்சிசெய்து வந்தான்.

## கி.பி. 860.

தந்தையை இழந்த கம்பர் புரவலரான பண்டிதரிடம் சடையப்பர் ஆலோசனைப்படி தாய்வழி உறவினரான சதுரானனப் பண்டிதரிடம் கல்வி முடித்து அவரது திருமகள் நிகர்த்தவல்லியை மணமுடித்து வெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளலின் வரவேற்பை ஏற்றுச் சிறிது காலம் தேரழுந்தூரில் தங்கிஇருந்தபோது,—

உறையூர் மன்னர் விஜயாலயனைச் சடையப்பரோடு சந்தித்து இருக்கவேண்டும். அப்போது காஞ்சியில் ஆதித்தன் அரண்மனை ஆசானாக, ஆலோசகராக இருக்க கம்பர் நியமிக்கப்பட்டிருக்க வேண்டும்.

கம்பர் சோழன் அவையடைந்தார். அரசன் புலவரை அன்புடன் வரவேற்று அமர்வித்தான். தன் அவைப்புலவர்களுக்குக் கம்பரைத் தலைமைப் புலவர் பதவியை அளித்து பாராட்டினான். அன்றுமுதல் அவையினரையும் அரசனையும் கவித்திறத்தால் மகிழ்வித்தார் எனச் சில நூல்கள் கூறுகின்றன.[2]

## கி.பி. 862

இதன் காரணமாகக் காஞ்சியை அடுத்த அம்பியில் வாழ்ந்தபோதுதான் அம்பிகாபதி பிறந்தான் என்பதற்குச்

சான்று உள்ளது. அம்பியில் கோயில் கொண்டுள்ள அம்பீசுரர் மூர்த்தியின் அருளால் மைந்தன் ஒருவன் பிறந்தான், ஆகையால் புதல்வனுக்கு அம்பிகாபதி என்று மூர்த்தியின் பெயரையே வைத்தார் என்று இரு குறிப்புகள் கிடைத்துள்ளன.[3]

## கி.பி. 865

''ஏர் எழுபது'', ''திருக்கை வழக்கம்'' காஞ்சியில் அரங்கேற்றம். கம்பரின் உயிரினும் மேலான சடையப்ப வள்ளல், மன்னர்கள், சேதிராயன் மற்றும் பண்டிதர்கள் குழு முன்னிலையில் சிறப்பாக அரங்கேற்றம் நடைபெற்றது. அரங்கேற்றப்பாடல்,

பாவலர்தாம் ஏரெழுபதோதி அரங்கேற்றம் களரியியிலே
கரிவிட நாகம் கடிக்கும் கை—திருக்கை வழக்கம்.

**குணங்கொல் சடையன் புதுச்சேரி கொடையான்**
**சேதிராயன்**
**கணங்கொல் பெரியோர்பலர் கூடிக் கம்ப நாடன் கவிகூற**
**விளங்கும் பரிசில் ஈந்து புவி ஏழும் புகழ் ஏர் எழுபது எனும்**
**மணங்கொல் பெருகாப்பியம் பனுவல் வகித்தார் சோழ**
**மண்டலமே.**[4]

என்று அரங்கேற்றத்தைக் குறித்துக் கம்பர் பாடலும் சோழ மண்டல சதகமும் குறிப்பிடுதல் அறிக. தவிர அரங்கேற்றத்தில் கலந்து சிறப்பித்த முதலாம் ஆதித்தனையும் சிறப்பிக்கும் விதம் காண்க.

79 நாட்டுக்குடியுடைய முதலாம் ஆதித்த சோழனையும், அவனது நாட்டுக் குடிமக்களையும் சிறப்பித்த கம்பர் பாடிய பாடல்,

முடிவுடைய மன்னவரின் மூவுலகும் படைத்துடைய
கொடியுடைய மன்னவரின் குலமுதற் பெயருடையான்
இடியுடைய ஒலிகெழுநீ எழுபத்தொன்பது நாட்டுக்
குடியுடையான் சென்னி பிறரென்றுடையார் கூறிரே.

—ஏர் எழுப து

## கம்பர் காலம் காட்டும் கண்ணாடி
## எவரும் எடுத்துக் காட்டாத சான்று

மேற்கண்ட பாடல் ஏர் எழுபதில் காணப்படுவதால் கம்பரின் முதல் நூலாக இதனை அரங்கேற்றம் செய்துள்ளார்கள் என்றும், இதற்கு முன்பே, விஜயாலய சோழனுடனும், ஆதித்த சோழனுடனும் கம்பர் நன்கு அறிமுகமும் நெருக்கமும் கொண்டிருந்தார் என மேற்கண்ட பாடலில் விளங்கும்.

தவிர, இப்பாடலில் மன்னர்களில் ''குலமுதல்வன் பெயர் உடையான்'' என்பது சோழர்கள் சூரிய குலம் என்பதாகும். சோழ மன்னர்களில் குல முதல்வனான (சூரியன்) பெயரை, ''ஆதித்தன்'' என்று பெயர் கொண்டவனான, இந்த ஆதித்தனையே ''மன்னவரிற் குலமுதற் பெயருடையான்'' எனக் கம்பர் பாடினார்.

அதாவது ஆதித்தன் என்பவன் கம்பர் அறிந்தவரை இவன் ஒருவனே. 2ஆம் ஆதித்தனுக்குப் பிறகு கம்பர் தோன்றிப் பாடி இருப்பின் மன்னர்களில் ஆதித்தன் எனப் பெயருடையார் இருவர் என அறிந்திருப்பார். அப்பொழுது ''குலமுதற் பெயருடையான்'' என ஒருமையில், ஒருவனைக் குறித்துப் பாடியிருக்க இயலாது; பாடி இருப்பின் ''குல முதற் பெயருடையாரில்'' முன்னவன் என்றோ, முதலாமவன் என்றோ [முதலாம் ஆதித்தன்] விளங்கப்பாடி இருப்பார் என்பது ஈண்டு அறியத் தக்கதாகும்.

இப்பாடல் "கம்பர் காலம் காட்டும் கண்ணாடி." அசைக்க முடியாத ஒரு சிறந்த ஆதாரம் என்பதும், கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு தான் என்பதும், கம்பர் அரங்கேற்றும் எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழு என்ற பாடல்படி கி. பி. 882இல் அரங்கேற்றம் நிகழ்ந்தது என்பது தான் சரி. இதனை உறுதி செய்யும் இப்பாடலை இது வரை ஆய்வாளர்கள் எவரும் எடுத்துக் காட்டாத அரிய சான்றாகும் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மேலும் இதை உறுதிப்படுத்தும் 79 நாட்டு குடியுடையான், என்பது எந்தெந்த நாடுகள், அவை தொண்டை மண்டலத்தை மட்டுமே குறிக்குமா? என ஆதாரம் தேடிய போது, மிகச் சரியான ஆதாரமாகக் கிடைத்தது.

24 கோட்டங்களில் 79நாடுகள் அடங்கியது தொண்டை மண்டலமே.

அவை

1. புழற்கோட்டம்: ஞாயிறு நாடு. அம்பத்தூர் நாடு, ஆகுடி நாடு, [ஆவடி] ஆத்தூர் நாடு, கண்ணியநாடு, எழுமூர் நாடு [எழும்பூர்].

2. புலியூர் கோட்டம்: குன்றத்தூர் நாடு, போரூர் நாடு, மாங்காடு நாடு, அமரூர் நாடு, கோட்டூர் நாடு.

3. ஈக்காடு கோட்டம்: காக்கனூர் நாடு, கச்சிநாடு. (காஞ்சிபுரம்)

4. மணவூர் கோட்டம்: பாசாலி நாடு, இலத்தூர் நாடு, கொண்ணூர் நாடு, (எண்ணூர்) புரசை நாடு, பெருமூர் நாடு.

5. செங்காட்டு கோட்டம்: பொணலூர் நாடு, அதிகத்தூர் நாடு.

6. பையூர் கோட்டம்; வீரபத்திர நாடு, சென்னூர் நாடு, வணகவிநாடு, தண்ணூர் நாடு.

7. எழிற்கோட்டம்: தன்கநாடு. மாகறல் நாடு. கோனேரி நாடு.

8. தாமற் கோட்டம் (தாமல்): கரிவீடு நாடு, வடகரை நாடு.

9. ஊற்றுகாடு கோட்டம்: பாலையூர் நாடு, தாமனூர் நாடு, (தம்மனூர்) குண்ணநாடு, திருவனார் நாடு.

10. களத்தூர் கோட்டம்: பிறையூர் நாடு, பட்டரை நாடு, முருத்தூர் நாடு.

12. ஆமூர் கோட்டம்: மீகுமிழி நாடு, பழுவூர் நாடு.

13. ஈத்தூர் கோட்டம்: அறமாங்க நாடு.

14. வெண்குன்ற கோட்டம்: பெருநகர் நாடு. அரசூர் நாடு, மருதநாடு. நல்லூர் நாடு, தொள்ளாறு நாடு.

15. பல்குன்ற கோட்டம்: பராஞ்சி நாடு, தச்சூர்நாடு, மெய்யூர் நாடு, சிங்கம் பெருத வளநாடு, பொருந்த திமிரி நாடு.

16. இளங்காட்டு கோட்டம்: பொன்னூர் நாடு, மாகுன்ன நாடு.

17, காலியூர் கோட்டம் : காழியூர் நாடு. திருப்பூவை நாடு, விற்பேடு நாடு, எரிகித நாடு, பாவூர் நாடு.

18. சிறுகானாக் கோட்டம் : ஆய்ந்த நாடு.

9. படுவூர் கோட்டம்: பெருமதநாடு, ஆற்காடு நாடு, செங்குன்ற நாடு.

20. கடிகைக் கோட்டம்: பெருங்காஞ்சி நாடு, மேல்களத்தூர் நாடு, பராஞ்சி நாடு.

21. செந்திரிகைக் கோட்டம்: பேரையூர் நாடு, வற்குள நாடு, கிண்ணை நாடு, வெங்களூர் நாடு.

23. வேங்கிடக் கோட்டம்: குடகரை நாடு, தொண்டைமா நாடு, பொத்தப்பி நாடு.

24. வேலூர் கோட்டம்: ஒழுகரை நாடு, வானூர் நாடு, சோழவல்லி நாடு, விடலாபுர நாடு, செம்புரிநாடு, நென்மலி நாடு, மாத்தூர் நாடு.

ஆக கோட்டம் 24. நாடுகள் 79 கொண்டது தொண்டை மண்டலமாகும். மேலும் இந்த 79 நாடான தொண்டை மண்டலத்தின் விஸ்தீரணம், எல்லையும் கம்பர் பாடியுள்ளார்.

தொண்டை நாட்டை 24 கோட்டங்களாக அமைத்தவனும், காவிரிக்கரை அமைத்துக் கல்லணை கட்டியவனும் கரிகாலனெனும் மனுநீதி சோழனே.[5]

**மேற்குப் பவளமலை வேங்கட நேர் வடக்காம்**
**ஆர்க்கு முவரியணி கிழக்கு—பார்க்குளுயர்**
**தெற்குப்பினாகி திகழ்இருபதின் காதம்**
**நற்றொன்டை நாடெனவே நாட்டு.**

—கம்பர் தனிப்பாடல்

தொண்டைநாடு 20 காதம் [200] மைல் என்கிறது இப் பாடல். 1 காதம் 10 மைல் என்கிறது தமிழ்க் கணிதம்.

தொண்டை நாடு எங்கே இருக்கிறது என்பதை நான்கு எல்லையால் சுட்டிக் காட்டுகிறது. பவளமலை. வேங்கடம், கடல், பினாகி என்கிறது.

பினாகி—பெண்ணை நதி (அகராதி) பெண்ணை நதி—பாலாறு, செய்யாறு, இவ்விரண்டிற்கும் இடையில் இருப்பது இதனை வெண்ணை நதி எனவும் குறிப்பிடுவார்கள்.[8]

## கி. பி. 869

காஞ்சி பல்லவன் தந்திவர்ம பல்லவன் இயற்கையெய்தினான். தந்தை ஆட்சியில் மூன்று இளவரசர்களான: நிருபதுங்கன், அபராஜிதன், கம்பவர்மன் ஆகியவர்கள் இருந்தார்கள் என்பது விளங்குகிறது; நிருபதுங்கனுக்குப் பட்டங்கட்டியபோது அரசுரிமை தனக்கும் உண்டென்று அபராஜிதனுக்குத் தோன்றி இருக்க வேண்டும்.

தந்தை தந்திவர்மன் மறைந்ததும் அது வெளிப்பட ஆரம்பித்தது. ஆதித்தனுக்கு உள்ள உரிமை தனக்குக் கிடையாதா? எனப் புழுங்கினான் போலும். பின்னால் இவன் நிருபதுங்கன் படையை வெற்றி கொள்கிறான். இப்போது ஆதித்தன் உறையூர் அடைகிறான் எனத்தெரிகிறது. கம்பவர்மன் மட்டும் நிருபதுங்கனால் வடஆற்காடு படைத் தளபதியாகவும் ஆட்சிப் பொறுப்பிலும் வைக்கப் பட்டான்.

அவன் ஆதித்தன் காலத்திலும் நீடித்து மேலும் நெருக்கமானவனாகத் தெரிகிறது. கம்பவர்மன், ஆதித்த சோழன், சடையப்ப வள்ளல், கம்பர் ஆகியோரும் நிருபதுங்கனும் அபராஜிதனும் சமகாலத்தவரெனலாம். பல்லவ இளவரசர்கள், ஆதித்தன் கம்பர் இவர்களைவிட இளைய வர்கள் எனத் தெரிகிறது.

## கி. பி. 870—912
## ஆராய்ச்சியாளர்கள் எடுத்துக்காட்டாத சான்று

கம்பவர்ம பல்லவன் ஆட்சி, இவன் ஆதித்தனாட்சியில் ஓர் பகுதி சிற்றரசனாக விளங்கினான் போலும். இவன் காலத்தில் சடையன் என்ற ஒரு வள்ளல் ஆயிரம் காடி நெல் கொடுத்ததாக **ஒரு கல்வெட்டும்** ஐநூறு காடி நெல் கொடுத்ததாக **ஒரு கல்வெட்டும்** உள்ளது. இதனைப்பற்றி மதுராந்தக உத்தம சோழன் **செப்புப் பட்டயம்** கூறுகிறது, என்று செந்தமிழில் குறிப்பு வருகிறது. உத்தமசோழன் செப்பேடு சாசனம் (984—985).

இவை சடையப்ப வள்ளல் ஈழநாட்டு வறுமையைப் போக்கக் கொடுத்த நெற்கொடையைப் பறைசாற்றுகிறது என்றும் செந்தமிழ் இதழ் குறிப்பிடுகிறது.

ஆதித்தனாட்சி, கம்பவர்மன் காலம், கம்பரின் சடையப் பரைப் பற்றிய குறிப்பு இது என்பதை உணரும்போது, **''கம்பர் காலம் காட்டும் கண்ணாடி''**யாக உள்ளது. இந்த ஆதாரம். இது ஒரு அசைக்க முடியாத ஆதாரமாகும். கம்பர் கால ஆய்வாளர்கள் யாரும் எடுத்துக்காட்டாத ஒரு ஆதாரம் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். எனவே கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான். அரங்கேற்றம் கி. பி. 885 தான் என்பதை உறுதிப்படுத்தும்.

## கி. பி. 871—907

விஜயாலயன் மகன் முதலாம் ஆதித்தனுக்கு முடிசூட்டு விழா உறையூரில் அமோகமாக நடைபெற்றது. இவன் காவிரி இரு கரையிலும் காயத்திரி மலையிலிருந்து சிவாலயங் களை அமைத்தான். காளத்தியிலும் திருபுறமயத்திலும் உள்ள ஆதித்தேச்சுரம் கோயிலைக் கட்டினான். இவனது

வேறு பெயர் ராஜாதிராஜன், இராஜேந்திரன். இவன் இராமன் மீது கொண்ட ஈடுபாடு காரணமாக, கோதண்ட ராமன் என்ற பெயரும், தனது பள்ளிப் படைக்குக் கோதண்டராமேச்சுரம் என்ற பெயரும் கொண்டான்.[8]

**வைணவத் தொடர்புப் பெயர் :-** கோதண்டராமன் எனப் பெயர் கொண்ட முதலாம் ஆதித்தன் சடையப்பர் மற்றும் கம்பர் தொடர்பு காரணமாக இராமகாவியம் தமது ஆட்சிக்காலத்தில் உருவானமை குறித்தும் ஆதர வளித்தான் என யூகிக்கலாம். இதன் காரணமாக ஆதித்த னுக்குக் "கோவிந்தராசமாராயர்" எனவும் சிறப்புப் பெய ருண்டு. இவனது இறுதிக்காலத்தில் இவனது விருப்பப்படி இவனுடைய பள்ளிப்படைக்கு [சமாதியின்மேல்] கோதண்ட ராமேச்சுரம் என்ற திருக்கோயிலை இவனது மகன் பராந்தகன் கட்டினான்[9] என்று சாசனாதாரங்களும் கூறு கின்றன.

இவனது விருது பெயர், மதுரை வென்ற ஆதித்திய மதுரை கொண்ட கோ பரகேசரி கோவிகேசரி, கோவிராஜ கேசரிவர்மன்.[10]

இவனது கல்வெட்டுகள்: அபராஜிதன்மேல் போர் தொடுத்து யானை மீது இருந்தவனை ஒரே வீச்சில் வெட்டி னான் எனக் கன்னியாகுமரி கல்வெட்டு கூறுகிறது. காளத்தி யில் கோதண்ட இராமேஸ்வரத்தில் பல மொழி கல் வெட்டுக்கள் உள்ளன.

திருவொற்றியூர் ஆதிபுரீச்சுரத்தில் இவன் பெயராலும் இவனது மகன் பராந்தகன் பெயராலும் கல்வெட்டுக்கள் உள்ளன. இவனது இந்தக் கல்வெட்டுதான் மிகப்பழமை யானது என்று கூறப்படுகிறது.[11]

முதலாம் ஆதித்தனது மக்கள் : இளங்கோ மிச்சு என்ற தேவிக்கு [ராஷ்டிரக்கூட கிருஷ்ணன் மகளுக்கு] கன்னர

தேவன் என்ற மகனும், பல்லவ மகள் வீரமாதேவிக்குப் பராந்தகனென்ற மகனும் உண்டு. தவிர அமராவதி என்ற இராசகுமாரி கன்னரத்தேவன் தங்கையாக இருக்கலாம். இவள்தான் அம்பிகாபதியின் காதலியாகும்.

கம்பர் மகன் அம்பிகாபதி சுமார் இருபது வயது திருமண வயதிலேயே தமிழ் வித்வானாகி பிரபலமாகிக் கொண்டிருந்தான். சிறு வயதிலிருந்தே இளவரசர்கள் கன்னரத்தேவன், பராந்தகன், அமராவதி, அம்பிகாபதி, அம்பிகாபதியின் தங்கை காவேரி ஆகியோர்கள் கம்பரிடம் கல்வி பயின்று வந்தார்கள்.

இவர்களுக்காகவே கம்பர் ஆத்தான ஆசிரியராக இருந் தாரெனக் கூறலாம். கம்பர் இராமாயணம் பாட வேண்டி சோழநாட்டுக்குச் சடையப்பரிடம் செல்ல வேண்டியதா யிற்று. அப்போது அம்பிகாபதியே அமராவதிக்கும் காவேரிக்கும் கல்வி போதித்து வந்தான் என்பர்.

ஆதித்த சோழன் மகன்கள் இருவரும் அரசியல் காரண மாக சோணாடு, காஞ்சி, காளத்தியெனவும் வெவ்வேறு பகுதி பாதுகாப்புக்காக ஈடுபடத் தக்க வயதினராகயிருந் தனர். ஆகவே அடிக்கடி வெளியூர்கள் சென்று வந்ததாகக் கருதலாம். இது அம்பிகாபதி அமராவதி காதல் மலரக் காரணமாகியது எனலாம். கல்வி கேள்விகளில் முன்னேறி னார்கள் எனலாம். அம்பிகாபதி, அமராவதி, காவேரி பற்றி வரலாறுகளில் ஒன்றும் கிடையாது. இலக்கியத்தில் அம்பிகாபதி காதல் கதை மற்றும் சில பாடல்கள் சில குறிப்புகள் காணப்படுகின்றன. இவைகள் தொன்று தொட்டு விளங்கி வரும் தெய்வீக அமரத்துவ காதல்கதை களில் அம்பிகாபதி அமராவதி காதலே உலகத்தில் தனிச் சிறப்பாக விளங்கி வருகிறது. 12

## கி.பி. 880

முன்பு மதுரையைப் பறிகொடுத்த பராந்தக பாண்டியன் ஆதித்தன் மீது படையெடுத்துத் தோல்வியுற்றான். கம்பர் இராமாயணம் பாடத் துவங்கும்படியும் பாடும் போதும் சடையப்பரின் கல்விக் கொடையே உன் படைப்புக்கு ஆதாரம் என்பதைக் கருத்திற் கொண்டு நன்றி பாராட்டும் வகையில் கவனத்திற் கொள்ள, கம்பரின் அன்னை திலகவதியார் கவனப்படுத்தியதாக ஒரு பாடல்.

**தடையொன்றடுத்த சமயா சமயந்தனிற் செய்தபேர்**
**கொடையொன்றனத்தம் புகழ் தருமே யன்னை கூறு**
**சொல்லால்**
**விடைகொண்ட இராமாயணத்தில் வெண்ணெய்**
**நல்லூர்ச்**
**சடையனென்றான் கம்பநாடன் ஏத்த சபாபதியே.[18]**

—ரத்த சபாபதி

## கி.பி. 881

கம்பர் இராமாயணம் பாடத் துவங்கினார். சடையப்பர் வேண்டுகோள் படியும், விஜயாலயன் [உறையூர்] அழைப்பின் பேரிலும் தனது நீண்டகால அவாவின் படியும், இராமாயணம் இயற்ற தேவையான ஆயத்த குறிப்புகளுடன் சென்று வெண்ணெயூரில் இருந்து இராமாயணம் பாடினார் என்பதற்கான ஆதாரமாக உள்ள பாடல்,

**''தொடை நிரம்பிய தேமறுமாக் கதை**
**சடையன் வெண்ணெய் நல்லார் வயிற்றந்ததே''**

—கம்பர்

கி.பி. 881. ஆதித்த சோழன் தந்தை விஜயாலயன் விண்ணுலகடைந்தார்.

கி.பி. 882. அம்பிகாபதி திருமணம். கம்பர் அம்பிகாபதியை உணர்ந்து கம்பர் தம் குலக்கொடியான [உவச்சர் குல] நற்குடி நங்கையொருத்தியைப் பெண் பார்த்துச் சடையப்பர் ஆதரவாலும் ஆதித்தன் உறுதுணையாலும் அம்பிகாபதிக்குக் காஞ்சியில் வெகுசிறப்பாகத் திருமணம் முடித்தார்.

அம்பிகாபதியின் திருமணத்தின் போது சடையப்பருக்கு உரிய இடமின்றி ஓர் மூலையில் நின்றிருந்தார். கம்பர் மனைவி இதனைக் கண்டு கம்பரிடம் ''எங்களண்ணாவிற்கு இடமின்றி இருப்பதோ'' என, கம்பர் 'சடையப்பரை நான் மிகவும் உயர்ந்த இடத்தில் வைக்க இருக்கிறேன்' என்றார். இராமாயணப் பாடலில் நூறு பாடலுக்கு ஒரு பாடலில் சடையப்பர் பெயரைச் சிறப்பித்துப் பாடிவருவதைக் குறிப்பிட்டுக் கூறினாராம். இதனை 1. அபிதான சிந்தாமணி, 2. சக்தி இராமாயண முன்னுரை 3. கவி சக்ரவர்த்தி கம்பர் ஆகிய நூல்களில் காணலாம்.

எங்களண்ணாவுக்கு இந்த இடந்தானா கிடைத்தது? என்று கம்பர் மனைவி சொன்னார். உன் அண்ணாவை வைக்க வேண்டிய இடம் தெரியும். அங்கே வைப்பேன். இது அவர்கள் வீடுதானே! இதில் எங்கிருந்தாலும் தாழ்வில்லை என்று உரைத்தார் கம்பர் என இடைக்காலப் புலவரும் நூலாசிரியரும் குறிப்பிடுகிறார். அம்பிகாபதியின் திருமணத்திற்குப் பிறகும், அமராவதியின் காதல் தெய்வீகக் காதலாக உருவெடுத்து மேலும் வலுப்பெற்றதாகத் தெரிகிறது. கம்பரும் ஊரிலில்லை, ஆதித்தசோழனும் இளவரசர்களும் அரசியல் காரணமாக ஆங்காங்கே சென்று கொண்டிருந்தனர். இச்சூழ்நிலையில் அம்பிகாபதி

அமராவதி காதல் ஆழமாகவும் மெய்ம்மை மிகுந்ததாகவும் பலப்படக் காரணமாகியது.

## கி.பி. 883 இல்

கம்பர் இயற்றிவரும் இராமாயணம் இறுதி பெறும்நிலை எய்தவே, பல பிரதிகள் தயாரிக்க வேண்டிய அவசியத் தாலும் தம் மாணாக்கர் பலரைக் கொண்டு அப்பணியை முடிக்க தமது மாமனார் ஊரான திருவொற்றியூரில் காளிக் கோயிலைத் தேர்ந்தெடுத்தார். இரவெல்லாம் அக்கோயி லில் பந்தங்கள் ஏற்றப்பட்டு அம்பாளை வேண்டி காகுத்தன் [இராமன்] மெய் சரிதை நந்தாதெழுதி வெற்றி பெற, தீப்பந்த ஒளி பிந்தாமல் ஒளியூட்ட, ''ஒற்றியூர் காக்க உறைகின்ற தாயே! உன்னை வணங்கித் துவக்குகிறேன்'' என வேண்டி கம்பர் பாடினார்.

இந்நிகழ்ச்சியைக் கம்பரும் மாணாக்கரும் அம்பாள் சந்நதி எதிரே வரிசையாய் அமர்ந்து, நடுநாயகமாகக் கம்பர் கம்பீரமாக அமர்ந்துபாட, மாணாக்கர்கள் எழுது வதுமாக ஒரு அற்புதமான ஓவியசின்னம் ஒன்று திருவொற்றியூர் வட்டப்பாறையம்மன் சந்நதி எதிரே இன்றும் உள்ளது. தொன்று தொட்டு இருந்து வருவதாக அன்றைய காட்சியை நினைவுறுத்துகிறது. [14]

## கி.பி. 884இல்

இக்காலத்தில் கம்பரது அருமை மகனும் புலவனுமான அம்பிகாபதியின் அன்பு மகனான தண்டியெனும், மகன் பிறந்தான். அவன் சிறந்த முறையில் கல்விகற்றுத் தேர்ந்து பிற்காலத்தில் பாட்டனார் கம்பர் இயற்றிய ''கம்பராமாயணம்,'' தமிழ் அன்னைக்கு இதயமாக

விளங்குவதுபோல், தந்தை அம்பிகாபதி இயற்றிய "அம்பிகாபதிக் கோவை" தமிழ் அன்னையை அலங்கரிப்பது போல், தண்டி இயற்றிய "தண்டி அலங்காரம் என்ற தமிழ் இலக்கண நூல்" தமிழ் அன்னைக்கு இலக்கண அணியாக விளங்கி, இயலிசை நாடக முத்தமிழுக்கு மூவரும் சமர்ப்பித்த வானுயர்ந்த கொடையெனில் மிகை யல்ல. வையமுள்ளளவும் புகழ் கூட்டும் அழியா இலக்கிய மாகும் அவை.

தண்டியலங்காரம் பாடல் ஒன்று.

**பெருங்காப்பிய நிலைப் பேசுங்காலை**
**தன்னேர் இல்லா தலைவனை உடைத்தாய்**
**நெருங்கிய சுவை பாவமும் திரும்பக்**
**கற்றோர் புனையவும் பெற்றியதென்ப.** —சூத்திரம்-8

"பாவிகம்" என்ப காப்பியப் பண்பே. சூத்திரம் 918 வாழ்த்து, வணக்கம் முதலிய 25 உறுப்புகளைக் கொண்டதே காப்பியமாகும்.

தண்டியலங்காரம் 123 சூத்திரங்களைக் கொண்ட அரிய இலக்கண நூலாகும். இதனாசிரியர் நடனத்தில் வல்லவர். இவர் அம்பிகாபதி மகனாவார். இவர் செய்த தண்டி அலங்காரத்திற்குச் சுப்பிரமண்ய தேசிகர் உரை செய்துள்ளார். [15]

திருவொற்றியூரில் ராமாயணம் முழுமைப் பெற்று வேண்டிய பிரதிகள் படியெடுத்து அங்கு உதவிய புலவர் களுக்கும் மாணவர்களுக்கும், சதுரானனப் பண்டிதர் உள்பட காவியம் உருவாக அருள்பாலித்த வட்டப்பாறை வடிவுடைய அம்மன் பாதத்திற் சமர்ப்பித்து அரங்கேற்றம் இனிது நடைபெற வேண்டியும் அனைவரிடத்தும் பிரியா விடைபெற்று, சோழ நாடு சென்று சடையப்பரைச்

சந்தித்து அவரது ஆலோசனைப்படி, ஆதித்த சோழனை யும் சந்தித்து அரங்கேற்றத்திற்கு ஆலோசித்து இருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

இராமாயணம் வைணவ ஆசார்யர்கள் முன்னிலையில் படித்துக் காட்ட முறையாக அரங்கேற்றம் பெற வேண்டும் எனக் கம்பர் விருப்பம் கொண்டிருந்தார் போலும்.

அப்போது வைணவ ஆசார்ய பெருந்தகையாய் விளங்கியவர் ஸ்ரீமந் நாதமுனிவரே இதற்கு உகந்தவராக கம்பர் அறிந்திருந்தமையால் ஆதித்த சோழனும் சடையப்ப வள்ளலும் அதற்குரிய ஏற்பாடுகளுக்கு ஆவன செய்து திருவரங்கத் திருக்கோயிலிலேயே ஸ்ரீமந் நாதமுனிகள் முன்னிலையில் வைத்து ஆவனச் செய்யத்தக்க வகையில் மன்னனது செல்வாக்கும் பெற்று, கம்பர் புறப்பட ஆயத்த மானார். துணையாகச் சடையப்பர் மகனார் உடன் அனுப்பப்பட்டார் எனக் கருதும்படி அரங்கேற்றத்தின் போது உடனிருந்தார் என்ற குறிப்பு கூறுகிறது.

மன்னரின் அரண்மனையில் அரங்கேற்றம் நடைபெறு மானால் பொது மக்கள் திரளாகக் கலந்து கொள்ள இயலாது எனக் கருதி, கம்பர் திருவரங்கத் திருக்கோயிலில் அரங்கேற்றம் செய்தார் என்பதாக இந்துமித்திரன். 1986. இதழ் கூறுகிறது.

இராமாயணம் திருமாலின் அவதாரம் பற்றிய நூலாதலின் அதனைத் திருவரங்கத்தில் உள்ள திருமாலடி யார் முன்னர் அரங்கேற்றி அவர்கள் இசைவு பெற வேண்டு மென்றெண்ணிக் கம்பர் திருவரங்கத்தை அடைந்தார். [16]

பிற்கால சோழராட்சி கம்பரை ஆழ்வார்களின் அடித் தொண்டர் என்றும் அதிலும் நம்மாழ்வாரிடத்தில் தனிப் பட்ட பயபக்தி கொண்டவர் என்றும் அவர் மீது சடகோபரந்தாதி என்ற பிரபந்தம் பாடினார் என்றும் பலரும் பகர்வர்.

# அடிக்குறிப்பு

1. ஊரும் பேரும் பக். 106,

2. 1. இடைக்காலப் புலவர் பக். 90. 2. 7ஆம் வகுப்புத் தமிழ் துணைப் பாடநூல் பக். 67.

3. வித். V. நரசிம்மன் பாண்டியன் முடி. பக். 11.

4. 1. சோழ மண்டல சகதம், 2, ஏர் எழுபது

5. பொற்காலத்தின் கதை பக். 15.

6. கழகத் தமிழ் அகராதி.

7. செந்தமிழ் 52ஆம் தொகுதி பக். 223.

8. கம்பனடிப் பொடி, சடையனும் கம்பரும்.

9. 1. E.P. IND. 286. 1906. 2. E.P. IND. 230. 1903. த. வ. ம. ப. பக். 247:

10. 236. OF. 1923. VOL. IP. 542.

11. திருவொற்றியூர் பதிகம்.

12. அம்பிகாபதி தனிப்பாடல், கலைச்செல்வி தனிப் பாடல் திரட்டு பக். 10-14.

13. ஆ. கி. நாயுடு, கவிச்சக்கரவர்த்தி கம்பர் பக். 70.

14. ஆதிபுரீசுரர் ஆலயத்தில் உள்ள ஓவியம்.

15. 1. தண்டி அலங்காரம் கழக வெளியீடு, 2. தமிழ் புலவர் அகராதி.

16. இடைக்காலப் புலவர்கள் பக். 95.

# 15. கம்ப இராமாயண அரங்கேற்றம்

கம்பர் வரலாற்று ஆசிரியர்கள் இலக்கிய ஆராய்ச்சியாளர்கள் கம்பராமாயண ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிட்டவாறு திருவரங்கம் சென்று ஸ்ரீமந் நாத முனிகளைக் கண்டு தரிசித்து வந்த விஷயம் தெரிவித்து, மன்னர் ஆதித்த சோழன் சடையப்ப வள்ள்ல் ஆகியோர் நல்லாதரவாலும் அரங்கேற்றம் செய்தருள வேண்டினார்.

தம் இராம காவிய ஓலைச் சுவடிகளைப் சமர்பித்து, ஆதியந்தமாகவும், சிற்சில பகுதிகளை விளக்கியும் தெரிவித்தார் எனலாம்.

தமிழ்ப் புலவரும் வடமொழிப் புலமை மிக்க வேதாந்தியுமான பெரியோர் ஸ்ரீமந் நாத முனிகள் காவியப் பெருமையை நன்குணர்ந்து நல்லாதரவும் இசைவும் தெரிவித்து, பெருங்காவியமான இராம காவியம் பல்வேறு சமயத்தவர்களையும் சிறப்பித்துள்ளமை கண்டு பல்வேறு சமூக அறிஞர்கள் ஆதரவும் பெறுதலே இராம காவிய அரங்கேற்றத்திற்குச் சிறப்பாகுமெனத் தெரிவித்தார்கள் என்றும்,

தில்லை வாழ் மூவாயிர அந்தணரெனும் தீட்சதர்களின் ஆதரவு பெற்றிடவும், பின் தமிழ்ப்புலமை மிக்க சான்றோர் சிலரிடத்தும் சென்று அவர்களின் இசைவும் பெற்று வர அருளாசி வழங்கி யுள்ளாரெனப்பலரும் குறித்துள்ளார்கள்.

கம்பர் அவ்வண்ணமே தில்லை சென்று மூவாயிர தீட்சதர்களை ஒருங்கே கூட்டப் பெரிதும் சிரமப்பட்டார் எனவும் இறைவன் திருவருள் தில்லை மூவாயிரவர் கூடும் சந்தர்ப்பம் வாய்க்கப் பெற்று பாம்பு தீண்டிய ஓர்பாலனைக் கம்பர் விடம் நீங்கச் செய்தமையால் பெரிதும் உவந்து கம்பர் காவியத்தைக் கண்ணுற்றுச் சில பல கேள்விகள் தொடுத்துள்ளார்களாம். கம்பர் அவைகளுக்கு உரியவாறு பதில் அளித்தமையால் மகிழ்ந்து புகழ்ந்து,

**நாடிய பொருள் கைக்கூடும் ஞானமும் புகழுமுண்டாம்**
**வீடியல் விழியதாக்கும் வேரியங்கமலை நோக்கும்**
**நீடிய அரக்கர் சேனை நீறுபட்டழிய வானக**
**சூடிய சிலையி ராமன் தோள்வலி கூறு வார்க்கே.**

—கம்.ராமா.பாயிரம்

என்று பாயிரம் பாடிக் கொடுத்துத் தங்களின் இசைவை அளித்து விடையளித்தார்கள்.

திரு நறுங் கொண்டைத் திருத்தலம் சென்று சமண பண்டிதரைக் கண்டு கம்பர் இசைவு கோரியுள்ளார். அதனை,

கல்வியிற் சிறந்த கம்பர் தான் இயற்றிய இராமாயணப் பெருங்காப்பியத்தை இங்கு வாழ்ந்த சமண புலவர்கள் முன்னிலையில் பாடிக்காட்டி அவர்களின் ஒப்புதலைப் பெற்றார்[1] என்கிறது சென்னை ஆவணக் காப்பக ஆவணம்.

கிட்கிந்தா காண்டம் நாடு விட்டபடலத்தில் சுக்ரீவன் அனுமனுடன் தென்திசை செல்லும் வானர வீரருக்கு வழி கூறுமிடத்துத் திருவேங்கட மலையை அறிமுகப்படுத்து கிறான். திருவேங்கட மலையில் உறையும் உயிர்த்தவ ராகிய அருக முனிவரின் பெருமையை ஆதாரங்கள் விளக்கு வதைக் காண்போம்.

திரு நறுங் கொண்டைத் தலத்திலிருந்த சமண தமிழ் வித்வான்களிடம் மற்றும் பண்டிதர்களிடம் சம்மதம் பெற

வேண்டுமென அவ்விதமே வாதில் வென்று ஒப்புதலும் பெற்று வைணவ மகா பரமாச்சாரியாகிய ஸ்ரீமந் நாத முனிகளின் கட்டளைக் கிணங்கி ஒரு மண்டப கைங்கர்யம் செய்து முடித்து (கம்பர் அரங்கேற்றிய மண்டபம்) அவர் திருவடிகளில் காவிய ஓலைச் சுவடிகளை வைத்தார். திருவரங்கத்தில் இறைவன் பள்ளி கொண்டான் பான்மையைக் கண்டு மனமுருகிப் பாடினார் கம்பர் என்கிறது சப்தகிரி.[3]

''இருவினையும் இடைவிடா எவ்வினையும்'' என்ற பாடலில் ''அருவினையின் பெரும்பகைஞர் ஆண்டு உளர் ஈண்டு இருந்தும் அடிவணங்கற்பாலார்'' எனப் பாடியுள்ளார் கம்பர்.[4]

மற்றும் அருகமுனிவர் வாழும் அம்மலையை அடுப்பர் வீடு போற்றக்கூடிய நெறிச் செல்வர் என்ற குறிப்பையும் கம்பர் ''கோடு உறுமால் வரையதனைக் குறுகுதிரேல்''[5] என்னும் பாட்டில் வெளிப்படுத்தியுள்ளார்.

இந்திரசித்தன் போர்க்களத்தில் மாய்ந்தபோது, தேவர்கள் எல்லாரும் களிப்பு மேலிட்டவர்களாக, தாம் தாம் உடுத்தியிருந்த ஆடைகளைக் களைந்து மேல் நோக்கி வீசித் துள்ளி ஆர்வாரித்தார்கள் எனும் செய்தியைக் கம்பர், ''ஆடையின்றி நின்ற அத்தேவர்கள் 'கொல்லா விரதம்' மேற்கொண்டொழுகும் அருக சமயத்தவருடைய தெய்வங் களையொத்தார்'' என்று பாடியுள்ளதை,

**வில்லாளரானார்க் கெல்லா மேலவன் விளிதலோடும்**
**செல்லாதவ் விலங்கை வேந்தற் கரசெனக்களித்த**
**தேவர்**
**எல்லாருந்தூசு வீசியேறிட ஆர்த்தபோது**
**கொல்லாத விரதத்தார் தங்கடவுளர் கூட்டமொத்தார்[6]**
—கம்ப.

எனக் கம்பர் பாடியதைக் கேட்டுச் சமண சங்கத்தார் எல்லாரும் உளம் மகிழ்ந்து உவகை பொங்க தங்கள் ஆதர வைச் சிறப்பித்துக் கையொப்பமிட்டுத் தந்து கம்பரைப் போற்றினார்கள். [7]

மாவண்டூர் கருமான் என்பவர், தமிழ்ப்பெரும் பண்டித ராய் விளங்கியவர். அவர் தம்மை அணுகிய கம்பரை ஏற்கெனவே அறிந்தவராதலினால் அன்புடன் வரவேற்று, காவியங்கண்டு, யுத்த காண்டத்தில் மாயைக்கெல்லாம் மாயனான நாராயணன் ஸ்ரீராமன் மீது இராவணன் மாயாஸ்திரம் விடுத்தது 'கொல்லன் தெருவில் ஊசி விற் றதை ஒத்திருந்ததென'க் கம்பர் பாடியுள்ளார்.

**இருப்பு கம்மியர்க்கிடை நுழையூசி யொன்றியற்றி**
**விருப்பிற் கோடிரால் விலைக்கெனும் பதகரின் வீட்டார்**
**கருப்பு கார்மழை வண்ணவக் கடுந்திசைக் களிற்றின்**
**மருப்பு கல்லிய தோளவன் மீளருமாயை.** [8]

—கம்ப.

என்று கம்பர் காவியத்தில், கம்மியரான கருமார் சமூக சிறப்பு கண்டும் போற்றி வணங்கி சான்று வழங்கி வழி அனுப்பினார் கம்பரின் நண்பர் கருமான்.

நெற்களஞ்சியமெனப்படும் தஞ்சையிலே நற்றமிழ் புலமை மிக்க அஞ்சனாட்சியெனும் அன்னையர் குலத் திலகமாக விளங்கும் புலவரிடம், காவியம் அரங்கேற்ற பாயிரம் கோரினார் கம்பர்.

கல்வியிற் சிறந்த கம்பரைக் கண்டு வணங்கி எளியேனும் தங்கட்குப் பாயிரம் தரும் பாக்கியமோ? என வியந்து வினவி, கம்பர் பாடிய பாடலை உற்று,

**மெய்வருபோக மொக்கவுடனுண்டு விளையுங்கொள்ளும்**
**பையரவல் குலார் தம் உள்ளமும் பளிங்கும் போல**
**மையரி நெடுங்கணோக்கம் படுதலுங்கடுகி வந்து**
**கைபுகச் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்.**[9]

—*கம்ப.*

கருத்து

*மகளிர் பந்தாடும்போது சிவந்த தாமரை மலர் போன்ற கரத்தில் அப் பந்தும் செந்நிறத்தைப் பெறுமாம். கைவிட்டுச் சென்ற பந்து அவர்கள் பார்வை படுதலால் கண்ணின் கருநிறத்தை ஒக்குமாம்.*

*இவ்வாறு அடுத்ததுக் காட்டும் பளிங்குபோல் என்றார். வேசையரும் தம்மைக்கூடும் ஆடவரின் நோக்கத்தைப் பிரதி பலித்துக் காட்டுவார் என்பதாகும்.*

*இப் பாடலையும் பொருளுணர்ந்த அவ்வம்மையார் பெரிதும் உவந்து கீழ்க்கண்ட தோத்திரப் பாவினைப் பாடிக் கொடுத்து விடையளித்தார்.*

**அம்பரா வணி சடையனரனயன் முதல்**
**உம்பரால் முனிவரால் யோகராலுயர்**
**இம்பராற் பிணிக்கரும் இராமவேழுஞ்சேர்**
**கம்பராம் புலவரைக் கருத்திருத்துவாம்**

—*தஞ்சை அஞ்சனாட்சி பாயிரம்*

*இவ்வாறு குறித்த வித்வ சிரோன்மணிகளிடமெல்லாம் சான்று பெற்று இறுதியில் கம்பர் தம் மகன் இளங்கவி அம்பிகாபதி சிறந்த புலவராய்த் திகழ்ந்தமையால் அவரிடத்தும் சான்று பெற கூறியிருந்தவாறு அம்பிகாபதியைக் கண்டு விவரம் கூற, வேடிக்கையும், வியப்புமாகத் தந்தையின் இராம காவியத்தை வணங்கி, கண்ணொற்றி, படித்*

துணரும் போது பால, திருவவதாரப் படலம் 225 ஆம் பாடல் கண்டு,

வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கடுகி வான்முகில்
சளசள வென மழைத் தாரை கான்றன
குளனொடு நதிகடல் குறைகள் தீரவே.

கருத்து :

முனிவரில் சிறந்த கலைக்கோட்டு முனிவன் அங்க நாட்டு எல்லை வருமுன் சிவபெருமான் கண்டத்திலே தங்கியுள்ள மழை மேகங்கள் நாடு நகரம் குளிர, குளம், நதி, நிறைய சளசளவென ஓசையுண்டாக மழைத்தாரைகளைப் பொழிந்தன.

வளியமர் முன்கையோர் மயிலனாள் தனக்கு
இளையவள் பெயரினைக் கொழுநனீதலும்
முளையெயிறிலங்கிட முறுவல் வந்தது
களகள உதிர்ந்தது கயற் கணாளியே, —கம்ப.

அண்ட மூலத்துக் கப்பால் ஆழியுங் கொதித்த தேழு
தொண்டிரைக் கடலின் செய்கை செப்பியென்றேவன் சென்னிப்
பண்டைநாளிருந்த கங்கை நங்கையும் பதைத்தாள் பார்ப்பான்
குண்டிகையிருந்த நீருங் குளுகுளு கொதித்த தன்றே.
—கம்ப.

கருத்து :

அண்டத்துக் கப்புறக்கடல் கொதித்தது, கடலில் சங்கமமாவதால் கங்கையும் கொதித்தது. அக்கங்கையைப்

பிரமன் தன் குண்டிகையில் கொண்டதால் குண்டிகை நீரும் குளு குளுவெனக் கொதித்ததாம்.

அண்டத்தளவு மினைய பகர்ந்த தழைத்துப்
பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பரித்தான்
தொண்டைக் கனிவாய் துடிப்ப மயிர் பொடிப்பக்
கொண்டைத் தடங்கண்ணாளுள்ளே கிளு கிளுத்தான்.

கருத்து :

அண்டத்து முகடுவரை எட்டுமாறு கதறிச்சேல் மீன் விழியுடைய சீதை கோவைப்பழம் போன்ற வாய் துடிக்கவும் அழுதாள். மயிர்கூச்செறியவும் கிளுகிளுத்தாள்.

இந்நான்கு பாடல்களில் சள, சள; கள, கள; கொள, கொள; கிளு, கிளு; என்ற இரட்டைக் கிளவிகளைக்கண்டு மகிழ்ந்த அம்பிகாபதி இப்பாடல்கள் இறைவனுக்கு ஆராதனையும், தெரிவிப்பதாகப் பொருள் கொண்டு—

தண்ணீரால் சளசளவென்ன அபிஷேகம் செய்யவும் கள களவென புட்பங்களால் அர்ச்சிக்கவும், கொளகொளவென பழமோ, பாயாசமோ கொண்டு நிவேதனம் செய்யவும், கிளு கிளுவென கற்பூரச்சோதியால் ஆராதிக்கவும், இகபரத்திற்கு உகந்ததெனக் கண்டு தன் தந்தை பாதக் கமலங்களைக் கண்களால் ஒற்றி வணங்கி பாயிரமாகப் பாடிக் கொடுத்தார். [10]

கம்பநாடனுமை செவிசாற்று பூங்
கொம்ப நாடன் கொழு நனி ராமப்பேர்
பம்ப நாடழைக்குங் கதைபாச் செய்த
கம்ப நாடன் கழல் தலையில் கொள்வாம். [11]

இதனை உறுதி செய்வதாக,

அம்பிகாபதி கம்பநாடார் குமாரர். இவர் கம்பர் அருளிய இராமாயணத்திற்குக் ''கம்பநாடனுமை செவி'' எனும் சிறப்புப்பாயிரம் பாடியுள்ளார் என்று அபிதான சித்தாமணி பக்கம் 74 கூறுகிறது.

கவிச்சக்கரவர்த்தியான கம்ப நாட்டாழ்வாரும் ஸ்ரீமந் நாத முனிகள் எதிரே தமது தமிழ் இராமாயணத்தை அரங் கேற்றும் படி செய்த பெருமை இங்குண்டு.[12]

நான்முகன் கோபுர வாசலைத் தாண்டி வந்தால் நம் எதிரில் ஒரு நான்கு கால் மண்டபம் தெரியும். அம்மண்ட பத்தின் எதிரே ஸ்ரீமந் நாதமுனிகள் ஸந்நதி. இவரே கவிச் சக்கரவர்த்தி கம்ப நாட்டாரின் கம்பராமாயணத்தைப் பெருமாள் எதிரே கேட்டருளினார், என்பது வரலாற்றுச் சான்றாகும். ஆகையால் ஸ்ரீமந் நாத முனிகள் ஸந்நதி வாசல் புறத்தேயுள்ள திருவத்திக்காப்பு மண்டபத்திலே தென் கீழ்ப்பக்கத்துக் கம்பத்திலே கம்பநாட்டாரின் சிலை கம்பீரமாக நிற்கிற காட்சியைப் பார்க்கலாம்.[13]

திருவரங்க பெரிய கோயில் ஐந்தாவது சுற்று பிரகாரத் தின் ஆறாவது சுற்றுக்குப் போகும் வழியில் அருகே உள்ள தேசிகர் ஸந்நதிக்கும், எடுத்தகை அழகிய சிங்க பெருமாள் சந்நதிக்கும் இடையே, ஆயிரங்கால் மண்டபத்திற்கும், தாயார் சன்னதிக்கும் மத்தியில் கம்பராமாயண அரங் கேற்ற மண்டபம் உள்ளது. இங்குதான் கம்பர் தம் இராமாயணத்தை அரங்கேற்றம் செய்தார்.[14]

திருவந்திக்காப்பு மண்டபத்தின் கீழ்ப்புற முன் கம்பத் தில் கை கூப்பிய வண்ணம் நிற்கும் கம்பரைப் பார்க்கலாம். இவர் இங்கு முதலில் ஸ்ரீமந்நாதமுனிகள் எதிரில் இராமா யணத்தைப் பாடிக் காட்டியதாகவும், இதற்காக அவரது எதிரில் இந்தச் சின்னம் பொறிக்கப்பட்டதாகவும் கூறுவர்.[15]

இக்கவிச் சக்கரவர்த்தியார் சிறப்பான முறையில் தனது இராமாயணத்தில், ' இரணிய சம்காரத்தையும்'' காட்டி இருந்தார். இதைச் சில பெரியோர்களான அறிஞர் கள் 'இது தவறு, நாங்கள் ஒப்புதல் செய்ய மாட்டோம், ஆட்சேபிப்போம். இராமாயணத்தை ஏற்க மறுப்போம்' என்றெல்லாம் தங்களது கருத்தைக் கூறவே கம்பரின் மனம் வேதனைப் பட்டது. இருந்தாலும் அவர்களிடம் எதையும் மறுத்துக் கூறாமல் இதைப் பெருமாள் முன்னிலையில் பாடிக் காட்டுவோம். பெருமாள் இதை ஆட்சேபனை செய்யாமல் உகப்புடன் ஏற்றுக் கொள்வரானால் எல்லோ ருக்கும் ஆட்சேபனை இராதே? எனக் கேட்டார்.

அவ் அவையிலுள்ள அறிஞர்கள் அதற்கு ஒப்புதல் செய் தனர். உடனே இந்த மண்டபத்தில் வந்து ஸ்ரீமந் நாத முனி களின் எதிரில் பாடிக் காட்டினார். அப்போது இந்த இராமாயணத்தை நாம் அங்கீகரித்தோம் என்ற பாவனை யில் மேட்டுப் புறத்திலே எழுந்தருளியிருக்கும் அழகிய சிங்கப் பெருமாள் முழக்கம் செய்து அங்கீகாரம் செய்தருளியதாகக் கூறுவர். ஆகவே ''எடுத்தகை அழகிய சிங்கரென்றும்'' ''கம்பர் மண்டபம்' என்றும் பெயருண்டு. இவர் இராமாயணத்தை அரங்கேற்றிய காலம் சாலிவாகன சகம் 807 என்பதாகவும் கி. பி. 885 என்பதாகவும் கூறப் பட்டுள்ளது அறியத்தக்கது. [18].

அரங்கேற்றிய கம்பர் மண்டபத்தில் இதே ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது — நேரில் கண்டோம்.

ஸ்ரீரங்க மகாத்மியத்தில் திட்டவட்டமாக கம்பராமா யணம் அரங்கேற்றியகாலம் கி. பி. 885 எனக் குறிப்பிட் டிருக்கிற இக்காலம் பற்றி நாம் ஆராய்ந்த நூற்றுக்கணக் கான நூல்களில் கம்பர் காலம் பற்றி ஆராய்ச்சிக் குறிப்பில் எவரும் குறிப்பிடவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

கம்பர் தமது பெருநூலை அரங்கேற்றிய இடம் திருவரங்கம் என்பர். பண்ணிய இராமகாதை பங்குனியத்த நாளில் கண்ணிய அரங்கர் முன்னே கவியரங்கேற்றினானே என்றது காண்க.

எனத் தாம் வெளியிட்டுள்ள கம்பராமாயணத்தில் உ.வே. சாமிநாதையயர் குறிப்பிட்டுள்ளதுடன், கி. பி. 7-8 நூற்றாண்டுகளில் பல சமயங்களில் ஊடாடியதால் மக்கள் மனத் தெளிவற்றிருந்த காலத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும், இராமனுஜர் போன்ற பெரியாரும் தோன்றி சமய உணர்ச்சிக்கு மறுமலர்ச்சியளித்திருந்தனர். கோயில் பூசைகளும், திருவிழாக்களும் மலிந்திருந்தன. சோழ ராட்சியும் நன்னிலையில் இருந்தது. இக்காலத்தையொட்டி எழுந்தவர் கம்பர் என்கிறார்.[17]

பெயரும் புகழும் வாய்ந்த சர்வ பௌமன் இயற்றி யருளிய பெருங்காப்பியத்து இப்பகுதி ஆறாவது காண்ட மாகும். என இறுதி யுத்த காண்டத்தை உ. வே. சா. குறிப்பிடுகிறார்.

இராமாயணம் திருமாலின் அவதாரம் பற்றிய நூலாதலின் அதனைத் திருவரங்கத்தில் உள்ள திருமாலடியார் முன்னர் அரங்கேற்றி அவர்கள் இசைவு பெற வேண்டும் என்றெண்ணிக் கம்பர் திருவரங்கத்தை அடைந்தார். அங்கிருந்த வைணவப் பெரியார்கள் நம்மாழ்வாரைப் பாடவேண்டுமென்றார்கள். கம்பர் சடகோபரந்தாதி பாடியருளினார். அவையோர் கேட்ட ஐயங்களுக்கெல்லாம் தக்க விடையளித்தார். இரணிய வரலாறு கம்பர் கூறியிருப்பது அமைதியன்று என்று சிலர் கூறியதாகக் குறிப்புள்ளது.

இரணியவதைப் படலத்தில் நரசிங்கம் தூணில் தோன்றியதாகக் கூறும் செய்யுளைக் கம்பர் வாசித்தார்.

வாசித்தபோது மேட்டழகியசிங்கரின் உருவச்சிலை யாவரும் நடுங்கும்படி சிரித்தது. அதைக் கண்ட அனைவரும் கம்ப ராமாயணத்தின் பெருமையை வியந்து போற்றினர்.[18]

**"நகை திறந்திலங்கப் பொங்கி நன்று நன்றென்ன நக்கு—"**

—இரணிய படலம் 256

## கி.பி. 885

திருவரங்க வைணவ ஆன்றோரான ஸ்ரீமந் நாதமுனி களிடம் வந்து கம்பர் தாம் பெற்ற அரங்கேற்றத்திற்கான சான்றுகளையும், பாயிரங்களையும் சமர்பிக்க—

இவற்றைப் பெற்று இனி அரங்கேற்றத்திற்கு ஆவனச் செய்யலாமென முடிவு செய்து ஆலயத்தாரிடமும் தக்க இடமாக, மேற்கண்ட தாயார் சன்னதி எதிரிலே இடம் தீர்மானிக்கப்பட்டு, கம்பர் இராமாயண அரங்கேற்றம் ஸ்ரீமந்நாதமுனிகள் முன்னிலையில் நடைபெற உள்ள செய்திகள் அறிந்து மன்னர்கள், புரவலர்கள், புலவர்கள் பொதுமக்கள் யாவரும் திரளாகக் கூடி இருந்தனர்.

இதற்காக நல்லநாள் தேர்வு செய்யப்பட்டது. சாலி வாகன சகாப்தம் 807ஆம் ஆண்டு (கி.பி 885) பங்குனிமாதம் ஸ்ரீரங்கநாயகி தாயார் பிறந்த நட்சத்திரமான உத்திர நன்னாளில் ஸ்ரீ அரங்கநாயகி தாயாரும் ஸ்ரீ அரங்கநாத பெருமாளும் சேர்ந்து காட்சி தரும் அரிய திரு நாளில் பிரார்த்தித்துச் சேவித்துக் கம்ப இராமாயணத்தைக் கம்பர் துவக்கியபோது.

**"நஞ்சடகோபனைப் பாடினையோ? வென்று நம்பெருமாள்**
**விஞ்சிய ஆதரத்தாற் கேட்பக்கம்பன் விரைந்துரைத்த**
**செஞ்சொலந்தாதி கலித்துறை நூறுந் தெரியும் வண்ணம்**
**நெஞ்சடியேற்கருள் வேதத்தமிழ் செய்த நின் மலனே.**

எனச் சடகோபரந்தாதி நூறு பாடி முடித்தார்.

அடுத்தநாள் அஸ்த நட்சத்திரத்திலே அரங்கேற்றத்தைத் தொடர்ந்து நடத்தி வந்தார். ஆகவே, அரங்கேற்றம் பங்குனி உத்திரத்தில் என்றும், பங்குனி (அஸ்தம்) நாளில் என்றும் பாயிரங்களில் வழங்கப்படுகிறமைக்கு இதுவே காரணமாகலாம்.

துதிப்பாடல் குருவணக்கம் தொடங்கி, ஆஞ்சநேயரைத் துதித்து,

**அஞ்சிலே யொன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத்தாவி**
**அஞ்சிலே யொன்று ஆறாக ஆரியர்க்காக ஏகி**
**அஞ்சிலே யொன்று பெற்ற அணங்கினைக்**
**கண்டயலாரூரில்**
**அஞ்சிலே யொன்று வைத்தானவன் எம்மை அளித்துக்**
**காப்பான்.**

கம்ப இராமாயண முதற்பாடலான 'உலகம் யாவையும், தாமுளவாக்கலும்' எனத் தொடங்கி பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஈறாக இராம நாமத்தையே மையக்கருத்தாக்கி அறம், பொருள், இன்பம், வீடு பயக்க, அரிய காவியமான, பெரிய காவியத்தை என்றுமுள தென்றமிழால், அருவியெனப் பொழிந்து அழியாக் காவிய அரங்கேற்றம் இனிதே நடந்தேறியது. அவற்றில் கம்பர் தீர்க்க தரிசியாக எண்ணற்ற அறங்களை நமக்கு போதித்துள்ளார்.

அவற்றில் அரசியல் படலத்தில்,

**தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம்பயப்பில்**
**சேயொக்கும் முன்னின்றொரு செல்கதி உய்க்கும் நீரால்**
**நோயொக்கும் என்னின் மருந்தொக்கும் நுணங்கு கேள்வி**
**ஆயப்புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னான்.**

## கருத்து

தாயினது அன்பினும் மேலானது ஒன்றுமில்லை, அன்பில் தாய்க்கும், தவம் வேண்டிய நம்மையெல்லாம் தருவது, தசரத மன்னனே எல்லார்க்கும் நன்மை செய்வான். புதல்வர் தன் பெற்றோர் துன்பம் எனும் நரகம் எய்தாதவாறு தன் நற்செயலால் காத்திடவும் அரசன் மக்கள் நன்னெறியில் வாழவும், நற்கேள்வியும், ஞானமும் நன்மையே பயக்கும். அரசனும் அவ்வாறே நன்மை செய்வோனாக இருத்தல் வேண்டும்.

யுத்த காண்டத்தில் இரணியவதைப் படலத்தைக் கம்பர் பாடலானார். இது. வைணவ ஆசாரிகளால், வான்மீகியில் அறவே இல்லாத இரணிய வதைப்படலம் ஆட்சேபிக்கப்பட்டது.

இதற்குக் கம்பர், அவ்வாறு இரணியப்படலம் வாய்க்கப் பெற்றது, இறைவன் திருவருளேயன்றி, அடியேனுடைய எண்ணமாக அல்ல என்று பணிந்துரைத்தார் என்றும், இதனை முற்றும் கேட்டு ஆன்றோர்கள் ஆவனச் செய்யலாம் எனக் கம்பர் உரைத்துத் தொடர்ந்து பாடலானார்.

**நகை திறந்திலங்கப் பொங்கி நன்றென்ன நக்கு**
**விசை திறந்திருமு வீழ்ந்த தென்னவோர் தூணின்வென்றி**
**இசை திறந்தமர்ந்த கையாலெற்றின னெற்றலோடும்**
**திசை திறந்தண்டங் கீறீச் சிரித்ததோர் செங்கட்சீயம் 1.**

## கருத்து

திசை திறந்து, கருத்து வெளிப்படுமாறு, கிளர்ச்சி கொண்டு நல்லது நல்லது எனப் பகர்ந்து, சிரித்து வேகம் வெளிப்பட்டு இடி வீழ்ந்தாற் போன்று ஒரு தூணிலே வெற்றியும், கீர்த்தியும் வெளிப்படச் செய்த, தனது கையினால் அறைந்தான். அறைந்த அளவில் திக்குகளனைத்தும் பிளந்து கொண்டு கண்கள் சிவக்கப் பெற்ற ஒரு சிங்கமானது அண்டம் பிளக்குமாறு சிரித்தது.

கம்ப இராமாயணத்தைத் திருவரங்கம் மேட்டழகர் சந்நதியில் அரங்கேற்றியபோது, இச்செய்யுளைக் கேட்டு மேட்டழகிய சிங்கர் தலையசைத்தார் என்பது ஐதீகம். [20]

இரணியவதைப் படலம் பாடியமைக்குக் காரணம் கூறப்பட்டுள்ளது. கவிஞர் பெருமான் ஸ்ரீமத் பாகவதத்தையும் தமிழில் ஆக்க எண்ணினார். தமது வயது காரணமாக அந்நூல் முடிய, எழுத இயலுமோவெனக் கருதி அதன் காரணமான பிரகலாதன் வரலாற்றையேனும், அனுமன், விபீடணன் ஆகிய சிரஞ்சீவிகளைப் பாடியது போல் முதலாழ்வாரும், சிரஞ்சீவியுமான பிரகலாதனைப் பாடினார் என்று உ.வே.சா. — யுத்த காண்டம் இடையுரையில் கூறியுள்ளார்.

திருமுடிசூட்டுப் படலத்தில் ஸ்ரீராமனுக்குப் பட்டாபிஷேகம் நடைபெறும்போது தொன்றுதொட்டுச் சூரிய குலத்தோரான சோழ மன்னருக்கு முடிசூட்டுங்கால் முடிஎடுத்துக் கொடுத்து உதவும் பெருமை உழுவித்துண்ணும் வேளாளர்க்குண்டு. அந்த வழக்கினை ஒட்டி சடையப்பனுடைய முன்னோர்களான வேளாண் மக்கள் சூரிய வம்சமான இராமபிரானுக்கு முடிசூட்டு விழாவில் முடியெடுத்து உதவினார்கள் என்று கூறியுள்ளார். இங்குச் சடையன், சிவபெரு

மான் என்று கொண்டு திருமாலுக்குரிய முடிசூட்டு விழா வில் முதனின்று உதவுபவன் சிவபெருமான்.

ஆகலின் அவர் வழிவந்த சைவ வேளாளர் கொடுக்க வாங்கி வசிட்டரே முடிசூட்டும் காலத்தே, அவ்விழா, நடைபெறாது போனது (அறிந்ததே) குறித்து வருந்தி நின்று, வசிட்டனே (முனிவரன்) முடிசூட்டினான் என்று இப்பாடலிலும் நன்றி மறவா கம்பர் சடையப்ப வள்ளலைப் புகழ்ந்துள்ளமைக் குறித்து ஆராய்ச்சி அறிஞர்கள் பலரும் கம்பரின் மாண்பைச் சிறப்பித்து வியந்து போற்றி உள்ளனர்: தமிழ்த் தாத்தாவும் (உ.வே.சா) அவ்வாறே சிறப்பித்துள்ளார். அப்பாடல்

**அரியணை யனுமன் தாங்க அங்கதன் உடைவாள் பற்றப்**
**பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரிவீச**
**விரைசெறி கமலத்தாள் சேர் வெண்ணெய்மன்**
**சடையன்தங்கள்**
**மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்**
**மௌலி.** [21]

கம்பர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலைச் செய்ந் நன்றி மறவாமல் தமது நூலில் பாராட்டிப் புகழ்ந்துள்ளார். நூறு பாட்டிற் கொருபாட்டாக "நர துதி" உள்ளது. அதனை ஆயிரம் பாட்டுக்கு ஒன்றாக அமைக்கலாமே என்று ஸ்ரீமந் நாதமுனிகள் கூறப் புலவர் பெருமான் "ஆயிரத்தில் ஒருவராக அவரைப் பாராட்டுவதில் தனக்குத் தடையில்லை" என்று, அவ்வாறே கம்பர் செய்தார்.[22]

சடையப்பரை நூறில் ஒருவராக மதிப்பதை விட ஆயிரத்தில் ஒருவராக மதிப்பது சாலவும் பொருத்தமானது என்று கம்பர் கூறினார் என்று, இடைக்காலப் புலவர் பக்கம் 96 கூறுகிறது.

தொடக்கம் முதல் பிரதி தினமும் மக்கள் தொகை திரளாகக் கூடியிருந்து இராமாயண அரங்கேற்றம் செவ்வனே முடிவுற்று, அமோக புகழ் பெற்றது. இராமாயண இறுதி பாடல்,

வான் வளம் சுரக்க நீதி மனு நெறி முறையே என்னும்
தான் வளர்ந்திடுக நல்லோர் தங்கினை தழைத்து வாழ்க
தேன் வழங்க அமிர்தமாலை தசரத ராமன் செய்கை
யான் அளந் தறைந்த பாடல் இடைவிடா தொளிர்க்க
எங்கும்.
—கம்ப.

வாழிய சீரிராமன் வாழிய சீதை கோமான்
வாழிய கௌசலோசை மணி வயிற்றுதித்த வள்ளல்
வாழிய வாலிமார்பும் மராமரம் ஏழும் சாய
வாழிய கணை ஒன்றை ஏவும் தசரதன் மதலை வாழி.

இராம காவியம் சிறப்பாக அரங்கேறியது. பல புலவர்கள் கம்பரைப் பாராட்டி பாயிரம் பாடினார்கள். ஸ்ரீமந் நாத முனிகள், கம்பரின் பாவன்மையையும், நாவன்மையையும், தமிழாற்றலையும், ஆன்மீக மேன்மையையும் அறிந்து "கம்ப நாடாழ்வார்" என்றும், "கவிச் சக்கரவர்த்தி" என்றும், "அபிநவ கவிநாதன்" என்றும் விருதுகள் வழங்கிப் பாராட்டிப் போற்றினார். இதனை ஏனைய நூல்களும் சிறப்பித்துக் குறிப்பிட்டுள்ளன.

"அரங்கேற்றத்தின் முடிவில் கம்பருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்றும், கம்ப நாட்டாழ்வார் என்றும் பட்டமளித்துச் சிறப்பித்தனர்.[28]

கம்பர் பின்பு திரளான மக்கள் பின் தொடர ஸ்ரீஅரங்க நாத பெருமான் சந்நதியை வலம் வந்தார். அர்ச்சர்கள்

பெருமாளுக்கு அர்ச்சனை, ஆராதனைகளைச் செய்து கம்பருக்குப் பரிவட்டம் கட்டி, பட்டாடை சாத்தி, பொன்னாடைப் போர்த்தி, கௌரவித்துச் சிறப்பித்தனர். அடுத்துப் பல்வேறு மன்னர்கள் சார்பாகப் பொன் முடிப்பும் சால்வைகளும் பாராட்டுகளும் வழங்கப்பட்டன. கவிச் சக்கரவர்த்தி கம்பர் கவி மன்னர்கட்கு அரசன், என் பதற்கேற்ப. யானை தந்தத்தால், தந்த பல்லக்கும், சிவிகை, கவிகை, தவசம், கவசம், பரி, கரி, வெண்குடை, கவரி, காளம், அரியணை, தங்கச்சிங்காதனம் எனக் கவிச் சக்கரவர்த்திகளுக்குரிய அனைத்துக் கௌரவமும் அளிக்கப் பெற்று மேளதாள,திருசங்கு, நகரா, ஒலிக்க, ஊர்வலமாகத் தேரழுந்தூர் செல்ல வழியனுப்பு விழா நடைபெற்றது. திருவரங்கமே திருவிழாக்கோலம் பூண்டது எனலாம்.

இங்கனமே கம்பருக்குச் சோழனும் அவன் தேவியும் பல்லக்கு வழங்கிய செய்தி தமிழ் நாவலர் சரிதையில் கூறி உள்ளது எனவும் வித்வான் திருமதி என். தாணு அம்மாள் எழுதியுள்ளார்கள். [24]

## அடிக்குறிப்பு

1. வினோத ரசமஞ்சரியில் கம்பர் வரலாறு.
2. சென்னை ஆவணக் காப்பகம் எண் 1862. பக். 481.
3. சப்தகிரி, ஜூலை 1991.
4. 1. கிட்கிந்தா, நாடவிட்ட படலம் 27, 2. திருநறுங் கொண்டை திருத்தல வரலாறு.
5. கிட்கிந்தா, நாடவிட்ட படலம் 24.
6. **யுத்த, இந்திரசித் வதை 3106.**

7. திருநறுங் கொண்டை திருத்தல வரலாறு.
8. யுத்த, இராவண வதை 3761.
9. மிதிலைக் காட்சிப் படலம் 517.
10. ச. தா. மூர்த்தி, கவிச்சக்கரவர்த்தி கம்பர்.
11. அம்பிகாபதி பாயிரம், கம்பராமாயணம்.
12. ஸ்ரீரங்க மகாத்மியம் பக். அ, 45.
13. ,, ,, பக். அ. 58
14. 5ஆவது பிரகாரம் வரைப்படம் ஸ்ரீரங்க மகாத்மியம் பக். அ. 38.
15. கம்ப நாடர் சிலை, ஸ்ரீரங்க மகாத்மியம் பக். அ. 38
16. ஸ்ரீரங்க மகாத்மியம் பக். அ. 54
17. உ. வே. சாமிநாதையர் கம்பராமாயண முன்னுரை.
18. 1. உ. வே. சாமிநாதையர் கம்பராமாயணம் பக். 274. 2. கவிமன்னர் மூவர்.
19. யுத்த இரணிய வதை பக். 256.
20. ,, ,, ,, பக், 274.
21. திருமுடி சூட்டும் படலம் 4281.
22. உ. வே. சா. யுத்த காண்டம் பக். 4
23. இடைக்காலப் புலவர் பக்கம் 96.
24. பிற்கால சோழரும், இலக்கிய வளர்ச்சியும் பக். 127

# 16. அரங்கேற்றத்திற்குப் பின்...

இவ்வாறே, பாண்டியனும் இவன் தேவியும் பல்லக்கு சுமந்து வழியனுப்பினர் என்றும் தங்கள் நாட்டுக்கு வருகை தந்து வரவேற்பை ஏற்க வேண்டினர் என்றும் தெரிகிறது. அவ்வாறே சேர மன்னனும் சிவிகைச் சுமந்து தம் நாட்டிற்கும் வருகை தர வேண்டினான் போலும். பின் நாளில் அவ்வாறே கம்பர் விஜயம் செய்து சிறப்பித்ததாக நூல்கள் தெரிவிக்கின்றன.

அரங்கேற்றத்தை இனிது முடித்துப் பின் கவிச்சக்கரவர்த்தி திருவெண்ணெய் நல்லூரையடைந்து, சடையப்பருக்கு இராமாயணத்தின் இன்சுவை யுணர்த்தி, சோழன் அவையிலும் இராமாயணச் சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன் பெருமையறிந்த சோழன் கம்பருக்குத் தக்க பரிசில்களை வழங்கி சிறப்பித்தான் என வித்துவான். வே. இராமலிங்க நாயகர் எழுதியுள்ளார்.[1]

கி. பி. 885 இல் இராமாயணம் அரங்கேற்றம் நடந்த போது ஆதித்த சோழன் கலந்து கொள்ளாததற்குக் காரணம் பல்லவ மன்னன் அபராஜிதன் தன் தந்தை இறந்த பிறகு நிருபதுங்கன் மேலாதிக்கத்தில் ஆதித்தனே, முழு அதிகாரம் பெற்று அரசாண்டு வந்தான். இவன் அரசு உரிமைப் பறிபோவதாகக் கருதி வந்தான். ஆகவே போர் தொடுக்கத் துணைத் தேடிக் கொண்டிருந்தான். நிருபதுங்

கனுக்கு, வரகுண பாண்டியன் ஆதரவு உண்டு. அபராஜிதன் கங்கை மன்னன் பிரதிவீபதியின் துணையைப் பெற்றான். ஆதித்தன் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தக் கருதி அபராஜிதனோடு இணைந்து இருதரப்பு படைகளும் கும்பகோணத்திற்கு அருகிலுள்ள, திருப்புறம் மயம் என்னும் இடத்தில் கி. பி. 885இல் மோதின. (இது கம்பராமாயண அரங்கேற்ற ஆண்டு) பிரதிவிபதி உயிரிழந்தான். அதனால் அபராஜிதனுக்கு வெற்றி கிடைத்தது. அதோடு நிருபதுங்கன் ஆட்சி முடிவுற்றது.

ஆதித்தன் அபராஜிதன் மேலாதிக்கத்தை விரும்பவில்லை. எனவே அபராஜிதன் பாண்டிய நாட்டின் சில பகுதிகளை ஆதித்தனுக்கு அளித்தான்.[2]

இக்காலக் கட்டத்தில் ஆதித்தன் பல்லவ நாடான தொண்டை மண்டலத்தைத் துறந்து உறையூருக்கே வந்து சோழ நாட்டையும், பாண்டிய நாட்டின் சில பகுதிகளையும் ஆட்சி செய்து வரலானான் என்றாலும் அவன் காஞ்சியைக் கைக்கொள்ளத் திட்டமிட்டு வந்தான்.

கி. பி. 886இல் கவிச்சக்ரவர்த்தி கம்பரின் அன்னையார் திலகவதியார் உடல்நலமின்றி நோய்வாய்ப்பட்டு, பரமபதம் அடைந்தாரெனலாம்.

அடுத்து, சடையப்பரைப்பற்றிய செய்தி ஏதுமில்லை, இராமாயண அரங்கேற்றத்தின்போதும்சடையப்பர்க்கென்று அக்காவிய அரங்கேற்றத்தைக் காணும் வாய்ப்பின்றித் தம் மகனை அனுப்பினார் என்று அறிந்தோம். இதனை அடுத்து அம்பிகாபதி காதல் விவகாரம், முற்றியபோதும் சடையப்பர் உயிருடன் வாழ்ந்திருந்தால், அப்பிரச்சனைகள் சுமுகமாகத் தீர முயன்றிருப்பார். எனவே அவரும் இக்காலத்தே பரகதியடைந்தார் எனக் கொள்ள வேண்டியுள்ளது.

சடையப்பரின் பிரிவைத் தாங்க இயலாத கம்பர் தாம் இறக்கும்வரை மறக்க இயலாமல் அவருடைய அன்பைப் பற்றிப் பாடியுள்ளார்.

**ஆன்பாலுந் தேனும் அரம்பை முதல் முக்கனியும்**
**தேம்பாயவுண்டு தெவிட்டு மனத்—தீம்பால்**
**மறக்குமோ? வெண்ணெய் வருசடையா கம்பன்**
**இறக்கும் போ தேனு மினி.**[3]

கி. பி. 887இல் கவிச்சக்கரவர்த்தி கம்பர் பாண்டிய மன்னன் அழைப்பை ஏற்றுப் பாண்டிய நாடு சென்றார். அங்கு அரசன் அவருக்குச் சிறப்பான வரவேற்பு அளித்து அவரைக் கௌரவித்துப் பாராட்டினான் என்பர்.

கி பி. 890இல் பல்லவ அரச மரபில் இறுதியாக ஆண்ட அபராஜிதனிடமிருந்த தொண்டைமண்டலத்தை முதலாம் ஆதித்தன் வென்றான். தக்கோலம் சோழராட்சியின் கீழ் வந்தது.[4]

பாண்டிய நாட்டிற்குக் கம்பர் வந்தார். இடையில் பாண்டிய நாட்டில் சுற்றுப்பயணம் செய்தார், அப்போது அவரை மன்னனும் அவன் மனைவியும் சிவிகையில் வைத்துச் சுமந்தார்கள்.[5]

சிவிகையைச் சமந்து தன்னைக் கௌரவித்த பாண்டியன் தம்பதிகளைக் கம்பர் மகிழ்ந்து பாடினார்.

**உமைய வளுநீயு மொரு கொப்பே யொப்பே**
**உமைய வளுக்கு ண்டங்கோ ரூணம்—உமையவளுன்**
**பாகந்தோய்ந் தாண்டான் பலிக்குழன்றான்**
**பாண்டியனின்**
**அகந்தோய்ந் தாண்டானரசு**[6] —கம்பர்.

கம்பரை அழைத்து வரும்படி சோழனால் அனுப்பப் பட்ட இணையார மார்பன் (சடையப்பரின் தம்பி)

பாண்டியன் சபைக்கு வந்தான். இவரை யாரென வினவ, அதனைத் தம் கவியால் பதிலிறுத்தார் கம்பர்.[7]

**என்னுடைய தம்பி சரராமனுக்கிளையான்**
**கன்னன் மதயானைக் கண்டன் மகன்—துன்னு**
**பனையார் நீர் வேலிப் பழனஞ்சூழ் சோணாட்**
**டினையார மார்ப னிவன்.[8]**

—கம்பர்

கம்பர் சோழ நாடு வந்தார். அங்குக் கம்பருக்கு இரண்டு விஷயம் காத்திருந்தது. அதில் ஒன்று அம்பிகாபதியின் காதல் விவகாரம். கூடிப்பழகிய அம்பிகாபதியும் அமராவதியும் காதலிக்கத் தொடங்கினார்கள். மன்னன் மகளைக் காதலிப்பது உயிருக்கு ஆபத்து என்று கம்பர் பல முறை எச்சரித்தும் அம்பிகாபதி கேட்கவில்லை. இந்தக் காதல் விவகாரம் முதலில் இரகசியமாக இருந்து அப்புறம் ஊரறிந்த செய்தியாகி விட்டது. காதலர் இருவரும் கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டனர்.[9]

## அடிக்குறிப்பு

1. இடைக்காலப் புலவர், ப 97.
2. தென்னிந்திய வரலாறு. பக். 274.
3. தமிழ் நாவலர் சரிதை. பக். 87
4. அமுதசுரபி தீபாவளி மலர். பக். 330. 1991.
5. சக்தி கம்பராமாயண முன்னுரை. பக். 22, 23.
6. மீனாட்சி தனிப்பாடல் திரட்டு. பக். 79.
7. தமிழ் நாவலர் சரிதை. பக். 77.
8. ,, ,, ,, பக். 90.
9. சக்தி ராமாயண முன்னுரை, பக். 30.

# 17. அம்பிகாபதி அமராவதி காதல்!

*அம்பிகாபதி தன் காதலி அமராவதியின் அழகை வருணித்துப் பாடியது.*

மைவடிவ குழலியர் தம் வதனத்தை!
நிகர் ஒவ்வா மதியே மானே!
செவ்வடிவைச் சிற்றிடையைத் திருநகையை!
வேய்த்தோளைத் தெய்வமாக
இவ்வடிவைப் படைத்த வடிவு எவ்வடிவோ?
யானறியேன் உண்மையாக
கைப்படியத் திருமகளைப் படைத்து இவளைப்
படைத்தனன் நல் கமலத் தோனே.[1]

*—அம்பிகாபதி*

**கருத்து :**

*கரிய மேகம் ஒத்த கூந்தலும் ஒளி மிகுந்த மதி முகமும் உவமையற்ற மான்விழியும் உடுக்கை ஒத்த வடி வழகும் முத்துப் பல்லழகும், ஆக இத்தனை அழகு ஒருங்கே படைத்த பிரமன், முதலில் கலைமகளைப் படைத்துக் கைப்பழகித் தேர்ந்து பிறகு இவளைப் படைத்தான், என்று இளங்கவி அம்பிகாபதி அமராவதியின் அழகை உவமை கூறி உயர்த்துகிறான்.*

தன் காதலியைச் சந்திக்க இயலாத நிலையில் தன் உள்ளத்து வெம்மையைக் கவியால் வெளிப்படுத்திப் பாடியது.

**உருகி உடல் கருகி உள்ளீரல் பற்றி**
**எரிவ தவியா தென் செய்கேன்—வரியரவ**
**நஞ்சிலே தோய்ந்த நளின விழிப்பெண் பெருமாள்**
**நெஞ்சிலே யிட்ட நெருப்பு.[2]**

—அம்பிகாபதி

**கருத்து :**

வரிகளையுடைய பாம்பினது விடத்திலே நனைந்த நளின விழி பெருமாட்டி, என் உள்ளத்திலே தோற்றுவித்த காதல் தீயினாலே உள்ளம் உருகி உடல் கருகி உள் ஈரல் பற்றி எரிவது அவியாது தவிக்கிறேன்'' என்று தன் தாளாமையால் தவிக்கிறான்.

ஆதித்த சோழன் அம்பிகாபதியின் ஒவ்வாக் காதலை உணர்த்திட விருந்திற்கு ஏற்பாடு செய்தான். கம்பரையும் அம்பிகாபதியையும் அழைத்திருந்தான்.

தன் மகளையே பரிமாறச் செய்தான். அதன்படி அமராவதி வட்டில் கைக்கொண்டு பரிமாற வந்தபோது, 'செந்தாமரை மலர்போன்ற அவளது மென்மையான பாதங்கள் அடியெடுத்து வைக்கும்போது கன்றிவிடுமோ? நொந்து கொப்பளிக்குமோ?' எனக் கருதியவாறு பாடினான் அம்பிகாபதி.

**இட்டடி நோவ எடுத்தஅடி கொப்பளிக்க**
**வட்டில் சுமந்து மருங்கசையக் கொட்டிக்**
**கிழங்கோ கிழங் கென்று கூறுவாள்நாவில்**
**வழங்கோசை வையம் பெறும்.[3]**

அம்பிகாபதி முதலிரண்டடி பாடியதும் கம்பர் அடுத்து என்ன பாடி விடுவானோவென அஞ்சி அடுத்த இரண்டடியைக் கம்பர் பாடி முடித்தார்.

அம்பிகாபதியைப் பார்த்து ஆதித்தன் சிற்றின்பம் கலவாதுப் பேரின்பப் பாடலாக ஆன்மீகமாய் 100 கவிபாட உன்னால் இயலுமானால் என் மகளை மணமுடிக்கிறேன். தவறுமானால் உன் மரணம் முடிப்பேன். இசைகிறாயா? என்று வினவ, புளகாங்கிதம் அடைந்த அம்பிகாபதி இறைவன் இட்ட கட்டளையாக ஏற்று இனிய தமிழால் இப்பொழுதே பாடுகிறேன் என்று பாடலானான்.

அமராவதி மலர்கொண்டு எண்ணினாள். காப்புக்கவியையும் கணக்கிட்டமையால் 99 பாடலை 100 பாடலாக அமராவதிக் கருதி தன் மகிழ்ச்சியைப் பௌர்ணமி நிலவாக ஒளி பொருந்திய முகத்தால் மகிழ்ச்சி மலர வெற்றியென்த் தலையை வெளிக்காட்டி முறுவலித்தாள்.

வெற்றி பெற்றேன் என்ற வேகத்தோடு சிற்றின்பச் சீரெடுத்து கணீர் என்று குரல் கொடுத்துப் பாடினான்.

**சற்றே பெருத்த தனமே குலுங்க தரளவடத்**
**துற்றே யசையக் குழையூசலாடத் துவர்கொள்**
**செவ்வாய்**
**நற்றே னொழுக நடன சிங்கார நடையழகின்**
**பொற்றே ரிருக்கத் தலையலங்காரம் புறப்பட்டதே.**

—அம்பிகாபதி

வெகுண்டு எழுந்த மன்னன் கொலையாளிக்கு ஆணையிட்டான். கொற்றவன் ஆணையை மீறிய இக் கொடியவனைக் கொன்று தீருங்கள் என்றான்.

*திடுக்கிட்ட அம்பிகாபதி, "அப்பா" என அலறியவாறே கம்பர் காலில் வீழ்ந்தான், கை கொடுத்துத் தூக்கிய கம்பர் பாடுகிறார்.*

**இந்நாளிது விளையு மென்றெழுத்துத் தானிருக்க**
**என்னாலே யாவ தொன்று மில்லையே—உன்னால்**
**வந்தது தானப்பா? மகனே தவிர்ப்பவரார்**
**முந்தையினீ செய்த வினையே,[7]**

*கொலைக்களத்தில் அம்பிகாபதி, 'தலைத் துண்டிக்கப் பட்டான்' என்ற செய்தி கேட்டு வேதனை கொண்டு கம்பர் பாடுகிறார்.*

**மட்டுப்படா கொங்கை மானார் கலவி மயக்கத்திலே**
**கட்டுப்பட்டா யென்ன காதல் பெற்றாய் மதன் கை அம்பினால்**
**பட்டுப்பட்டாயினுந் தேறுவையே யென்று பார்த்திருந்தேன்**
**வெட்டுப்பட்டாய் மகனே தலை நாளின் விதிப்படியே.[8]**

*—கம்பர்*

*ஆறாத் துயரால் அழுது இராமன் காட்டுக்குச் சென்று வருமளவு பொறாது இறந்த தசரதனையன்றி யாரே எனக்குவமை? என எண்ணிக் கம்பர் பாடியது.*

**பரப்போத ஞாலமொரு தம்பியாளப் பனிமதியம்**
**சுரப்போ னொரு தம்பி பின்வரத் தானுந் துணைவியுடன்**
**வரப்போன மைந்தர்க்குத் தாதை பொறாதுயிர் மாய்ந்தனனெஞ்**
**சுரப்போ எனக்கிங் கினியார் உவமையுரைப்பதற்கே?[9]**

*—கம்பர்*

என வெம்பித் தேற்றுவாரற்றுப் புலம்புவது கண்டு கதி கலங்கிப் போய் பெற்ற வயிறு, பற்றி எரிய அம்பிகாபதியின் தாய் நிகர்த்தவல்லி மூர்ச்சையடைந்து வீழ்ந்தே போனாள்.

தாயும் தந்தையும் படும் ஆற்றொணாத்துயர் கண்டு கோவெனக் கதறிய காவேரி தமையனை இழந்த துயர் தாங்காத தளிர்க்கொடி அம்மாவென ஒடி வந்து தண்ணீர் தெளித்தும் மூர்ச்சையானதாய் மூச்சையே அடக்கி விட்டாளென உணர்ந்து கம்பரும் அம்பிகாபதி மனைவியும் காவேரியும் இடி வீழுந்தாற் போல் இட்ட ஒப்பாரி ஊரைக் கூட்டிவிட்டது.

தம் அருமை மனைவி பேசுவதெல்லாம், அமுதான சொல்லையே; சொல்லவல்ல சொல்லியை என் நிகர்த்த வல்லியைக் குளிரொற்றியூர் வல்லியைக் கைப்பிடித்த நாள் முதல் சொற்கரும்பாம் இனிக்க இனிக்க என் தாகம் தவிர்ப்பாளை, இத்தனை அன்பு பொழிந்து ஆட் கொண்டது, இப்படி இடையே "வல்லியைப் புல்லிய கைக்கோ" இவளை அணைத்து மகிழ்ந்த கைகளைத் தவிக்கவிட்டு போகவோ? எனக்கு நேரம் வந்து, வாய்த்தது? என வருந்திப் பாடுகிறார்.

**சொல்லியைச் சொல்லினமுதான சொல்லியைச் சொற் கரும் பு**
**வில்லியை மோகவிடாய் தவிர்ப்பாளை விழியம்பினார்**
**கொல்லியைக் கொல்லியம் பாவை யொப்பாறைக் குளிரொற்றியூர்**
**வல்லியைப் புல்லியக் கைக்கோ இவள் வந்து வாய்த்ததுவே**[10]

அம்பிகாபதியின் வாழ்க்கை வரலாறு ஒரு காதல் காப்பியமாகும். உலக இலக்கிய ஏடுகளில் பொன்றாப் புகழ் பெற்ற லைலா—மஜ்னு, ரோமியோ—ஜூலியட், அனார்கலி—சலீம், ஆகியோர்க் கில்லாப்பெரும் சிறப்பு

நம் அம்பிகாபதிக்கும் அமராவதிக்கும் உண்டு. அவர்க ளெல்லாம் உலகம்போற்றும் காதலராகலாம். ஆனால் தமிழாளும் பாவலன் நாடாளும் மன்னன் மகளைக் கவித்திறனுக்குத் திறையாகப் பெற்றான். காதலுக்காக வாழ்ந்தனர். காதலன் அம்பிகாபதி கொலைக்களத்தில் ஆவி துறந்தான் என்ற செய்தி வருமுன்பே தனதுயிரைத் தீக்கு இரையாக்கி அவனை மேலுலகத்தில் இருந்து வரவேற்ற அமராவதியின் அமரத்துவக் காதலுக்கு அழி வேது? ஈடேது? [11]

இப்படி அம்பிகாபதியைப் பற்றிய செய்திகள் உண்டு. வேறு பலத் தனிப் பாடல்களும் உண்டு. மேலாகத் தந்தை கம்பர் கம்பராமாயணம் இயற்றியது போல் அம்பிகாபதி யும் அம்பிகாபதிக் கோவை அருளியுள்ளார். அக்கோவை யின் அவையடக்கப் பாடல் ஒன்று.

**அருளம்பிகாபதி பொன்னடித் தாமரை சூட்டியக,**
**பொருளம்பி காபதிகம் புனைந்தேன்; இப்புனைந்த**
**செஞ்சொல்,**
**தெருளம் புலவர், முன் செப்பியபோது;**
**உளதப் புரையார்**
**மருளும் குழவி மழலைக்கென்னோ?**
**பொருண் மற்றிங்கன்றே! [12]**

தேரழுந்தூரில் அரண்மனை போன்ற வீட்டில் கம்பர் தம் அருமை மகள் செல்வி காவேரியுடன் வசித்து வருங் கால், காவேரிக்குத்தக்க வகையில் திருமணம் நடைபெற வேண்டிய பொறுப்பும், கவலையுங் கொண்ட நிலையிலிருக் கும் கம்பர், வீட்டில் இல்லாத போது,

ஆதித்த சோழனது இளைய மகன் கன்னரத் தேவன் (இவன் ராஷ்டிரக் கூட 3 ஆம் கிருஷ்ணன் மகள் பட்டத் தரசி வயிற்று மகன்) ஏற்கனவே அமராவதியின் தோழி,

தோழனாக, மாணாக்கராகவும், பயின்ற போதே பழகி வந்ததாலும், வாலிப வயது காரணமாகவும், கன்னரத் தேவன் காவேரி மீது ஒருதலைக் காதல் கொண்டிருந்தான் போலும்.

அம்பிகாபதி, அமராவதி காதல் காரணமான அம்பிகாபதியைக் கருதி, அமராவதியும் மரணத்தைத் தழுவினாள் அல்லவா, இதற்கு அம்பிகாபதியே காரணம் என்ற வருத்தம், அரண்மனையில், ஆதித்தன் முதல் அனை வருக்குமே ஏற்பட்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆகவே அம்பிகாபதியின் தங்கையை ஒருதலைக் காதல் வெம்மையா லும், இளவரசன் என்ற செல்வாக்கினாலும் காவேரியைக் கெடுத்து பழி வாங்கக் கருதி இருந்தான், எனத் தெரிகிறது. இதற்கான சந்தர்ப்பத்தை எதிர்நோக்கி இருந்த கன்னரத் தேவன், கம்பர் வீட்டில் இல்லாத நேரம் பார்த்துத் தனிமை யில் இருந்த காவேரியிடம் வரம்பு மீறிட முனைந்துள்ளான். அதனை.

கம்பநாடர் குமாரி காவேரி, இவளிடம் சோழன் மகன் காதல் கொள்ள இவள் கற்புக் கெடுவதினும் சாதல் நலமென எண்ணிக் கம்பங்குதிரில் இறங்கி மூழ்கித் தற் கொலை செய்து கொண்டாள்[13] என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது.

கம்பங்குதிர் எனில் 6 கலம் 12 கலம் கொள்ளளவு கொண்டவை என்று, சோழ வளநாட்டிலே குறிப்பாகத் தேரழுந்தூர் பகுதியில் இவ்வளவு பெரிய 'குதிர்' பல வீடு களில் இருந்தன என்றும் தற்கொலை புரியத்துணிந்த பெண் கள், கம்பங் குதிரில் இறங்க நேரும் என்பதாலும், மேற் பகுதியில், மூங்கில் தட்டு வைத்துச் சாணம் மெழுகி வைப் பார்கள். என்று நாம் விசாரித்தபோது சில வயதான தாய்மார்கள் விளக்கமளித்தார்கள். சோழன் மகனால்

இருந்த ஒரே மகள் காவேரியும் கற்புக்கர்த்திடக் கம்பங் குதிரில் இறங்கி உயிர் துறந்தாள், என்றறிந்து கம்பர் உள்ளம் மேலும் என்ன கதியடைந்திருக்கும் என்பது விளங்கக் கூடியதே.

அரண்மனைக்குச் சென்று ஆதித்த சோழனைக் கண்டு நீதி கேட்டிருப்பார் கம்பர் என நம்பலாம்.

அதிர்ச்சி! அடைந்த ஆதித்தன் என்ன! என் மகனா? கன்னரத் தேவனா? இக்கொடிய செயலைச் செய்தான்? யாரங்கே? ''கன்னரத் தேவன் எங்கிருந்தாலும் இங்குக் கைது செய்து கொண்டு வாருங்கள்,'' என ஆணையிட்டு இருப்பான்.

ஆனால்! கன்னரத் தேவனோ! 'விளைவுகள் இப்படித் தான் இருக்கும் என்பதை எண்ணி எப்படியோ தப்பிவிட் டான். நாட்டைவிட்டு ஓடி விட்டான். ஆம் அவன் ராஷ்டிர கூடத்துப் பாட்டனார் வீட்டிற்குத் தப்பி விட்டான்.

பிற்காலத்தில் தந்தை ஆதித்தன் இறந்து பராந்தகன் பட்டத்திற்கு வந்த பிறகு ராஷ்டிர கூடர் துணையுடன் அரசுரிமைப் போர் தொடுக்க கி. பி. 916இல் படையுடன் வந்து தோல்வி கண்டான் என்கிறது வரலாறு.[14] எழுதியவர் ஏ. கே. நீலகண்ட சாஸ்திரியவர்கள்.

எனவே இவன் ஓடிப் போனமைக்கு வேறு காரணம் ஏது மிலாமையால் அது காவேரி இறக்கக் காரணமாக இருந் தான் என யூகிக்கலாம். எனவே, காவேரியின் மரணமும் கம்பர் காலம் காட்டும் ஒரு சான்றாகிறது என்பதை ஈண்டு அறியலாம்.

காவேரி இறக்கக் காரணமாக இருந்தவன் ஒட்டக் கூத்தரின் மாணவனான விக்கிரமசோழனே (கி. பி. 1135—1150) என்று குறிப்பிட்டு அம்பிகாபதி பற்றிய நாடக நூல் ஒன்று கூறுகிறது. அது அம்பிகாபதிக்காகப் புனையப்பட்ட கற்பனை நாடக நூல். கம்பர் காலம் 12ஆம் நூற்றாண்டு என்ற நம்பிக்கையில் எழுதப்பட்டதாகும். அது ஆராய்ச்சி நூல் அல்ல.

கன்னரத்தேவனுக்கு "ஏனோ? அரசு கிடைக்க வில்லை என்று", வினா எழுப்பியுள்ளார். "பொற்காலத்தின் கதை" என்ற நூலாசிரியர் பக்கம். 24, காவேரி தற்கொலைக்குக் காரணமாகிப் பாட்டனார் ஊருக்கு ஓடி விட்டான். அது தான் அரசுரிமைக் கிடைக்காத காரணம் என்பது விளங்கும்.

எல்லாவற்றையும் இழந்துவிட்ட கம்பருக்கு இது மேலும் அதிர்ச்சியளித்திருக்கலாம். ஆகவே, "மன்னனுக்கு ஒரு நீதி, மக்களுக்கு ஒரு நீதி எவ்வாறு?" என இகழ்ந் துரைத்தார் போலும்

இதற்கு என்ன பதிலுரைப்பது? என்று நினைத்து ஆதித்தன் கீழ்கண்டவாறு கூறியிருக்க முடியும்.

"உன் மகன், மன்னன் மகளைக் காதலித்தான். அது மன்னிக்க முடியாத, குற்றம். அவனுக்கு மரண தண்டனை அளித்தது மட்டுமல்லாது, நான் நினைத்திருந்தால், உங்களை நாடு கடத்தியிருப்பேன், ஆனால்; ஒப்புயர்வற்ற தமிழ்க்காவியம் படைத்தீர்களே அதுதான் உங்களைக் காப்பாற்றியது" என்றான்.

கம்பரால் இதைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை ல தம்மைவிட இளையவனான ஆதித்தன், தம்மை "மாமா, மாமா" என்றும், "அம்மான்" என்றும் உறவாடிய

ஆதித்தன், மன்னன் என்ற மமதையில் பேசுவதா? கம்பர் உள்ளம் கொதித்தது போலும்.

''உதடுகள் துடித்தன; சொற்றொடர்கள் வெடித்தன; உணர்ச்சிப் பொங்க, ''நாட்டையாளும் மன்னனையே துச்சமாக மதித்து எதிர்த்துச் சூளுரைத்துப் பாடிய ஒரே கவிஞன் கம்பர்தான் எனக் கூறியுள்ளனர்'' அந்தப் பாடலைப் பாடிப் பாருங்கள்.

**மன்னவனும் நீயோ? வளநாடும் உனதோ?**
**உன்னை யறிந்தோ? தமிழை யோதினேன்?**
**என்னை**
**விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ?**
**உண்டோ?**
**குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு.**

என்று பாடியதோடு நில்லாமல் அன்றி அதே ஆதித்தன் தொண்டை நாட்டை ஆண்டிருந்தபோது,

''முடியுடைய மன்னவரிற், எழுபத்தொன்பது நாட்டுக் குடியுடையான்'' என்ற பாடலில் கண்டுள்ள நாடுகள் 79 தும் தொண்டை மண்டலத்தின் விஸ்தீரணம் இருபத்தி நான்கு காதம் மட்டும் என்பதையும் கம்பர் பாடுகிறார்.

**காதம் இருபத்து நான்கு ஒழிய காசினியை**
**ஓதக் கடல் கொண்டு ஒளித்ததோ!—மேதினியில்**
**கொல்லி மலைத் தேன் சொரியும் கொற்றவா நீ**
**முனைந்தால்**
**இல்லையோ எங்கட்(கு) இடம்?**

— கம்பர்

என்று எடுத்தெறிந்தாற்போல் கம்பர் பாடியது கேட்ட ஆதித்தனுக்குச் சினம் பொங்கியது! ''எம் நாட்டில் எமது

அதிகாரத்தில் இருந்துகொண்டு எம்மை மதியாத நீர் எம் நாட்டை விட்டேகுக, உம்மை வரவேற்கும் வேந்தரிடமே போகுக'' என்று கவிச் சக்கரவர்த்தியைப் புவிச் சக்கர வர்த்தி கூறினான் போலும்.

இதன் காரணமாகவே கம்பர் நாட்டை விட்டு வெளி யேறினார் எனத் தெரிகிறது. இதுபற்றித் தென்னாட்டுக் கோயில்கள் 2 ஆம் பாகம் ஆசிரியர், ம. ராதாகிருஷ்ண பிள்ளை எழுத, அல்லயன்ஸ் கம்பெனி, வெளியிட்டுள்ளதை மகாத்மா காந்தி, உ. வே. சா. ஆனரபில் வி. எஸ். சீனிவாச சாஸ்திரி, சக்கரவர்த்தி. ராஜகோபாலாச்சாரி, சத்திய மூர்த்தி, திரு. வி. க. முதலியோர் பாராட்டியுள்ள நூலில் கீழ்க்கண்ட செய்தி குறிப்பிட்டுள்ளது.

தேரழுந்தூரில் வைணவ ஆலயத்துக்குத் தென்மேற்கே, கம்பர் மேடு என்ற இடம் இருக்கிறது. அம்மேடு சுமார் மூன்று ஏக்கர் பரப்பளவு உடையது. மேட்டில் ஒரு பகுதி யில் இடிந்த பெரியமாளிகையின் சின்னங்கள் காணப்படு கின்றன. இந்த வழியாக வந்து கொண்டிருந்த சோழ வரசன் கம்பனது பிரமாண்டமான வீட்டைப் பார்த்துத் தேவாலயம் என்று வணங்கினானாம். பிறகு கம்பன் வீடு என்று அறிந்து அதை இடிக்க உத்திரவிட்டான் என்பர்.

கம்பர் ''மண்டை'' எனும் மண் கலையத்தில் உண்பது வழக்கமாம். உண்டதும் அது வெளியே எறியப்படும். அந்த இடத்தில் ஓட்டுச் சல்லிகள் (ஏகமாக) காணப்படுவது இதன் பொருட்டே ஆகும்.[15]

''மண்டை'' என்பது சங்க காலத்தில் பாணர்கள் பயன் படுத்திய உண்கலமாகும். அது மண்கலம், வெண்கலம், (வெள்ளி) பொன்கலம், என்று சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.[16]

**பற்ற அரும்பால் அமுதளித்தும்**
**பகைத்த வறுமை பயம் தீர்த்தும்**
**கற்ற "முதல் நூல்" திருவழுந்தூர்க்**
**கம்பன் தழை கருணை செய்து**

சடையப்ப வள்ளலின் ஊரான திருவெண்ணெ யூரிலும் கம்பன் வாழ்ந்தாரெனக் காட்டப்படும் மண் மேட்டில் அதே போன்று ஓட்டுச் சல்லிகள் நிறைந்து காணப்படுகின்றன. இம்மண் மேட்டிலிருந்து இறங்கினால் வயல்; வயலிலிருந்த செங்குத்தான ஒரு சிறுமேட்டை ஓடு கொண்டு சுரண்ட, செங்கல் சுவர் காணப்பட்டது. அது கட்டடத்தின் அடிப்பாகமே, என்பதை உடன் வந்த தமிழாசிரியர் இதுவரை தாமே கண்டதில்லையென வியந்தார்.

## கி. பி. 888

கவிச் சக்கரவர்த்தி கம்பர் எல்லாவற்றையும் துறந்து, தம் மனம் போல் தேசாந்திரமாகத் திவ்ய தேசங்களையெல் லாம் காண பிரயாணம் செய்தார் என்பதற்குச் சான்றாக, குடந்தை, ஸ்ரீ சாரங்க பாணிப் பெருமாள் கோயில், திரு நறையூர் பெருமாள் கோயில் ஆகிய மூர்த்திகளைப் பிரார்த் தித்துப் பாசுரங்கள் பாடியுள்ளார். அவற்றை எடுத்துக் கொண்டு திருவரங்கம் சென்று ஸ்ரீமந்நாத முனிகளிடம் சமர்ப்பித்து இருக்க வேண்டும்.

ஆழ்வாராதிகள் பாடியருளிய பாசுரங்களை அவர் திவ்விய பிரபந்தமாகத் தொகுத்துக் கொண்டிருந்தமை யால், கம்பர் பாசுரங்களையும் ஏற்று இருக்க வேண்டும்.

திவ்விய பிரபந்தத்தில் கம்ப நாட்டாழ்வார் அருளியது என்று இருப்பது அறிந்ததே.

பிறகு தம் உறவினர் முதலானோர் ஊர்களுக்கும் சென்றார். நண்பர்கள் அறிஞர்கள் முதலியோரையும், சந்தித்துச் சென்றதாக, பல ஊர்களில் பாடியுள்ளதையும் அவ்வூர்களையும் 'கம்பநாடு' பகுதியில் காண்க.

இறுதியாகச், சேரநாடு செல்ல விரும்பினார். அப்போது கன்னியாகுமரி சேரநாட்டில் இருந்தது. அங்குச் சென்று சிறிது காலம் தங்கி வாழ்ந்தார் என்பதை இந்துமித்திரன் பக்கம் 18 அட்சய ஆண்டு தை மாத இதழ் கீழ்க்கண்டவாறு கூறுகிறது.

''தமிழகத்தின் தென்பகுதி குமரி மாவட்டம், இங்குப் பத்மநாபபுரம் என்ற நகர் உள்ளது. இந்நகர் கோட்டை மதில் சூழக்காட்சி தருகின்றது. கோட்டையின் உள்ளே, வேணாட்டு மன்னர்கள் வாழ்ந்த பழமையான அரண்மனை ஒன்றும் அதனை அடுத்து, சரஸ்வதி அம்மன் கோயில் ஒன்றும் உள்ளது.''

''கம்பர் தென்குமரி வந்தபோது தன்னோடு தான் வணங்கிய கலைமகளின் திருவுருவச்சிலையைக் கொண்டு வந்தார்.''

இத் திருஉருவச்சிலைதான், இக்கோயிலில் வைக்கப் பட்டது. இது கம்பரால் வணங்கப்பட்டது என்று வட்டார மக்கள் கூறக்கேட்கலாம்'' என்றும், இதற்கு ஆதாரமாகச் சரஸ்வதி அந்தாதியைக் கம்பர் சேரமன்னன் தாணு ரவி அவையிலே பாடினார் என்பது கம்பர் வரலாறு. சேர நாட்டின் ஒரு பகுதி தான் வேணாடு (வேள்+நாடு). வேணாட்டின் தலைநகர் பத்மநாபபுரம். அன்றைய நாஞ்சில் நாடும் வேணாடும்தான் இன்றைய குமரிவட்டம்.[17]

நவராத்திரி விழாவின்போது கம்பரின் சரஸ்வதி உருவச் சிலை கேரள மாநிலத் தலைமைநகர் திருவனந்தபுரத்திற்கு

எடுத்துச் செல்லப்படும். ஸ்ரீஅனந்தபத்மநாபன் சுவாமி ஆலயத்தின் அருகே உள்ள நவராத்திரி மண்டபத்தில் வைத்துப் பத்துநாள் விழா தொடங்கும். பத்மநாபபுரத்தி லிருந்து திருவனந்தபுரம் வழி நெடுக மக்கள் வீடுகளை அலங்கரித்து, தீபமேற்றி, திருவிழா போன்று கோலாகல மாக வரவேற்பர், தமிழக கேரள எல்லைகள் விழாக்கோலம் பூண்டிருக்கும். குமரிமாவட்டத்தில் இவ்விழா தேசிய ஒருமைப்பாட்டு விழாவாகக் கொண்டாடப் படுகிறது. கம்ப ராமாயணத்திலும் சங்ககால நாஞ்சில் தமிழ்ச் சொற்கள் கொஞ்சுவதைக் காணலாம்.[18] இவ்வாண்டு 12-10-94இல் நடந்த சரஸ்வதி பூஜையின் மேற்படி விழா, படங்களுடன் தினமலரில் சிறப்பாக இடம் பெற்றது.

கேரள மன்னன் தாணு ரவியின் அவையிலேயே கம்ப இராமாயணம் கற்றுச் சொல்லி பாட, கம்பர் உரை நிகழ்த்தியது தொன்று தொட்ட மரபாக இன்றும் வழக்கத் தில் உள்ளது. இவனது அவையில் சரஸ்வதி அந்தாதிபாடி அரங்கேற்றியபோது, தாம் பூஜித்து வந்த சரஸ்வதி சிலைக்கு மன்னனது கோட்டையை அடுத்துக் கோயில் அமைத்துத் துவக்கிய விழா இன்றும் சிறப்பாக நடந்து வருவது நினைவு கூரத்தக்கதாகும்.

மேற்படி தாணு ரவியுடன் ஆதித்த சோழன் நல்ல நட்புறவு கொண்டிருந்தான். விக்கியண்ணன் என்ற படைத் தலைவன் ஒருவனுக்கு இவ்விரு அரசரும், துவிசு, சாமரை, சிவிகை கோயில் பேனகம் காளம், யானை மற்றும் விருது களையும் செம்பியன் தமிழ்வேள் பட்டமும் வழங்கியுள்ளார் கள். இவ்வீரன் தாணு ரவியின் படைத்தலைவனாகும். ஆதித்த சோழனது கொங்கு நாட்டுப் போர்களில் படைத்துணை வழங்கினான்.[19]

பாண்டியமன்னன் வீர நாராயணன் மகன் ராஜ சிம்மன் சேர மன்னன் தாணுரவியிடம் சோழனை

எதிர்க்க படை உதவி கோரிய போது பாட்டனார் தாணு ரவி கூறுகிறார். ''குழந்தாய், உனது அன்னையைப் போலவே சோழன் பராந்தகனது மனைவியும் எனது மகளன்றோ? சோழனுக்காக, பார்க்கா விடினும், மகளுக் காக நான் நடுநிலைமை வகிக்க வேண்டி இருக்கிறது,'' என்று கூறியதாக வித்வான் V. நரசிம்மன் எழுதி யுள்ளார்.[20]

கி.பி 910-11 இல் பராந்தகனை அரியணையிலிருந்து இறக்கி விட்டு, தன் மகள் வயிற்றுப் பிறந்த கன்னரத் தேவனைச் சோழ நாட்டு மன்னனாக முடிசூட்டு விக்கும் சூட்சி ஒன்றில் ராஷ்டிர கூட 2ஆம் கிருஷ்ணன் ஈடுபட லானான். தனக்குத் திறை செலுத்திய வானகோவரையரின் துணைக் கொண்டு அவன் சோழ நாட்டின் மீது போர் தொடுத்தான்.[21]

ஆதித்த சோழன் ''தொண்டை நாடு பாவின சோழன்'' என்றும் கோதண்டராமன் என்றும் பட்ட பெயர்கள் பூண்டிருந்தான். இம்மன்னன் தொண்டை மண்டலம் வரை தம் ஆட்சியை விரிவாக்கினான் சேர மன்னன் தாணுரவியோடும் நல்லுறவு கொண்டிருந்தான் என்று[22] தினமலர் 17-4-92இல் கிடைத்த மரக்காணம் கல் வெட்டும் கூறுகிறது.

கேரள தாணுரவி மகள் அரசிளங்குமரியை ஆதித்தன் தன் மகன் பராந்தகனுக்கு மணமுடித்தான். இவள் பெற்ற மகனே அரிஞ்சயனாகும் என்பது வரலாறு.[23] இதனைத் தென்னிந்திய வரலாறு ஆசிரியரும் எழுதி யுள்ளார்.[24]

11 ஆம் நூற்றாண்டு வீரசோழியம் 25 ஆம் பக்கத்தில் 20.30 வருடம் சேரனிடம் போய் இருந்து கம்பர் திரும்பி வரும் வழியில், பிறரால் கம்பராமாயணம் பிரசங்கம்

செய்யப்பட்டபோது அதில் குறைபாடு கண்டு வருந்திய தாகக் கூறப்பட்டுள்ளது.[25] இந்நூல் பிற்பட்ட நூலானதால் சேரனிடம் கம்பர் நெருங்கி, தங்கி இருந்தமைக்குச் சான்றாகும்.

எனவே இவைகளை உற்று நோக்கினால் தாணுரவி கம்பர் - பத்பநாபபுரம், கம்பரின் சரஸ்வதி ஆலய செய்தி ஆகியவை நம்பத்தக்கதாக உள்ளன. சரஸ்வதி ஆலய வரலாறும் இதைத் தெரிவிக்கும். எனவே கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான் என்பதும் விளங்கும்.

கம்பரை முன்னமே நன்கு அறிந்திருந்தமையால் சேரமன்னன் கம்பரை அன்புடன் வரவேற்று அரசவைப் புலவராக்கினான் என்கிறார் வித்வான் வி. நரசிம்மன் [26]

ஆதித்தன் காலத்தில் கம்பர் வாழ்ந்தார் என்ற வரலாற்றை மறந்ததால் வந்தது குழப்பம் என்கிறார் சா. கணேசன் [27]

## கி. பி. 889

காஞ்சிப் பல்லவனும் ஆதித்த சோழனது மாமனாரான நிருபதுங்கன் தெலுங்கு சோழரிடம் மறைந்து இருந்து வெளிப்பட்டு இயற்கை எய்தினான்.

## கி. பி. 890

ஆதித்தனது மகன் பராந்தகனும் முனைந்து போர் பல கண்டு சேரநாட்டின் தென் மண்டலம் நடு நாட்டையும் (சேதி நாடு) ராஷ்டிர கூட கிருஷ்ணன் (மாமனார்)கக்கலன் என்பான் (கி. பி. 880) முதல் ஆண்டு வந்ததைக் கைப் பற்றினான்.

## கி. பி. 890

அபராஜிதனிடமிருந்து தொண்டை நாட்டையும் ஆதித்தன் வென்றான் [28] "தொண்டை நாடு பரவின

சோழன் பல்யானை கோக் கொண்டான்'' என விருது கொண்டான் [29] இவனாட்சி மைசூர் வரை பரவி (867 — 1023) வரை இவனுக்குப் பின்னும் சோழராட்சி நிலை பெற்றது [30] ஆதித்தனுக்கு ஆதித்ய வர்ம இராஜேந்திரன் என்ற பெயரும் உண்டு [31] இவன் தொண்டை நாட்டை இணைத்துக் கொள்ள அபராஜிதனைப் போரில் யானை மீதிருந்தவனை ஒரே வீச்சால் கொன்றான் என்று கன்னியாகுமரி கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. [32]

## கி. பி. 903

காஞ்சியைக் கைப்பற்றி மேலும் வடக்கே இவனது ஆட்சி ராஷ்டிர கூட எல்லை வரை சோழராட்சி விரிந்தது. ஆதித்தன் ராஜகேசரி விருது கொண்டான். [33] திருச்சிராப் பள்ளி சீனிவாச நல்லூரில் குரங்குநாதர் கோயிலைக் கட்டினான். [34]

கொங்கு நாட்டு வரலாறு ஆதித்தனைப் பற்றி குறிப் பிடும் நூலாகும்.

## கி. பி. 907

ஆதித்தனின் இறுதிக்காலம் காளஸ்திரி என்னும் காளத்தி குடிபாலம் தொண்டை மாநாடு என்னுமிடத்தில் அரண்மனையில் வாழ்ந்து இயற்கை எய்தினான். இவனது சமாதி மேல் மகன் பராந்தகன் கோதண்ட இராமேஸ்வரம் என்னும் ஆலயம் கட்டினான். காளத்தியில் கல்வெட்டுக்கள் சமஸ்கிருதத்தில் 80, கிரந்தத்தில் 9, தமிழில் 69, குடிபால் 1, தெலுங்கில் 7 உள்ளன. [35]

## அடிக்குறிப்பு

1. கலைச் செல்வி தனிப்பாடல் திரட்டு. பக், 96.
2. ,, ,, ,, ,,
3. ,, ,, ,, ,,
4. வினோதசரமஞ்சரி கம்பர் வரலாறு
5. அபிதான சிந்தாமணி, பக். 295.
6. கலைச் செல்வி தனிப்பாடல் திரட்டில் அம்பிகாபதி.
7. மீனாட்சி தனிப்பாடல் திரட்டு. பக். 93.
8. ,, ,, ,, 99
9. ,, ,, ,, ,,
10. மீனாட்சி தனிப்பாடல் திரட்டு. பக். 80.
11. கலைச்செல்வி முன்னுரை, பக். 3.
12. அம்பிகாபதிக் கோவை சுப்பிரமணிய தேசிகர் உரை.
13. அபிதான சிந்தாமணி, பக். 341. 420.
14. நீலகண்ட சாஸ்திரி தென்னிந்திய வரலாறு
15. தென்னாட்டுக் கோயில்கள்
16. புறநானூறு.
17. இந்து மித்திரன் பக். 18. அட்சய தை.
18. ,, ,, 19.
19. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 246.
20. பாண்டியன் முடி. பக். கோபால் பிள்ளை பதிப்பு திருச்சி 1953.

21. தமிழக வரலாறும், ம. பக், 248.
22. மரக்காணத்தில் புதிதாகக் கண்டிபிடித்த கல்வெட்டு தினமலர். 17-4-92
23. தமிழக வரலாறு, பக். 251.
24. தென்னிந்திய வரலாறு. பக். 225.
25. வீர சோழியம் பதிப்புரை, பக். 25.
26. பாண்டியன் முடி பக். 13.
27. கம்பன் மலர். பக். 230. கோவை.
28, அமுதசுரபி தீபாவளி மலர் பக். 330. 1991,
29. South Indin INS. Vol. III. No. 96 இலக்கிய கல்வெட்டு.
30. செந்தமிழ் இதழ் தொகுதி 52.
31. அபிதான சிந்தாமணி பக். 754.
32. கன்னியாகுமரி கல்வெட்டு த.வ.ம.ப. ப. 245.
33. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் ப. 245.
34. ஊரும் பேரும்.
35. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக்.246.

# 18. கம்பரின் சூளுரை நிறைவேறியது!

## முதலாம் பராந்தகன் 907-957

ஆதித்தன் இறந்தபிறகு பராந்தகன் பட்டம் சூடினான். இவர் கம்பரிடம் பயின்ற மாணவன். இவனுக்குக் குலோத் துங்கன் என்றும் பராந்தகன் என்றும் விக்கிரமாதித்தன், இராஜேந்திரன். வீரநாராயணன். பராந்தகதேவன் என்றும் பல பெயருண்டு.

## இவனது விருது பெயர்கள்

இராமனை அடுத்து இலங்கையை வென்றமையால் சங்கிராமராகவன் என்றும் புலவர்களை ஆதரித்தமையால் பண்டிதவச்சலன், பல்யானைகளை போரில் கொன்றமை யால், பல்யானைக்கோக் கொண்டான் ராஜகேசரி.[1] வேற்று அரசர்களுக்குச் சிங்கம் போன்றவன் குஞ்சரமல்லன். —யானையைப் போல் பொருபவன். மதுரையை வென்று மதுராந்தகன். இலங்கையும், மதுரையும் வென்று[2] பரகேசரி, ராஜகேசரி.[3] இவன் சைவனாகி தில்லைக்குப் பொன் வேய்ந்தான்.[4] மற்றும் செம்பியன், சோழவரையன், வீரசோழன் ஆகிய விருது கொண்டவன்.[5] தவிர இவன் பாண்டியர்களை, இருமுறை வென்றமையால். **இருமடி சோழன்'** எனும் விருது பெற்ற ஒரே சோழன் முதலாம் பராந்தகனே! இவனது கல்வெட்டுகளில் மட்டுமே.

"இருமடி" என்ற சொல் இடம் பெற்றிருக்கும்.[6] இவ்வாறான இருமடி என்ற சொல் சென்னை திருவொற்றியூர் ஆதிபுரீச்சுரர் ஆலயத்தில் உள்ள கல்வெட்டில் சதுரானனப் பண்டிதர், கம்பர் பெயரும் உள்ளது.

இவனுக்கு, குலோத்துங்கன் விக்கிரமாதித்தன் மதுரையும், ஈழமும்கொண்ட பராந்தகதேவன் கோவி. ராஜகேசரி, கேசரிவர்மன், இராஜேந்திரன் என்ற பெயரும் உண்டு.[7]

இவனது தேவிகள், வளவன் மாதேவி, கோக்கிழானடிகள்.

இவனது மக்கள் : 1. ராஜாதித்தன் 2. கண்டராதித்தன். 3. அரிகுலகேசரி, 4. அரிஞ்சயன், 5. உத்தமசோழன். 6. வீரமாதேவி (நான்காம் கோவிந்தனுக்கு மணமுடித்தான்) 7. அனுபமா (கொடும்பாளூர் குறுநில மன்னனுக்கு மணமுடித்தான்) இவனாட்சி வேகமாகப் படர்ந்தது)

கி. பி. 910 இல் இக்கால கட்டத்தில் ராஷ்டிரக்கூட பேரனும் பராந்தகனின் சகோதரனுமான கன்னரத்தேவன் சோழநாட்டின் மன்னனாக்க, இரண்டாம் கிருஷ்ணன் வான கோவரையர் துணைக் கொண்டு, சோழர் படையும், இராஷ்டிரக்கூடப் படையும் திருவல்லத்தில் மோதிக் கொண்டன. கிருஷ்ணன் கன்னரத்தேவன் படைகள் படுதோல்வி கண்டன. பராந்தகன் வீர சோழன் விருது கொண்டான். [8]

கம்பர் சோழ நாட்டைவிட்டு, சேரநாட்டின் தென் குமரி பத்மநாபபுரம் சேரமன்னன் தாணுரவி கோட்டை

சென்றார். தாம் பூஜித்து வரும் கையோடு கொண்டு வந்த கலைமகள் திருவுருவச் சிலையைக் கோட்டையருகே மன்ன னாதரவால் கோயில் கட்டி சரஸ்வதியை எழுந்தருளவித் தார். 9

இம்மன்னன் பராந்தகன் மாமன்னாரும் ஆதித்த சோழனின் சம்பந்தியுமாரும் கம்பருக்கு மிகவும் பரிச்சிய மானவனும் கம்பஇராமாயண அரங்கேற்றத்தில் வந்திருந்த போது தமது அவைக்கு வருகைதரக் கம்பரை வேண்டியவன். எனவே கம்பரின் பெருமையும், தற்போதைய சிறுமையும், ஆதித்தனால் அடைந்த கொடுமையும் உணர்ந்து ஆறுதலும் ஆதரவும் அளித்துச் சிறப்பாகப் போற்றி அவைப்புலவ ராகக் கௌரவித்தான்.

சேரநாட்டு அவையில் கம்ப இராமாயணம் கற்றுச் சொல்லியால் இசைத்து கம்பர் உரையாற்றி மிக சிறப் புற்றதும் மன்னனே கம்பருக்குத் தாம்பூலம் மடித்து அளித்து அடைப்பக் காரனாகத் தொண்டாற்றியும் சிறப் புற்றதும் மற்ற அவைப்புலவர்கட்குப் பொறாமை ஏற் பட்டதும் அதனால் கம்பர் மேலும் சிறப்படைந்தார் என வரலாறு உண்டு. அதை எழுத நீளும் என்பதால் ஆதித்த னிடம் சூளுரைத்தவாறு "என்னை வரவேற்காத வேந்த னுண்டோ?" என்ற கவிச்சக்கரவர்த்தியின் தன்னம்பிக்கை நிருபிக்கப்பட்டது.

ஆதித்த சோழனும் அதை அறிந்து உலகம் போற்றும் கவி ஐயனுக்குத் தம் மக்களால் தந்தைகளுக்கு ஏற்பட்ட நிலையை எண்ணி வருந்தினான். கம்பரை மீண்டும் தம் அவைக்கு அழைத்தான் எனக் கூறப்படுகிறது. சேர நாட்டுக்கு இணையார மார்பனை அனுப்பி கம்பரை அழைத்தான் என்று கு. அழகிரிசாமி, சக்தி ராமாயணத்தில் குறிப்பிடுகிறார்.

மாமனார் அரண்மனைக்குப் பராந்தகன் வந்து தமது குருவான கம்பரைப் பலமுறை நேரில் அழைத் திருக்கக் கூடும்.

கம்பர் சேரநாட்டிலிருந்த போது இலங்கைத் தமிழ் பண்டிதர்கள் பலரும் வருகை தந்து கம்பரை இலங்கைக்கு அழைத்தனர். இங்குக் கம்ப இராமாயணம் பல படிகள் எடுக்கப்பட்டு இலங்கைக்குக் கொடுத்தனுப்பப்பட்டது

கம்பர் இலங்கை சென்று வறுமையால் மண்சுவர் வைத்து உயிர் பிழைத்தார் என ஒரு இட்டுக்கட்டிய பாடலை வைத்துக் கூறப்படுகிறது. அது அபத்தம். இலங்கைத் தமிழர்கள் தாயக மக்களை வரவேற்று உபசரிக்கும் பண்பாடுமிக்கவர்கள், என்பதற்கு அண்மையில் நடந்த ஒரு நிகழ்ச்சியை உதாரணமாகக் கொள்ளலாம்.

## கி.பி. 1982-இல்

இலங்கை கொழும்புவில், இலங்கை அரசு சார்பில் உலக இந்து மாநாடு நடைபெற்றது. நூற்றுக்கணக்கான தமிழ் நாட்டுப் பேராளர்கள் கலந்து கொண்டனர். நானும் எனது துணைவியார் டாக்டர். மங்கையர்க்கரசியும் அரசு அழைப்பின் மூலம் கலந்து கொண்டோம். முன்பின் தெரியாத எங்களை மன்னார் துறைமுகத்தில் யாழ்ப்பாண தமிழ் அறிஞர்கள், பெருமக்கள் பலரும் கப்பலிலேயே வந்து பழரசம் கொடுத்து வரவேற்று (அனைவரையுமே) ஓரிடத் தில் அமரவைத்து. எமக்கு உண்டியளித்து, உரை நிகழ்த்தி, அறிமுகம் செய்தனர். அவர்களில் தமிழ்ப்பேராசிரியர், வித்வான் சைவசித்தாந்த செம்மல், மு. சபாரத்தினம் அவர் கள் நாங்கள் கொண்டு சென்ற ''இந்து சமயப் பண்பாடு', என்ற நூலை (மாநாட்டில் வெளியிட நான் இயற்றியது) கண்டு இந்து மாநாடு முடிவுற்ற பிறகு யாழ்ப்பாணம்

காரைநகர்வரவேண்டி, அங்கு பாரதி நூற்றாண்டு விழா ஏற்பாடு செய்ய விரும்புவதாகக் கூறினார்.

கொழும்பு மாநாடு முடியும் தறுவாயில் "ஈழநாடு" வீரகேசரி போன்ற நாளிதழ்களில், பாரதி நூற்றாண்டு விழாவில் எம்மை நடுவராகவும், தலைவராகவும் 3 நாள் நிகழ்ச்சியுடன் வெளியிட்டு சிறப்பித்திருந்தது.

அது மட்டுமல்ல, நேரில் யாழ்ப்பாணம் சென்று கலந்து கொண்டபோது, மதுரை தாய்மார்களைக் கொண்டு தமிழக உணவுகள் தயாரித்தளித்தும் வெகுவாகச் சிறப்பித்தார்கள். முன்னதாக இலங்கையரசு ஏற்பாடு செய்திருந்த எமது சுற்றுலாவில் பல்வேறு பகுதி, தமிழ் மக்கள் திரளாகப் பல இடங்களிலும் வந்து காத்திருந்து மாலைகள் அணிவித்து, கலை நிகழ்ச்சிகள் நடத்தி, வரவேற்புரை, பரிசுகள் அளித்து உபசரித்து அனைவரும் காட்டிய அன்பு என்றும் மறக்க இயலாது. எளியேனுக்கே இந்த வரவேற்பெனில், கவிச்சக்கரவர்த்தி 'இலங்கையில் மண்சுவர் வைத்து வயிறு வளர்த்தார் என்பது ஈழத்தமிழரையே அவமதிப்பது மட்டுமல்ல, கவிச் சக்கரவர்த்தியையும் சிறுமைப் படுத்துவதாகும்.

கி. பி. 910இல் ஆதித்தன் மறைவுக்குப்பின் நடைபெற்ற போருக்குப்பின் பராந்தகன் தன் ஆசானைச் சேரநாட்டிலிருந்து அழைத்துச் சென்று கவிச் சக்கரவர்த்தியைக் கௌரவிக்க (ஆதித்தனின் இறுதி ஆசையை) நிறைவேற்றினான் என்று தெரிகிறது.

சேரமன்னரிடம் பிரியா விடை பெற்றுக்கொண்டு கம்பர் சோழநாடு அடைந்தார். மீண்டும் தம் (சோழ) அரசவைப் புலவராக அமர்ந்து மகிழ்விக்கும்படியும் மன்னன் (பராந்தகன்) வேண்டினான்.[10]

கம்பர் தொண்டை மண்டலத்தில் சிலகாலம் கழித்து மீண்டும் தேசசஞ்சாரம் தொடங்கினார். இறுதியாக இராமேஸ்வரம் சென்று தரிசித்துத் திரும்பியபோது நாட்டரசன் கோட்டை வரும்போது, நா உலர்ந்து, நடை தளர்ந்து, அங்கு மாடுமேய்க்கும் சிறுவர்களிடம் தாகத்திற்குத் தண்ணீர் கேட்க சிறுவர்கள் மணலைத் தோண்டி தண்ணீர் தர அருந்திய கம்பர் பரமபதம் அடைந்தார். நாட்டரசன் கோட்டை மக்கள் வந்து இராமாயணச் சுவடி



களைக் கண்டு கம்பர்தான் என்று அறிந்து சமாதி கட்டி, ஆண்டுதோறும் விழா எடுத்துச் சிறப்பித்து வருகின்றனர். அவ்வூர் மக்கள் கம்பர் சமாதி மணலை எடுத்து நீரிலிட்டு குழந்தைகள் பிறந்ததும் அந்த நீரை முதல் அமுதாகப் புகட்டி வரும் வழக்கம் இன்றுமுள்ளது.




கம்ப இராமாயண ஓலைச்சுவடிகள் பல. நாஞ்சில் நாட்டின் பகுதியிலேதான் கிடைத்தன, என்ற செய்தியும் இங்கே சிந்திக்கத்தக்கது. இவ்வாறு தஞ்சை தேரழுந்தூரிலே பிறந்த கம்பர் தென்குமரி வந்தார். நாஞ்சில் மக்களோடு வாழ்ந்தார். நாட்டரசன் கோட்டையில் மறைந்தார், என்பவை வரலாற்றுச் செய்திகள்.[11]

கம்பரைப்பற்றிப் பொதுமக்களிடையே வழங்குவதுமான கர்ணபரம்பரைச் செய்தி ஒன்று உண்டு. அதுதான் நாட்டரசன் கோட்டையில் கம்பர் பரமபதம் அடைந்தார் என்பது. இப்பொழுதும் அவ்வூரில் கம்பர் சமாதி ஒன்று உள்ளது. இதற்கு ஆதாரமாக கி. பி. 1775ஆம் ஆண்டு வாக்கில் தோன்றியதாக ஆராய்ச்சியாளர்கள் கருதும் ''கண்ணுடைய அம்மன் பள்ளு'' என்ற நூலும் நாட்டரசன் கோட்டையில் அப்போதே கம்பனார் கோயில் இருந்ததாகக் குறிப்பிடப் பெறுகிறது.

நாட்டரசன் கோட்டையில் சமாதி இருப்பது கம்பர். சோழனுடைய வில்லுக்கு இரையாகி, அரண்மனையில் மாண்டதாகக் கூறும் கட்டுக்கதையை உடைத்தெரிகிறது.[12]

பாண்டிய நாட்டில் நாட்டரசன் கோட்டை என்னும் நகரத்தில் ஆவிநீத்தார். கம்பநாடர். அங்கு, கம்பர் திருக்கோயிலும், வழிபாடும் சிறப்பாக இன்றும் நிகழ்வது அனைவரும் அறிந்த செய்தி ஒன்றே போதுமானது.[13]

தேரழுந்தூர் ஸ்ரீ ஆமருவியப்பன் ஆலயத்திலும் ஆண்டு தோறும் மூன்று தினங்கள் கம்பர் விழா, கோயிலாரால் சிறப்பாக நடத்தப் பெற்று வருகிறது.[14]

சடையப்ப வள்ளல் ஊரான வெண்ணெயூரிலும் (தற்போது கதிராமங்கலம்) ஆண்டுதோறும் கம்பர் சடையப்ப வள்ளல் விழா ஆன்றோரால் நடத்தப்படுகிறது.

## கம்பர் கோட்டமும் கம்பர் சிலையும்

தமிழக அரசு சுற்றுலாத்துறை மற்றும் இந்து அறநிலையத்துறை, தமிழக முக்கிய ஆலயங்கள் ஆகியவற்றின் பேருதவியால் தேரழுந்தூர் கம்பர் கழகத்தவரால் சுமார் ஒரு ஏக்கர் பரப்பளவில் கம்பர்

கோட்டம் கட்டப்பட்டு 10-12-1984-இல் திறப்புவிழா செய்யப்பட்டது. கவிச்சக்கரவர்த்தி கம்பரின் கம்பீரமான திருவுருவச்சிலையை முன் மண்டபத்தில் வைத்துச் சிறப்பித்துள்ளார்கள். ஆனால் அது பெரிய நாடக அரங்கம் போல் உள்ளது. கம்பர் காவிய மணம் கமழும் கலைக் கூடமாக அதைச் செய்தால் மேலும் சிறப்பாக இருக்கும்.

மற்றும் தமிழகமெங்கும் கம்ப இராமாயண ஆராய்ச்சி அறிஞர்களும், தமிழறிஞர்களும், பலவிடங்களில் கம்பர் கழகம் அமைத்து, ஆண்டுதோறும் கம்பன் புகழைப்பரப்பி வருகிறார்கள். சென்னையிலும், காஞ்சியிலும், கதிராமங் கலத்திலும், தேரழுந்தூரிலும் மேலும் பல இடங்களிலும் கம்பன் கழகம் வெகு சிறப்பாகச் செயல்பட்டு, கம்பர் புகழ் பாடப்படுகிறது. உவச்சர் குலத்தவர்கள் சென்னை கடற்கரையில் உள்ள கம்பர் சிலைக்கு, பங்குனி அஸ்த நட்சத்திரத்தில் மாலை அணிவித்து, ஆண்டுதோறும் விழா நடத்தி வருகிறார்கள்.

## கம்பர் அஞ்சல் தலை

மத்திய அரசு தனது அஞ்சல்துறையில் 5-4-1966-இல் கவிச்சக்கரவர்த்தி கம்பரின் அஞ்சல் தலையை (15 பைசா ஸ்டாம்பு) அஞ்சலுறையுடன் வெளியிட்டது. இதன்மூலம் கம்பரின் பெருமையும், அவரது இராமகாதை அருமையும் புலனாகின்றன. அவர் பிறந்தது ஒன்பதாம் நூற்றாண்டு என்று ஆங்கிலத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

தேரழுந்தூர் என்றும், மயிலம் வட்டம், தஞ்சை வட்டம் என்றும் ஆங்கிலம் இந்தி ஆகிய மொழிகளில் குறிக்கப்பட்டுள்ளது, அதில் கவிச்சக்கரவர்த்தியின் முழு உருவப்படம் பொறித்து, கம்பரைக் கௌரவித்துள்ளது. அதில் சிறப்பான செய்தி என்னவென்றால் கம்பர் 9ஆம்

நூற்றாண்டு என்பதையும் பொறித்துள்ளது குறிப்பிடத் தக்கது.

## கம்பர் சிலை

தமிழக அரசு 1-2-1968-இல் சென்னை கடற்கரையில் கம்பீரமான கம்பர் சிலையை நிறுவியுள்ளது. அதில் காலம் 12-ஆம் நூற்றாண்டு என பொறிக்கப்பட்டுள்ளது. இந்தச் சிலையைக் கோவை மக்கள் அளித்துள்ளார்கள்.

தமிழுக்குக் கதியான "கம்பர்" "திருவள்ளுவர்" இருவரில் திருவள்ளுவருக்குக் கோட்டம் அமைத்துள்ளது போல் கம்பருக்கும் கம்பர் கோட்டம் அமைவது தமிழகத் தலைநகருக்குப் பெருமை தருவதாகும் என்று, தமிழக அரசுக்குக் கோரிக்கை விடப்பட்டு வருகிறது. சென்னை கம்பன் கழகமும்—தமிழ்நாடு உவச்சர் குலநலச்சங்கமும் இதனைச் செய்துள்ளன.

கம்பனடிப்பொடி சா. கணேசன் அவர்கள் 40ஆண்டுகளாகத் தனி ஒருவராகக் காலம் தவறாது காரைக்குடியில் மட்டுமின்றிப் பல மாநிலங்களிலும் கம்பன் கழகத்திற்குக் கிளைகள் உருவாக்கி கம்பன் புகழ் பரப்பினார்கள். கம்பன் விழா நடக்கும் நேரத்தில் தான் இறந்து விட்டால் கம்பர் விழாவை நிறுத்தாமல் நிகழ்ச்சிப்படி நடத்திவிட்டு என் ஈமச் சடங்குகளைச் செய்ய வேண்டும் எனக்கூறியுள்ளார்.[15] என்னே இவரது கம்பர் பக்தி? வாழ்க கம்பர் புகழ்.

### அடிக்குறிப்பு

1. பல்யானைக் கொண்டான். 239. OF. 1923. Cholos, VOL. I.P. 542.
2. Cholos. VOL. I. 145. 735. OF. 1905.

3. **S. I. I II.** 76 **MARXE**. 18. ராஜகேசரி விருது.

4. 1926. **VOL. X.X.I.U.** 7.

5. ஊரும் பேரும் பக். 106.

6, சதாசிவ பண்டாரத்தார். பிற்கால சோழராட்சியும் கல்வெட்டும் பக். 64.

7. அபிதான சிந்தாமணி பக். 1611.

8. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 248.

9. இந்து மித்திரன் பக். 18, 1986

10. வித். வி. நரசிம்மன் பாண்டியன் முடி பக். 14.

11. இந்துமித்திரன். பக். 21 ஜனவரி. 1987.

12. எஸ். வையாபுரிப்பிள்ளை. கு. அழகிரி சாமி. சக்தி ராமாயணம்

13. இராமசாமிபுலவர், இராமாயண வசனம் சைவ சித்தாந்த கழகம்.

14. ஸ்ரீ ஆமருவியப்பன் ஆலய வரலாறு பக். 22.

15. அமுதசுரபி. தீபாவளி மலர். 1984.

# 19. ஆராய்ச்சியாளர்களின் கம்பர் காலப் பட்டியல்

| எண் | நூலும் ஆசிரியரும் | ஆதாரம் | சோழர் ஆட்சி | காலம் கி.பி. |
|---|---|---|---|---|
| 1. | டாக்டர் மா.வ. கம்பர் காலம் 9ஆம் நூ. | ஆதாரம் 22 எடுத்துக்காட்டு 750 | விஜயாலயன் முதலாம் ஆதித்தன் பராந்தகன் | 840— 922 |
| 2. | தி.சா. பண்டாரத்தார் | ஆவின்கொடை பாடல்படி | அரிஞ்சயன் | 953— 957 |
| 3. | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சுந்தரகாண்டம் | 1. புவி புகழ், 2. சென்னி, பாடல்படி | உத்தம சோ. | 973— 988 |
| 4. | டாக்டர். உ. வே. சா. | ஆவின் கொடை என்ற பாடல்படி | 1ஆம் குலோத்துங்கன் விக்கிரம ராஜராஜன் | 1100—1175 |
| 5. | டாக்டர். மா. இராசமா. தமிழமுதம் | பெரும்பாலோர் கொள்கைப்படி | விக்கிரமன் 2ஆம் ராஜராஜன் 3ஆம் குலோத்துங்கன் | 1120—1216 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | சிலாசாசனாதிகள் அபிப்பிராயம் (வ. வே. சு. ஐயர்) | ,, | ,, | ,, ,, |
| 7. | தமிழ் நூல் தமிழ்ச் சரிதை ஆய்வாளர்கள் | ,, | 2ஆம் குலோத்துங்கன் | 1135—1215 |
| 8. | தமிழ்ப் புலவர் புராணம் | ,, | ,, | ,, ,, |
| 9. | செந்தமிழ் 3ஆம் தொகுதி | ,, | ,, | ,, ,, |
| 10. | செந்தமிழ் 52ஆம் தொகுதி | ஆவின் கொடை | 2ஆம் ராஜராஜன் | 1146—1163 |
| 11. | எஸ். வையாபுரி கம்பனும் சடையனும் | ,, ,, | 3ஆம் குலோத்துங்கன் | 1150—1196 |
| 12. | பிரதாபருத்திரன் காலம் சில நூல் | பிரதாபருத்திரன் பாடல் | ,, | 1162—1196 |
| 13. | தமிழ்ப் புலவர் அகராதி | பெரும்பாலோர் கொள்கைப்படி | ,, | 1178—1216 |
| 14. | இராகவையங்கார் உ. வே. சா. கம்ப இரா. | தியாகவிநோதன் பாடல் | ,, ,, | ,, ,, ,, ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 15. | கண்ணப்ப முதலி கட்டுரைக் கதம்பம் | பெரும்பாலோர் கொள்கைப்படி | ,, | ,, ,, |
| 16. | சரஸ்வதி பாண்டு ரங்கன் | ,, | ,, | ,, ,, |
| 17. | ஊரும் பேரும் | ,, | ,, | ,, ,, |
| 18. | தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் | திருக்கோடிக்கா கல்வெட்டு | 1ஆம் குலோத்துங்கன் | 1070—1120 |
| 19. | பிற்காலச் சோழர் ஆட்சியும் இலக்கிய வளர்ச்சியும் | பெரும்பாலோர் கொள்கைப்படி | 3ஆம் குலோத்துங்கன் | 1178—1216 |
| 20. | தனிப்பாடல் திரட்டுகள் | ,, | ,, | ,, ,, |
| 21. | வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரி | ,, | ,, | 1185—1216 (13 நூ) |
| 22. | அபிதான சிந்தாமணி | ,, | 3ஆம் ராஜராஜன் | 1216—1246 (13 நூ) |
| 23. | எம்.ஏ. தமிழ்ப் பாடநூல் | ,, | — | 9—12 நூ |
| 24. | தமிழ் நாடு அரசு பாட நூல் நிறுவன தமிழ் நூல்கள் | — | — | 12 நூ |

# 20. ஆராய்ச்சியாளர்களின் கம்பர் காலமும் மன்னர்களும்

கி. பி. 941இல் பராந்தகன் ஈழத்தை வென்றான். இராமனுக்கடுத்து வென்றமையால் சங்கிராமன் என விருது பெற்றான். தில்லைத்தானம் மகர மண்டப கல்வெட்டு.[1]

புதுச்சேரி திருபுவன மாதேவி சதுர்வேதி மங்கலம் வீர நாரண விண்ணகரம், வளவன், மாதேவி சதுர்வேதி மங்கலம்.

இருமடி சோழன் என்ற பராந்தகன் ராஷ்டிர கூடரை வென்று வீர விருது பெற்றான். உத்திரமேரூர் கல்வெட்டு இவனாட்சி கூறும்.[2]

கி பி. 949-இல் கன்னரத்தேவன் ராஷ்டிரக்கூடர் மீண்டும் படையெடுத்து காஞ்சி அடுத்த தக்கோலத்தில் ராஜாதித்தனைக் கொன்று சோழ மண்டலத்தில் நுழைந்து தாகச் சோழ மண்டல கல்வெட்டு கூறும். ராஷ்டிரக்கூட பூதுகனால் விடப்பட்ட அம்பு யானை மீதிருந்த ராசாதித்தன் மார்பைத் துளைத்தது. ராசாதித்தன் வீர மரண மடைந்தான்.

வீரமரணமடைந்த ராசாதித்தன் படைத்தளபதியான வள்ளன் குமரன் என்பவன் சேரநாட்டு இளவரசியான

ராசாதித்தன் தாய் செல்வாக்கால் இங்கு வந்து படைத் தளபதியாய் இருந்து ராசாதித்தன் இறந்த பிறகு மன மாற்றம் கொண்டு திருவொற்றியூர் சதுரானனப் பண்டித ரிடம் தீட்சை பெற்று மடாதிபதியானான். (இவன் கம்பரின் மாமனாரை அடுத்து மடாதிபதியின் கீழ் தீட்சை பெற்றதாகத் தெரிகிறது.[3])

## கண்டராதித்தன் 950—955

பராந்தகனின் 2 ஆம் மகன் ''ஈசன் கழல் ஏத்தும் செல்வமே செல்வம்'' என்றும் ''சிவஞான கண்டராதித்தன்'' எனவும் சாசனம் கூறுகிறது. இவன் பாடிய திருவிசைப்பா 9 ஆம் திருமுறையில் போற்றப்படுகிறது. காரார் சோலைக் கோழி வேந்தன் தஞ்சையர் கோன் கலந்த ஆரா இன்சொல் கண்டராதித்தன்'' என்ற பாடல், கொள்ளிடம் வடகரை கண்டராதித்தம் என்றும், தென்னாற்காடு திருக்கோவிலூர் வட்டம் கண்டராச்சபுரம், (எம். இ. ஆர். 1934-35 சாசனம்) இவன் பெயரால் விளங்கும் கண்டராதித்தமங்கலம் (356 of 1917) சிவஞான கண்டராதித்தம் (தமிழ் சாசன கவி சரிதம் பக். 37) இவன் மனைவி செம்பியன் மாதேவியர் திருப்பணி யாகத் தஞ்சையில் கைலாசநாதர் ஆலயம் கண்டராதித்தம் என்ற நல்லமுடையார் கற்றளி (450 of 1908) இவன் மறுமை சிறப்பாகும். இவனது நினைவு கற்றளி கண்டராத்திம் ஆகும்.

## அரிஞ்செயன் 956—957

இவன் கண்டராதித்தன் தம்பி. இவனுக்கு அரிந்தமன், அரிகுலகேசரி என்றும் பெயர். அரிஞ்செயன் வீரபாண்டிய தலை கொண்டான் திருவல்லம்பாடியில் அரிஞ்சயேச்சுரம் இவனது பள்ளிபடையாகும்.[3]

இவன் இரண்டொரு ஆண்டுகளே அரசாண்டான். கண்டராதித்தன் காலத்திலேயே தொண்டை மண்டலம் தோற்றுச் சோழராட்சி சுருங்கிவிட்டது — சதாசிவ பண்டாரத்தார்.

கம்பராமாயணம் பில நீங்குபடலம் "புலி புகழ் சென்னிபேர் அமலன்." என்பது அரிஞ்சயனையே கம்பர் குறித்தார் என்று சதாசிவ பண்டாரத்தார் கூறியுள்ளதாக தமிழ்தாத்தா உ.வே.சா.தான் வெளியிட்ட யுத்தகாண்டம் பக்கம் 324இல் குறிப்பிடுகிறார். பேரமலன், பேரபயன் இவ்வீரப் பெயர் சொற்கள் எந்த ஒரு சோழனை மட்டும் குறிப்பதாகாது எனப் பேராய்வாளர்கள், சில சாசனாதிகளைக் கொண்டு நிரூபணம் செய்துள்ளனர். எனவே இப்பாடலைத் தவிர வேறு ஆதாரம் இல்லாதவரை இது கம்பர் காலம் ஆகாது.

## சுந்தர சோழன் 957—973

இவனுக்கு 2ஆம் பாரந்தகன், மதுராந்தகன் என்ற பெயரும் உண்டு. இவனாட்சியில் இவன் மகன் 2ஆம் ஆதித்தன் கூடவே இளவரசாயிருந்து போர் செய்வதில் வீரனாக, பெருமல்லனாக விளங்கி "கோக் கொண்டானாயினான்." பாண்டியனை வென்று நூற்றுக்கணக்கான, யானைகளைக் கொன்று அவனுக்குத் துணை வந்த 4ஆம் மஹிந்தனை விரட்டிச் சென்று இலங்கையைக் கைக்கொண்டான். ஆனால் இவன் படைத்தளபதி மாண்டான். தொண்டை மண்டலம் வந்து வடக்கே சென்று வாகை சூடுகையில் உத்தமசோழன் சூழ்ச்சியால் 2ஆம் ஆதித்தன் மர்மமாகக் கொலை செய்யப்பட்டான். இதே வருத்தமாக, பின் சுந்தரசோழன் காஞ்சியில் பொன்மாளிகையில் "துஞ்சியவன்" எனப்பட்டான். மன்னனைப் புகழும்போது அவன் முன்னோரையும் புகழ்வது போன்று—

வீரசோழிய உரையாசிரியர் சுந்தரசோழனுக்குப் புகழ் மாலை சூட்டியுள்ளார். பௌத்தர் சங்கத்திற்கும் இவனுக்கும் தொடர்பு உண்டு.[5]

இவன் இறந்தபோது இவனது மகள் குந்தவை, மகன் முதலாம் ராஜராஜன் (தஞ்சை பெரிய கோயில் கட்டியவன்) இரு குழந்தைகளை விட்டு இவன் தேவி உடன்கட்டை ஏறினாள். பின் நாளில் ராஜராஜன் தந்தை கோயிலில் இவள் பிரதிமங்களை வைத்தான்.[6]

## 2ஆம் ஆதித்தன் கி.பி. 966—969

சுந்தரசோழன் மகன் இளவரசனானவன் போரில் நூற்றுக்கணக்கான யானைகளைக் கொன்று பாண்டியன் தலை கொண்டான். இவனுக்குக் கரிகாற்சோழன், பாண்டியன், முடி கொண்ட சோழன், திருமுனைப்பாடி, தொண்டை நாடுவென்று கோவிந்தராசமாராயர் 2ஆம் பரகேசரி விருது ஆகியன பெற்றான். இவனைச்சேக்கிழார் பாடியதாக மது ச. விமலானந்தம் இலக்கிய வரலாறு கூறுகிறது. கி.பி. 969இல் உத்தம சோழனால் 2ஆம் ஆதித்தன் கொலை செய்யப்பட்டான்.

திருத்தொண்டத் திருவந்தாதியில் :

''சிங்கத் துருவினைச் செற்றவன் சிற்றம்பலமுகடு'' அதாவது பொன்னம்பலத்துப் பொன்வேய்ந்தான் என மேற்கண்ட பாடலை நம்பியாண்டார் நம்பி பாடியுள்ளார். இப்பாடலை முதலாம் ஆதித்தனைப் பாடியதாகச் சிலர் குறிப்பிடுகின்றனர். அது பொருத்தமன்று. முதலாம் ராஜராஜன் காலத்தில் சிதம்பரத்தில் இருந்த திருவிசைப் பாக்களைத் ''தேவாரமாக நம்பியாண்டார் நம்பி தொகு தார் என்பது வெளிப்படை. எனவே இவர் நூற்றுக்

மேற்பட்ட ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருந்தால்தான் இது சாத்தியம். ஆகவே 2ஆம் ஆதித்தனைப் பாடினார் என்பதே பொருந்தும்.

## உத்தம சோழன் 973-988

இவன் கண்டராதித்தன் மகன். இவனது செப்பேடு [7] கி.பி. 984-985 இவன் பெயர் பொறித்த நாணயம் ஒன்றும் சென்னை பொருட்காட்சியில் உள்ளது. இவனுக்கு விஜய மங்கலத்துக் கோயிலைக் கற்றளியாக்கினான். 'விக்ரம சோழமாராயன், மும்முடி, ராசராச பல்லவராயன் விருதுகள் உண்டு.

''உத்தமராயன் சொரப்பையர்'' என்ற கன்னட இளவரசி இவன் பட்டத்தரசியாவார். நன்னிலம், சிதம்பரம் மதுராந்தகம், சேலம் ஆகிய இடங்களில் உத்தமசோழபுரம் என்று இவன் பெயரால் ஊர்கள் உள்ளன. மதுரை வீர பாண்டியன் தலைகொண்டான். இவனுக்கு மதுராந்தகன், கண்டராதித்தன் என்ற ஒரு மகன் உண்டு. [8] இவன் முதலாம் ராசராசனின் அரசு பொறுப்பில் இருந்தான். இவனைப் பற்றி வேறு குறிப்பு இல்லை.

உத்தமசோழன் காலத்தைக் கம்பர் காலமாக, ''புகழ் சென்னி பேர் அமலன்'' பில நீங்கு படலம் முன் சொல்லிய அதே பாடலை மேற்கோள் காட்டி அமலன் பரியாயப் பேர் என்றும், அது உத்தம சோழனைக் கம்பர் குறித்ததாகவும், காப்பிய அகச்சான்று அடிப்படை கூற்று, என ''அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு சுந்தர காண்ட முன்னுரை'' கூறுகிறது. கம்பனும் சடையப்பனும் என்ற மது நூலில் ராமசாமிப் புலவரும் குறிப்பிடுகிறார். இது ற்றி முன்னமே சாசனாதிகள், ஆராய்ச்சியாளர்கள் ஏற்க ல்லை என்பதறிந்தோம்.

அடுத்து முதலாங் குலோத்துங்கன் (1070—1118) காலத்திலிருந்து அனைத்துச் சோழராட்சியிலும், கம்பர் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. பலரது கம்பர் காலக் கொள்கைகளை, அறிஞர் பெருமக்களது குறிப்புகளைக் கொண்டே, கம்பர் வாழ்ந்த காலம், அச்சோழர்கள் காலத்தில் இல்லை, எனச் சான்று கொண்டு நிருபணம் செய்துள்ளோம்.

இடையே உள்ள முதலாம் ராசராசன் 988-1014
முதலாம் ராசேந்திரன் 1012-1044
முதலாம் ராசாதிராசன் 1018-1054
2 ஆம் ராசேந்திரன் 1051-1063

இச்சோழ மன்னர்கள் காலத்தில் கம்பர் காலம் என்று யாரும் குறிப்பிடவில்லை, என்பது தெளிவு. என்றாலும் இடைக்கால சோழராட்சியில் நாம் அனைத்துச் சோழர் களையும் ''கம்பர்கால ஆய்வில்'' காண்பதால் இவர்களைப் பற்றியும் முக்கிய செய்திகளைச் சுருக்கமாக முறையே கண்டு செல்வோம்.

## முதலாம் ராசராசன் 988-1014

சுந்தரசோழன் மகள் குந்தவை. இவன் உடன் பிறந்தாள். இவனது கீர்த்தி உலகளாவியது. மும்முடி, இராசகேசரி, ஜெயங் கொண்டான். சோழ மார்த்தன், பாண்டிய குலாசனி, கோளாந்தகன், சிங்களாந்தகன், தெலுங்கு குலகாலன் என்று விருது பெயர் கொண்டவன். கடற்படை கொண்டிருந்தான்.

மேற்கண்ட நாடுகளைக் கைக் கொண்டான். கங்கைபாடி, கொல்லம், கலிங்கம், குடகும், வேங்கியும் இவனாட்சிப் பரப்பாகும். தன் மகளை வேங்கி மருமகளாக் கினான். இராமன் குரங்குகளைக் கொண்டு இலங்கையை

வென்றான் என்றும், தான் எரியூட்டி ராமனை விஞ்சினவனாகவும் கருதினான். இலட்சம் படை வீரர்களுண்டு, முன்னர் பழந்தீவுகள் பன்னீராயிரம் வெற்றி கண்டு பேரரசனானான். வெளிநாட்டில் இவனது தூதுகள் சென்றன. இவன் மகன் போரில் சிறந்து மகாதண்ட நாயகன், பஞ்சவன், மாராயன், கங்கை மண்டல தண்டலன் என்று போற்றப்பட்டான். இரட்டைபாடி, ஏழரை இலக்கமும் எரியூட்டி அழித்தான்.

இவன் கட்டிய தஞ்சைப் பெரிய கோயிலுக்கு இலங்கையின் சிற்றூர்களைத் தானமாக்கினான். அங்கும் இராஜராஜேஸ்வர சிவாலயம் கட்டினான். தேவாரம் திவ்விய பிரபந்தம் ஓதுதற்கு ஒழுங்கு செய்தான். இவன் தாய் தந்தையர்க்கு அரிஞ்ச யேச்சுரமும், திருமுக்கூடலில் பெரு மண்டபமும் கட்டினான். சிவத்தொண்டு மிக்க இவனால், தொண்டைமான் தில்லையில் சேமித்திருந்த திருவிசைப் பாக்களை நம்பியாண்டார் நம்பி எடுத்து "தேவாரம்" தொகுத்தார். இவனது வெற்றியும் சிறப்பும் நீண்டவை.

இராச ராசனுடைய அரசு அலுவலராக மணியனாக — ஒருவன் கம்பன் என்ற பெயர் கொண்டிருந்தான் இவனது சிற்றரசர்களில் ஒருவனும் கம்பன் பெயர் கொண்டிருந்தான். கவிச்சக்கரவர்த்தி கம்பர் காலத்திற்குப் பிறகுதான் இந்தப் பெயர் சொற்கள் சிலருக்கு வைக்கப்பட்டன என்பதற்கு இவர்களே சான்றாகும்.

## முதலாம் இராசேந்திரன் 1012-1044

இவன் இராசராசன் மகன், போர் வலிமை கடல் கடந்த நாடுகளிலும் பரவியது. அவையாவன; வனவாசி, வங்கம், கடகம், கடாரம் ஈழம், கன்னோச்சி போன்றவை.

சக்கரவர்த்தியானான். (பிற்கால சோழராட்சி) வனவாசி யும் கோசலையும் வென்று, மகிபாலன் தலையில் கங்கை நீர் கொணர்ந்து "களிறு கங்கை நீருண்ணி" செய்து கங்கைக் கொண்ட சோழனானான். இவன் கங்கை கொண்ட சோழ புரங்கட்டி சோழேசுர ஆலயம் கட்டினான். கரு வூரார் இதைப் பாடியுள்ளார்.

இவனது சைவாசிரியர் சர்வ சிவ பண்டிதர்; லகுலீச பண்டிதரையும் ஆதரித்தான். 1044இல் காலமானான், மனைவி வீரமாதேவி உடன் உயிர் துறந்தாள். சீனத்துக்குத் தானாதிபதியை அனுப்பினான். இவன் காலத்தே, கி. பி. 1031, மார்ச் 4ந் தேதி ஹர்ஷர், விக்ரம, சா லிவாகனா, கலி ஆகிய சகாப்த்தம் தொகுக்கப்பட்டன.[9]

## முதலாம் இராசாதிராசன் 1018-1050

இவன் இராசேந்திரன் மகன். தந்தையின் 6ஆம் ஆண்டில் இளவரசனாகி, பல வகையிலும் சிறந்து விளங்கினான். இவனே "இமயத்தில் புலிக்கொடி" பொறித்தவன். குல்பார்க் கோட்டையும் கலியாணபுரத் தையும் எரியூட்டி, மாளிகைகளைத் தகர்த்தான். கலி யாணபுர துவார பாலர் சிலைகளைக் கொண்டுவந்து அத னடியில் இதனைத் தமிழில் பொறித்தான். வேங்கியை யும் ஈழத்தையும் சோழராட்சியாக்கினான். கலியாண புரங் கொண்ட சோழன், ஆகமமல்லன், குலாந்தகன், உலகளந்த சோழன் என விருது பெற்றான். 1052இல் காஞ்சி வரை சாளுக்கிய படை வந்தது. மைசூர் போரி னால் ராசாதிராசன் கொல்லப்பட்டான். (செந்தாமரை தொகுதி 7) இவன் தம்பி இராசேந்திரன் துணைப் புரிந் தும் விழுப்புண் பட்டு வீழ்ந்தான். கொப்பம் போரில் 2ஆம் ராசேந்திரன் முடிசூடினான்.

## 2ஆம் இராசேந்திரன் 1051-1063

இவனுக்குத் திறை செலுத்த மறுத்த கோலாப்பூரின் மேல் படையெடுத்தான். இவன் சாளுக்கியரோடும் போர் செய்தான். திருவரங்க மாடவீதியை ராசமகேந்திரன் வீதியென இவன் சமைத்தான். (கோயில் வரலாறு). இவனது மகனுக்கு கி.பி. 1054இல் இளவரசு பட்டம் சூட்டிய பின் இறந்து போனான். இவனது தம்பி வீரராசேந்திரன் கி.பி. 1063-1070 முடிசூடினான். கி.பி. 1051இல் பரஞ்சோதி மகான் திருவிளையாடல் புராணம் இயற்றினார். 1056இல் ஈழத்தில் படையெடுத்து மஹிந்தனைச் சிறை பிடித்தான். கி.பி. 1042-70 வரை சோழராட்சியில் குழப்பம். 28 ஆண்டில் 5 சோழராட்சிகள் நடைபெற்றன.[10]

## வீரராசேந்திரன் கி. பி. 1063-1070

இவன் கங்கை கொண்ட சோழ மன்னன் மக்களில் ஒருவன். 1064இல் சாளுக்கிய ஆஹவமல்லன் மகன் விக்கிரமாதித்தனோடு கூடலம் என்னுமிடத்தில் கடும்போர் செய்தான். எதிர் நிற்க இயலாது தோற்று, புறங்காட்டி ஓடிவிட்டனர். வீரராசேந்திரன் வெற்றியுடன் விசயாபிடேகஞ் செய்து கொண்டான். இவன் பெரும் வீரனாதலால் தமையனைப் போல் ஆட்சிக்காலம் முழுதும் போரிலேயே கழித்தான். தன்னிடம் சரணடைந்த சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்குத் தன் மகளை மணமுடித்தான். இவன் முன்னோரைப் போல் சிவபக்தன். தமிழ்ப் புலமை வாய்ந்தோன். புத்தமித்திரர் இவனாட்சியில்தான் வீரசோழியம் இயற்றினார்.[11]

இந்த வீர சோழியத்திற்கு உரை எழுதியவர் இவரது மாணாக்கர் பெருந்தேவனார்[12] "கம்பரிடையே பெருமை

யுளது'' என்று எழுதிய வீரசோழிய உரையாசிரியர், இவரேயாகும். இவரது காலம் கி.பி.11 ஆம் நூற்றாண்டு பிற்பகுதியும் 12ஆம் நூற்றாண்டு முற்பகுதியுமாகும்.

இவனே கடாரம் கொண்டான், கப்பற்படை கொண்டு காழகம் என்னும் கடாரம் நாட்டை வென்று இவ்விருது கொண்டான். இவன் பெயரால் மாயவரத்தில் 'கடாரங் கொண்டான்' ஊர் விளங்கிவருகிறது. கடாரங் கொண்ட சோழபுர சாசனம் கூறும். [13]

இந்த வீரசோழன் காலத்தில் கம்பர் வாழ்ந்த தாகத் திருமணம் கேசவராயர் குறிப்பிடுகிறார் சக. 985 கி.பி. 1063 என்று இதற்கு ஆதாரமாகப் புறச்சான்று தனிப் பாடல் மூன்று,

1. **அடைந்தாரைக் காக்கும் அகளங்கா**
   **நடந்தாயோ நாலாறு அடி** —கம்பர்

2. **பாடும் புலவர் ஒட்டக்கூத்தன் பாதாம்புயத்தைச்**
   **சூடும் குலோத்துங்கன்** —விக்கிரமசோழன்

3. **அழியும் சிலையும் கயலும் என்றால்**
   **அகளங்கா துங்கா** —புகழேந்தி

எனக்குறிப்பிட்டுக் கம்பர், விக்கிரமசோழன், புகழேந்தி, ஒட்டக்கூத்தர் இவர்கள் காலம் கம்பர் காலம் எனக் கூறப்படுகிறது. [14] மூவர் பாடல் குறிப்பதால் இது சான் றாகாது என்பதைக் காண்க. முதலாவ்தாகக் கம்பர் பாடியதாக உள்ள மேற்படி பாடல் கூத்தர் பாடியதாகத் தமிழ் நாவலர் சரிதையும், அபிதான சிந்தாமணியும் கூறுகின்றன. [15]

இரண்டாவதாக, ஒட்டக் கூத்தர் பாதாம் புயத்தை விக்கிரமன் பாடியது. அவன் காலம் [1118-1135-இல்]

மூன்றாவதாக, புகழேந்திபாடியது 13ஆம் நூற்றாண்டில் இவை மூன்றும் 1063, வீரராஜேந்திரனை எப்படிக் குறிக்கும்?

அகளங்கன் என்பது சோழனை மட்டும் குறிக்காது. ஒரு முனிவரையும் குறிக்கும்[16] எனவே இது ஏற்புடையது அல்ல; மேற்படி பாடல் கம்பர் பாடலும் அல்ல. புகழேந்தி, கூத்தர் காலமாகக் கருதப்பட்டாலும், அக்காலம் விக்கிரமனின் காலமாகும். எனவே இவை பொருந்தவில்லை.

பொருந்தக் கூறுவதாயின் 1063 முதல் 1135 வரை, நான்கு சோழர்கள் ஆட்சியில் கம்பரும் கூத்தரும் புகழேந்தியும் வாழ்ந்ததாகக் கூறப்பட வேண்டும். இவை சரியல்ல.

வீரசோழிய உரையாசிரியர் காலத்திற்கு முற்பட்டது கம்பர் காலம் எனக் குறுப்பிடுகிறது.[17] புலத்திரட்டு, கம்பர் காலம் 10ஆம் நூற்றாண்டுக்குமுன் என்கிறது.எனவே கம்பர் காலம் வீரராசேந்திரன் காலமாக உறுதிப்பட ஏதுமில்லை என்பது தெளிவு. இவனது கீர்த்தி, சகலபுவனாசிரியன், மேதினி வல்லபன்,மகாராசிசாதிராசா,'ராசாசிரியன்,வல்லப வல்லவன், வீரசோழன், கரிகாலன். இவன் கி. பி. 1064இல் மதுரை பாண்டியனை வென்று தனது தம்பி கங்கை கொண்டானுக்குப் பட்டஞ்சூட்டிச் சுந்தரப் பாண்டியனாக்கினான்.

தில்லை ஆடவல்லார்க்கு அணி முடியாய் மதிப்பற்ற மாணிக்கமணி புனைந்தான்.[18] இவன் வீரக் கொடியும் தியாகக் கொடியும் நாட்டி ஆண்டான்.

## ஆதிராசேந்திரன் 1067-1070

இவன் பட்டத்திற்கு வந்தபோது நாட்டில் பெருங் குழம்பம் ஏற்பட்டு அதனால் ஓர் ஆண்டுக்கால ஆட்சியில் இவன் கொல்லப்பட்டான்.[19]

வலங்கையினர்க்கும் கைகோளர்களுக்கும், உரிமை விருதுகளுக்காகப் பெரும்பூசல் ஏற்பட்டுச் சில குலத்தினர் ஒன்றுகூடி "அரசியலும் அரசுரிமைப் போராட்டத்திலும் தலையிட்டனர் எனக் கல்வெட்டு கூறுகிறது. அதில் "கம்பரின் உவச்சர் குலத்தினரும்" குறிக்கப்பட்டுள்ளனர். கம்பரைப் பற்றி ஏதுமில்லை.

## முதல் குலோத்துங்கன் 1070-1118

இவன் கங்கை கொண்டான் மகள் பெற்ற வேங்கி நாட்டு ராசராச நரேந்திரன் மகனாவான். வீரராசேந்திரனின் மைத்துனனும் ஆவான். இளைய வயதில் முடிசூடினான். அம்மானோடு மேலை சாளுக்கிய போர்களில் சிறந்து விளங்கினான்.

பின்னர் வனவாசி, கலியாணபுரம் வென்றான். பாண்டியனை எதிர்த்துக் கன்னியாகுமரி, கோட்டாறும் வென்றான். சேரர் கலங்களை இருமுறையறுத்தான். தென், வடகலிங்கப் போரில் வெற்றி கண்டான். 1084-இல் சக்கரவர்த்தியும் 1090-இல் திரிபுவன சக்கரவர்த்தியும் விருது கொண்டான். விஷ்ணுவர்த்தனன், குலோத்துங்கன் அநபாயன், அபயன், விசயதரன், சயதுங்கன், திருநீற்றுச் சோழன், கரிகாலன் உலகுய்ய வந்தான் எனப் பெயர்கள் கொண்டான்.

இவன் சுங்கம் தவிர்த்தான். நாடளந்தான். ஆறிலொரு கடமை வரியீட்டினான். ஏரி, கால்வாய்கள் வெட்டினான். காட்டை நாடாக்கினான். ஊர்தோறும் சிவனார் கோயிலெடுத்தான். பூஜை, திருவிழா நடத்தி, பக்தியை உண்டாக்கினான். சைவப்பற்றும் சங்கநூல் கற்றுப் புலமையும் பெற்றான். இசை நூலும் ஆக்கினான்.[20]

—சேக்கிழார் பெரிய புராணம் இவனாட்சியில் செய்தார்.[21]

—ஜெயங்கொண்டார். ''கலிங்கத்துப்பரணி'' பாடினார்.

—கி. பி. 1112-ல் [22]

—கவிகுமுத சந்திரபண்டிதர் குலோத்துங்கன் சரிதை அரங்கேற்றினார்.[23]

இவன் தேவியின் பெயர் ''கம்பதேவி! சிற்றீச்சம் பாக்கம் காஞ்சியடுத்து உள்ள சிற்றுராகும்.[24]

—தெ. ஆ. பிரமதேயத்திற்கும் கம்பதேவி நல்லூரெனப் பெயரிட்டான்.[25]

—சோழராட்சியில் முதலாம் ராசராசனின் சோழ அதிகாரி ஒருவனுக்கும், காவலன் ஒருவனுக்கும் முதலாம் குலோத்துங்கன் தேவிக்கும் கம்பர் பெயர் விளங்கியது சான்றாகும்.

—இவனைப் பற்றி, பிள்ளைத் தமிழில்,

**பாடற்பெரும் பரணீ தேடற் கருங்கவி—சக்கரவர்**
**பரவிச்செஞ்சேகவஞ் செய்த சோழன்—**

—ஒட்டக்கூத்தர்

கலிங்க வெற்றிக்குத் தளபதியான தொண்டைமானைச் சிறப்பித்து,

**வாண்டை வளம்பதி பாடீரே!**
**மல்லையுங் கச்சியும் பாடீரே!**
**பண்டை மயிலையும் பாடீரே!**
**பல்லவர் தோன்றலைப் பாடீரே![26]**

— தவிர லகுலீச பண்டிதரை ஆதரித்தான்.[27]

— தாதன் என்ற புலவருக்குக் கூவம் என்ற ஊரைப் பரிசாக அளித்தான்...[28]

— வடமொழி ஆச்சார்ய தண்டி இம்மன்னனைப் பாடியுள்ளார்.[29]

— கம்பரைப்பற்றி ஒரு குறிப்புமில்லை.

— கி. பி. 1116 மைசூரிலிருந்து சோழராட்சியைப் பிந்துதேவர் அகற்றினார்.

—இந்தச்சோழனின் கொடுமை தாங்காது இராமாநுஜர் கன்னட நாடு பிந்து தேவரிடம் சென்றார்.[30]

— இவர் உபதேசம் பெற்று, பிந்து தேவர் விஷ்ணுவர்த்தன் ஆனார்.

— தில்லையிலிருந்த கோவிந்தராஜப் பெருமாளைப் பெயர்த்துக் கடலில் எறிந்தவன் இவனே.

அப்பெருமாளைக் கடலிலிருந்து எடுப்பித்துத் தருவித்து கி. பி. 1117இல் திருப்பதியில் ஸ்தாபிதம் செய்தவர் இராமாநுஜரே.[31]

— ஸ்ரீராமாநுஜர் காலம் கி. பி. 1017—1137.[32]

## விக்கிரம சோழன் 1118—1135

இவன் முதற் குலோத்துங்கனின் நான்காம் மகன் வேங்கி நாட்டு பிரதிநிதியாக இருந்து அரசேறினான். மேலை சாளுக்கியருடன் போர் செய்து வேங்கி நாட்டையும் சுரங்கபாடி விடுபட்ட பகுதியும் கைக்கொண்டான். இவனது ஆட்சியாண்டு ஆறிலும், பதினொன்றிலும் பெரும்பஞ்சம் மூண்டது. குடிகளுக்குப் பொருளுதவினான். விக்கிர சோழனுலா ஒட்டக்கூத்தர் பாடினார்.[33]

''பாடுங்கவி ஒட்டக்கூத்தன் பாதாம்புயத்தைச் சூடுங் குலோத்துங்கன் சோழனென்றே எனைச் சொல்லுவாரே'' எனப் பாடியவன் விக்கிரம சோழனாகும்.

''கையுமலரடியுங் காணுங் கனிவாயும்
செய்ய கரிய திருமாலே
வையம் அளந்த யகளங்கா ஆலிலை மேல் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தானென்மான்''

இது கூத்தரால் பாடப்பட்டது. [34]

அகளங்கன் - களங்கமில்லாதவன். இவனது 9ஆம் ஆட்சியாண்டில் காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலில் சாசனம் செய்யப்பட்டது.

பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் திருமஞ்சனம் செய்ய நிவந்தம் செய்தனர்.

இவனாட்சியில் தான் வைணவர்களை வரவேற்றுத் திருவரங்கத் திருப்பதியைத் தானமாகத் தந்தான் என்பதற்குச் சான்று உண்டு. திருவரங்க மகாத்மியமும் கூறுகிறது. திருவரங்கத்து இரு வீதியை இவன் சமைத்தான். இவன் பெயரால் வீதி வழங்குகிறது. [35]

கூத்தர் இவன்மீது விக்கிரமசோழனுலாவும் தக்கயாகப் பரணியும் பாடினார். புரவலன் காங்கேயன் மேல் 4000 கோவை பாடினார். [36]

இவனது குறுநில மன்னனாக விளங்கிய காளிங்கராயன் கூத்தர் மீது ''அரும்பைத் தொள்ளாயிரம்'' பாடினார். [37]

இந்தக் காளிங்கராயன் பெயரில் காளிங்கராயன் அக்கிரகாரம் என்ற ஊர் உள்ளது. அது சேத்திர பால

புரம் மூவலூரின் இடையே உள்ளது. (நேரில் சென்று விசாரித்தது).

காவிரி வடகரையில் காளிங்கராயபுரம், இவன் பெயரால் விளங்கி, பிறகு கதிராமங்கலத்தில் அவ்வூர் இணைந்துள்ளது. ''காளிங்கராயன் குதிரை கம்பங்கொல்லையை மேய்ந்ததாகவும் அதை ''வாய்த்த வயிர புர மாகாளியே'' என்ற பாடலில் (பொய்யாமொழிப் புலவர்) ''காளிங்கராயன் குதிரை மாளக் கொண்டு போ'' என்று பாடியுள்ளார். — தமிழ் நாவலர் சரிதை.

இப்பாடலைக் கம்பர் பாடியதாகத் தனிப்பாடலில் வருவது தவறு.

— கி. பி. 1118இல் கம்பர் பிறந்ததாக ஒரு குறிப்பும்,

கி. பி. 1120இல் கம்பர் பிறந்ததாகச் செந்தமிழ் இதழ் ஆண்டுவாரி குறிப்பும் உள்ளது. இவ்விரு குறிப்புகளும் ஆதாரமற்றவை. ஏற்க இயலாது. ''சாசனாதிகளும் பிற ஆராய்ச்சியாளரும் கூடக் கம்பர் இவன் காலத்தில் வாழ்ந்ததாகக் கூறுவார்கள். என்றால் இவனது ஆட்சி காலத்தில் 17 வருடத்தில் கம்பர் பிறந்து, படித்து கம்பராமாயணம் ஒருக்காலும் பாடி இருக்க முடியாது. இக்காலத்தில் ஸ்ரீ ராமாநுஜர் இருந்தார். இந்த மகானைக் கம்பர் பாடாது இருக்க மாட்டார். எனவே கம்பர் அப்போது உயிரோடு இல்லை, என்பது பற்றி ஏற்கெனவே விரிவாக எழுதியுள்ளோம்.

இதுவரை 1063 முதல் 1135 வரை நான்கு சோழ மன்னர் காலத்தில் கம்பர் வாழ்ந்தார், என்பதற்குச் சாத்தியக் கூறு காணப்படவில்லை என்பது தெளிவு.

## 2 ஆம் குலோத்துங்கன் 1135-1150

இவன் விக்கிரமன் மகன். இவன் காலத்தில் வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகள் இருந்ததாகத் தெரியவில்லை. குலோத்துங்க சோழனுலா இவன் மீது கூத்தர் பாடினார். தில்லையில் வீதி சமைத்து பல மண்டபம் கட்டினான். சிற்றம்பலம் பொன் வேய்ந்தான். இவன் பாட்டனைப்போல் பல கலைகளில் தேர்ச்சி பெற்றவன். ஆசிரியரும், அவைப் புலவரும் கூத்தரே. இவரால் பிள்ளைத் தமிழ் பாடப் பெற்றான். புலவர்களை ஆதரித்தான். இவன் சைவ பற்றுடையவன். [38]

சிற்றம்பலம், பேரம்பலம், காமகோட்டம் திருப்பணி செய்தான். தில்லையில் முடிசூட்டு விழா கொண்டான். சைவ வைணவ கலகம் நடந்தது. சேக்கிழாரும், கூத்தரும் இவன் காலத்தில் வாழ்ந்தனர். கூத்தரின் உத்திரகாண்டம் இவனவையில் அரங்கேறியதாகக் கூறுவர். இதனை ஏற்றால் கம்ப இராமாயணம் இதற்கு முன்பே அரங்கேறி இருக்க வேண்டும், அப்படியானால் 3ஆம் குலோத்துங்கன் காலம் எனப்படும். பெரும்பாலோர் கொள்கை அடிப்பட்டுப் போகும்.

கம்ப இராமாயணம் நன்கு கற்றபிறகே உத்தர காண்டம் பாடியதற்கு அகச்சான்று உண்டு.

— சேக்கிழார் கி. பி. 1146 வரை வாழ்ந்ததாகக் கூறப் படுகிறது. சேக்கிழாரைப் பெரிய புராணம் பாட வேண்டி அவ்வாறு பாடி, இவனவையில் அரங்கேற்றினதாகத் தமிழ்ப் புலவரகராதி கூறுகிறது. [39]

கூத்தர் இவனவையில் பல நூல்கள் அரங்கேற்றினார். தொண்டைமான் சேக்கிழார் தம்பியாகும். தக்கயாகப் பரணியில், உறையூர் அழிந்த வரலாறு கூறப்பட்டுள்ளது.

மனுநீதி அரசன் வரலாறு பெரிய புராணத்தில் உள்ளது. இது பற்றிய குறிப்பைத் திருவாரூர் கோயில் கல்வெட்டு மூலம் சேக்கிழார் அறிந்தார். கல்வெட்டுக் குறிப்பு உள்ளது — நேரில் கண்டோம்.

இதே அவையில் பெரியபுராணம் பாடி இருந்தால் கூத்தர் தமது நூலில் அதைக் குறித்திருப்பார். அவ்வா றில்லாமையால் சேக்கிழார் இதற்கு முன்னமே பாடி இருந்தல் வேண்டும் என்பது சிலர் கருத்து.

ஸ்ரீராமானுஜர் 1137இல் பரமபதம் அடைந்தார். கம்பர் இக்காலத்தில் உயிருடன் இல்லை, இருப்பின் அவர் இராமா னுஜரைப் பாடி இருப்பார்.

இவன் காலத்தில் கூத்தர் தக்கயாகப் பரணி, ஈட்டி எழுபது பாடினார். நேமிநாதர் இவனவையில் ''நேமி நாதம்'' பாடினார் என்று தமிழ் நாவலர் சரிதை கூறு கிறது. ஆனால் இராமாயணம் பாடியதாக எங்கும் கூறப் படவில்லை.

ஆனால், தமிழ், தண்டியலங்காரம், அதன் ஆசிரியரால் இவனவையில் அரங்கேறியதாகவும் கூத்தர் உரை மேற் காட்டியுள்ளார். இந்தத் தண்டி அம்பிகாபதி மகனாக இருக்க முடியாது.

— வடமொழிப் புலவர், தண்டியின் காவியாதர்சனத் தைத் தமிழில் தண்டியலங்காரம் என இவனாட்சியில் மொழி பெயர்க்கப்பட்டது. [ஈ0]

## இரண்டாம் இராசராசன் 1146-1163

இவன் முன்னவன் மகனாகும். இவனைப்பற்றி அதிக மாக ஒன்றும் காணவில்லை. இராசராசசோழனுலா கூத்தர் பாடிய நூல் வழங்குகிறது.

வட, தென் மொழிப் புலமைப் பெற்றவன். தந்தை போல் சிவப்பற்றுக் கொண்டவன். இவனாட்சியில் போர் நிகழ்ந்ததாகத் தெரியவில்லை. இவன் காலத்தில் மலைய மலை பக்கத்தில் காவிரிக்கு வழிகண்டான். இராசராசே சுரம் கட்டினான். கண்டன் என்பது இவனது சிறப்புப் பெயர்.

இவனது இறுதிக் காலத்தில் இவனது மக்கள் இருவரும் குழந்தைகளானதால் உறவினர் புதல்வன் எதிரிலிப் பெரு மாளை வருவித்து முடிசூட்டி இறந்தான்.

அமைச்சர் தலைவன் திருச்சிற்றம்பல முடையான் அந்தப்புர மகளிரையும், குழந்தைகளையும், இராசராச புரத்து அரண்மனையில் பேணிக் காத்தான்.

## 2 ஆம் இராசாதிராசன் 1163—1178

இவன் விக்கிரமனுடைய பேரன். நெறியுடைய பெரு மாளின் மகனாவான். இவனாட்சியில் பாண்டிமன்னரி டையே பகைமூண்டு போர் நடந்தது. இராசாதிராசன் குலசேகர பாண்டியனுக்கு உதவினான். பராக்கிரம பாண்டியனுக்குத் துணைவந்த சிங்கள பராக்கிரமபாகு வெற்றி கண்டான். சிங்களன் வெற்றியைக் கண்டு மக்கள் அஞ்சினர். இராசாதிராசன் திருச்சிற்றம்பல முடையார் தலைமையில் படையனுப்பிப் போரிடப் புறம்காட்டி ஓடினான். சிங்களப் படைத் தலைவர் இருவர் தலையை வெட்டி மதுரைக்கோட்டையில் தொங்கவிட்டான். மதுரை யும், ஈழமும் கொண்ட ராசகேசரி வர்மனானான். இது கண்டு சிங்களன் போர் தொடுத்தான். படுதோல்வி கண்டு நட்புறவு கொண்டான். தொண்டைநாடும், பாண்டிய நாடும் கைக்கொண்டான். குலசேகரன் நன்றி மறக்கவே அவனை நீக்கி பராக்கிரமபாண்டியன் மகனை அரசேற் றினான்.

## 3 ஆம் குலோத்துங்கன் 1178—1218

இவன் 2-ஆம் ராசராசன் மகனாவான். இவன் பாண்டியரை மும்முறை வென்றான். வீர பாண்டியனின் பட்டத்தரசியைச் சிறைப்பிடித்து வேளம் ஏற்றினான். பின்னர் ஈழம், கொங்கு, வடநாடு வெற்றி கண்டான். 3 ஆம் முறையாகவும் விக்கிரம பாண்டியனை வென்றான். சோழபாண்டியன் எனும் விருது கொண்டான். பாண்டிய நாட்டிற்குச் சோழபாண்டிய மண்டலமென்றும் மதுரைக்கு முடிதலை கொண்ட சோழபுரம் என்றும் பெயரிட்டான். திருபுவன சக்கரவர்த்தி, வீரமல்லன் போன்ற விருது கொண்டவன். ''தியாக வினோதன்'' என்று இவனைக் கம்பர் குறித்ததாகப் பலர் கொள்கை. கொங்கு நாடு, சேரநாடு, பாண்டிய நாடு, சோழ நாடு· கங்கநாடு, தெலுங்கு நாடு இவனாட்சிக்கு வந்தது. இவனும் சைவ பக்தன். ஆலயங்களுக்குப் பொன் வேய்ந்து திருவீதி சமைத்தான். கோபுரம் கட்டிச் சிறப்பித்தான்.

இவனவைப் புலவர்கள், வீராந்தப் பல்லவரையரும், நேமிநாதரும் (நேமிநாதர், ''வச்சணந்தி மாலை'' என்ற இலக்கண நூல் செய்தார்.) பவணந்தி முனிவரும் இவனாட்சியில் விளங்கினார்.

இவனாட்சியில் மகாபாரதம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. சேக்கிழார் அமைச்சராயிருந்தார். திருத்தொண்டர் புராணம் பாடுவித்தான். அரங்கேற்றினான்.

ஒட்டக்கூத்தர் உயிருடன் இருந்த காலத்தில் சுமார் 1178-இல் கம்பர் தமது இராமாயணத்தைப் பாடினார். என்பது பெரும்பாலோர் கொள்கை. மு. இராகவையங்காரும் குறிப்பிடுகிறார்.[41] ஆனால் கூத்தரோ, கம்பரோ இக்காலத்தில் உயிருடன் இல்லை என்பது விளங்கும்.

இவனது மகளை மணந்த ''ஏழிசைமோகன் மணவாளப் பெருமாள்'' என்ற பல்லவனால் பிற்காலத்தில் சோழ நாடு அழியக் காரணமாயிற்று. இவன் 1218இல் இறந்தான்.

## மூன்றாம் இராசராசசோழன் 1216-1256

இவன் முன்னவனின் 3ஆவது மகன். இவன் ஆட்சியில் நாடு துன்புற்றது. சீரும் சிறப்பும் இழந்தது. ஆண்மையும், வீரம் குன்றி வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்தது. சிற்றரசர் கள் உள்நாட்டுக் கலகம் செய்து திறை செலுத்த மறுத் தனர். நாடு தனித்தனி அரசானது.

தெற்கே பாண்டியரும் வடக்கே ஹொய்சாலரும் தங்கள் அரசமைக்கத் தொடங்கினர். சுந்தரபாண்டியன் 1116-இல் பாண்டிய நாட்டில் முடிசூடினான்.

3ஆம் குலோத்துங்கனால் ஏற்பட்ட இடுக்கண்களை மனத்திற் கொண்டு போரிட்டுத் தஞ்சை உறையூரைத் தீக்கிரையாக்கினான். மாடமாளிகை கோபுரம் இடிக்கப் பட்டன. சோழநாடும் மக்களும் துன்புற்றனர். ராச ராசன் நகரை விட்டு ஓடி ஒளிந்தான். இவன் காலத்திலும் கம்பர் வாழ்ந்ததாய் அபிதான சிந்தாமணியில் ஒரு குறிப்புள்ளது. பின்பு பாண்டியனுக்குத் திறை செலுத்தும் சிற்றரசனானான். இவனுக்குப் பின் மூன்றாம் இராசேந் திரன் ஆறாண்டு ஆட்சி செய்து அத்துடன் சோழராட்சி மறைந்தது.

வரலாற்றுக் குறிப்புகள் அவ்வளவும் நம்பத்தக்கன அல்ல. கல்வெட்டுகள் அவ்வப்போது பிற்காலத்தில் மாற்றி அமைக்கப்பட்டதுண்டு. அவற்றுக்குப் புதுபடி யொன்று எடுத்து அமைக்கப்பட்டதுண்டு. இந்நிலையில் கல்வெட்டுச் செய்திகளை மட்டும் கொண்டு திட்டமாக வரலாறு வகுக்க முயல்வது, சேற்றிலிட்ட தூண்போலாகும்.

இவ்வாறு சென்னை கோட்டைத் தொல்பொருள் ஆராய்ச்சித்துறை கூறுகிறது.

இவற்றைக் கருத்திற்கொண்டு முன்பின் ஆய்ந்து வேறு தக்க ஆதாரங்களைக் கொண்டுதான் வரலாறு நிர்ணயிக்க முடியும் எனத் தெளிவாகிறது.

**''ஒரு செப்பேடு'' உதாரணம்**

கருத்தடக்கண் செப்பேடு கி. பி.868, அதில் பொறிக்கப் பட்டுள்ள எழுத்துகள் ராசராசன் (988—1012) காலத்தியது. வட்டெழுத்தாயின் அது கருந்தடக்கணுடையதே, எனவே இராசராசன் காலத்தில் கருந்தடக்கண் என்ற பெயரில் வேறு ஒரு மன்னனைப் பொறித்திருக்கலாம்.

(தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்)

எனவே, சென்னி, தியாகவிநோதன், பேரமலன் (பேரபயன்) தியாகக்கொடி, வீரக்கொடி, இவை எந்த ஒரு மன்னனையும் குறிக்காது. ''இப்பெயர்களைக் கொண்டு கூறப்பட்ட முன் கண்ட சோழர் காலத்தில் வேறு சான்று இல்லாதவரை அவர் காலத்தில் கம்பர் வாழ்ந்திருக்க வில்லை என்பது திண்ணம். பத்தாம் நூற்றாண்டின் இடையிலிருந்து பதிமூன்றாம் நூற்றாண்டு வரை (952-1246 கம்பர் காலமில்லை என்று அறிந்தோம். எனவே கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டுதான் என்பது திண்ணம்.

# 21. கம்ப நாடு எது?

**ஏ'கம்பர் நாடு (காஞ்சி)**

கல்வியில் பெரிய கம்பனுக்குக் கம்ப நாட்டாழ்வார் எனப் பெயருண்டு. (அவதாரம் தேரழுந்தூரில்) ஏகாம்பர நாதர் பெயரால், காஞ்சியை அடுத்த ஏகம்பநாடு என்பது கம்ப நாடு எனப்படும்.

கம்பர் ஏகம்பரின் பரம பக்தர். ஆதலின் நெடுநாள் காஞ்சி பக்கம் அம்பி என்ற கிராமத்தில் அப்புலவர் பெருமான் வாழ்ந்து வந்தார். அப்போது பற்பல இடங்களில் இருந்து புலவரும், பிரபுக்களும் கம்பரைக் கண்டு போக வந்தார்கள். அங்ஙனம் வந்தோர் அந்நாட்டைக் கம்ப நாடு என்றனர். புலவரையும் கம்பநாடன் என்றனர்.

காஞ்சியை விஜயகண்ட கோபாலன் (கி.பி. 1250-1280 பூவிருந்தவல்லி பெருந்தகை) தினம் 108 வேதியர்க்கு அன்னதானம் அளிக்க மேற்கண்ட அம்பியைக் காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சார்ய ஸ்வாமிக்குத் தானமளித்தான்.

இன்று 14 காணி மட்டுமே உள்ளது. மீதி, படையெடுப்பு மக்கள் மண்ணாசைக் காரணமாகப் பராதீனமாகி விட்டது என்று ஸ்ரீசங்கரமடத்துச் செய்தியில் தெரிகிறது.

கி.பி. 1250-இல் மேற்படி அம்பி என்ற அம்பிகாபுரத்துச் சம்பந்தம் உள்ளதால் அங்கு 9-ஆம் நூற்றாண்டில் வசித்து அவ்வூர் 'அம்பிகாபதி' திருவருளால் பிறந்த மகனுக்குக் கம்பர் 'அம்பிகாபதி' எனப் பெயரிட்டார் என்ற செய்தி இதில் இடம் பெற்றுள்ளது. — அமுதசுரபி 1987 தீபாவளி மலர்.

**கம்பநாடு :**

குலோத்துங்க சோழன் (1143-1171) இவன் காலத்தே காஞ்சி தலைநகராக்கப்பட்டது. குறும்பர்களுடைய குடியரசுக்கு உட்பட்டிருந்த நாடு, இவனது முறை கேட்டுப் புத்திரன் தொண்டைச் சக்கரவர்த்தியால்ஜெயிக்கப்பட்டுத் தொண்டை மண்டலமாயிற்று. அதில் கம்பநாடும் காணப் படுகிறது என்ற இந்திய புராதன ஆங்கில சஞ்சிகையின் கூற்று சரியல்ல. முற்கால மனுநீதி சோழனால் தொண்டை மண்டலமாயிற்று.[42] அதிலும் கம்பநாடு இல்லை.

**குமிண்டியும் பண்ணையும்கூட முளைக்கின்ற கொல்லைக்**
**கம்பை**
**நிமிண்டியும் ஊதியும் தின்ன வல்லோரிந்த நீணிலத்தில்**
**துமிண்டியங் காய் தன்னை மொட்டை அம்பால் எய்யும்**
**—சூரர் கண்டீர்**
**நமிண்டியில் பள்ளிகள் அத்தனை பேரும் நல்லவரே.**
**—கம்பர்**

கொல்லங்கம்பை, நிமிண்டியும், ஊதியும் தின்ன வல்லோர் நமிண்டியில் வன்னியர்கள் அத்தனைப் பேரும் நல்லவரே என்கிறார். இருந்து பழகிய கருத்தாகலாம். நமிண்டி என்ற கிராமம் காஞ்சியின் தென்மேற்கில் 6 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

நென்மேலி வாழ்தச்சன் என்பானைப் பாடியுள்ளார். அவ்வாறே கருமான், சலவை, சவரத் தொழிலாளிகளைப் பாடியுள்ளார்கள். அவ்வூர்களில் வாழ்ந்திருக்கலாம், இங்கெல்லாம் கம்பரது உவச்சர்கள் இருக்கிறார்கள். செங்கை மாவட்டத்தில் நென்மேலி என்ற கிராமம் இரண்டு உள்ளது. அரக்கோணம் தாலுக்காவில் ஒரு கிராமமும் உள்ளது. இங்கெல்லாம் இன்றும் உவச்சரினமக்கள் உள்ளனர். காஞ்சி அருகேயுள்ள பூதூரையும் கம்பர் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இன்னும், இங்கும், எங்கும் (கிராம தேவதை கோயில் அர்ச்சகராக உள்ளவர்கள் கம்பரின் உவச்சர் குலமே, ஊருக்கு ஒரு குடியாவது இருந்து வருகிறார்கள் என்று தெரிவித்துள்ளது தமிழ்நாடு உவச்சர் குல நலச் சங்கம்.

கம்பர் திருவொற்றியூரில் பெண்பார்த்து மயிலையில் மணம் முடித்து, வெண்ணெய் நல்லூர் சென்றதாக அறியப்படுகிறது.

திருவொற்றியூரில் கலாசாலையில் பயிலும் போது திருவொற்றியூரிலும் வாழ்ந்துள்ளார். சதுரானனப்பண்டிதர் மகள் நிகர்த்தவல்லியைக் கம்பர் மணம் முடித்துப் பின் இராமாயணம் பாடும்போது இங்குக் குடும்பத்தோடு தங்கி வாழ்ந்துள்ளார்.

தன் தாயோடு தொண்டை மண்டலம் வந்த கம்பர், காஞ்சி செங்கற்பட்டு இடைப்பட்ட பாலூரில் தாய்வழி உறவினர் வீட்டில் வசித்ததாகத் தெரிகிறது.

கம்பர் வாழ்ந்த பகுதிக்குக் கம்பநாடு எனப்பட்டது. எனவும், ஏரெழுபது அரங்கேற்றத்தின்போது அவர் வாழ்ந்த நாட்டைக் கம்ப நாடு எனப் பெயரிட்டதாகவும் கூறப்பட்டுள்ளது. நம்பக்கூடிய ஆதாரம் இல்லை.

கம்ப இராமாயணத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்றிய பிறகு கவிச்சக்கரவர்த்தி பட்டமும் அபிநவக் கவிநாதன், கம்பநாட்டாழ்வார் பட்டங்களும் வழங்கிய போது சேரன் மூவலூரைப் பரிசாகக் கொடுத்ததாகவும், அதுவே கம்பநாடு எனவும் ஆந்திரநாடு என்ற நூல் கூறுகிறது. சான்று ஏதுமில்லை.

திருமணத்திற்கு முன்பும், பின்பும் தொண்டை மண்டலத்திலும் சில பலகாலம் வாழ்ந்துள்ளார் என்பதற்குச் சான்று உள்ளது.

திருநறையூர்—குடந்தை, தஞ்சை, மதுரை, சேலம் (கொங்குநாடு)ஈரோடு. திருநெல்வேலி, இலங்கை, பாண்டிய சேரநாடு, இறுதியாக இராமநாதபுரம், நாட்டரசன் கோட்டை ஆகிய ஊர் பெயர்கள் கம்பர் வரலாற்றுக் குறிப்புகளிலும் தனிப்பாடல்களிலும் உள்ளன.

கம்பநாட்டாழ்வார் அருளிய ஆழ்வார் கலித்துறை அந்தாதி என வழங்கும் சடகோபரந்தாதியின் பழைய பிரதி ஒன்றில் பாயிர உறையில் ''கம்பர் வாழ்ந்து அவர் காவியத்தால் சிறப்புற்ற போது அவர்பெயரால் ''கம்பநாடு'' எனப்பெயரிட்டுச் சிறப்பித்ததாகக் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். [43]

கம்பநாடு என்பதுபற்றி, திட்டமாகச் சான்றுகள் கிடைக்கவில்லை. தொண்டை மண்டலத்தின் 24 கோட்டம் 79 நாடுகளிலும் ''கம்பநாடு'' கிடையாது.

கம்பநாடு என்பது தேரழுந்தூர் சூழ்ந்த ஒரு நாட்டின் பெயர்போலும் என்கிறார் இராகவையங்கார்,

சோழன் கம்பநாட்டைக் கம்பருக்குக் கொடுத்து ஆஸ்தான புலவராக்கினான். அதற்கு நன்றியாக, ''கம்பர்

மும்மணிக்கோவை'' பாடினார் என டாக்டர் மா. ராஜ மாணிக்கனார் தமிழமுதம் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

கம்பர் மனைவி பெயர் நிகர்த்தவல்லி என்று கம்பர் ஆய்வடங்கள் பக்கம் 52இல் குறிப்பு உள்ளது.

கம்பரின் தாயார் பெயர் திலகவதி என்று கம்பன் ஒரு திறனாய்வு என்ற நூலில் அதனாசிரியர் குறித்துள்ளார்.

கம்பரின் கல்வி, பெருமை, புலமை, ஆகியவற்றை நோக்க, கம்பரைப் பற்றிய கதைகளும், பாட்டுகளும் உண்மையென்று கொள்ளத் தகுதியுடையவை என்று எண்ணமுடியவில்லை. தூங்கியவன் தொடையில் கயிறு என்பது போலப் புலவர்கள் வரலாறு இல்லாதது கண்டு, இடைக்காலத்தார் திரித்தும், பொய்யே புனைந்த கதைகளும், பாட்டுக்களுமாம், இவையெனக் கொண்டொழிவது நலம் என்கிறார் 81-ஆம் பக்கம் தமிழ் நாவலர் சரிதையில். ஔவை துரைசாமிப் பிள்ளை.

## அடிக்குறிப்பு

1. No 29 of 1907.
2. சதாசிவ பண்டாரத்தார் பிற்கால சோழராட்சியும் இலக்கிய கல்வெட்டும்.
3. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 251.
4. ஊரும் பேரும் S. II. Vol III. No. 0 15, 16,17
5. வீரசோழியம் யாப். செய்யுள்-11

6. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்
7. உத்தம சோழன் செப்புப் பட்டயம் கி. பி. 984-85. S. I-I III. No. 128'
8. The Leyden grant.
9. செந்தமிழ் இதழ்-வால்யும் 7
10. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 277.
11. வீரசோழியம் செந்தமிழ் இதழ்.
12. புலவர் அகராதி.
13. ஊரும் பேரும். 104. 244. of 1910.
14. 1. செல்வ கேசவராயர், கம்பநாடர் 2, கம்பனும் சடையனும்.
15. 1. அபிதான சிந்தாமணி. பக். 289, 2. தமிழ் நாவலர் சரிதை பக். 106.
16. Ibid. P. 59. 336 ஊரும் பேரும்.
17. செந்தமிழ் இதழ். 1910.
18. E. P. IND. X. VII. 54 தமிழக வரலாறும் ம. ப.
19. தமிழக வரலாறு ம. ப.
20, சதாசிவ பண்டாரத்தார் பிற்கால சோழராட்சியும் இலக்கிய கல்வெட்டும்
21. அபிதான சிந்தாமணி பக். 486.
22. கவி மன்னர் மூவர், கம்பர் பகுதி.
23. செந்தமிழ்ச் சிலம்பு 22. பக். 188
24. ஊரும் பேரும் பக். 105
25. செந்தமிழ்ச் சிலம்பு 22. பக். 188.
26. ஜெயங்கொண்டார் கலிங்கத்துப்பரணி. 55.

27. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்
28. தமிழ் நாவலர் சரிதை.
29, செந்தமிழ் பக்கம் 140-274.
30. செந்தமிழ் இதழ் சிலம்பு 22.
31, ,, ,, ,,
32. லைப் ஆப் இராமாநுஜா. விப்கோ வெளியீடு.
33. பிற்கால சோழராட்சியும் இலக்கியக் கல்வெட்டும்.
34. குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்
35. ஸ்ரீரங்க மகாத்ம்யம்.
36. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்.
37. கவிமன்னர் மூவர்
38. பிற்கால சோழராட்சியும் இலக்கியக் கல்வெட்டும்
39. தமிழ்ப் புலவர் அகராதி.
40. மின்மினி பக். 12, 26-10-91.
41. சாசன தமிழ்க்கவி சரிதை.
42. வித். V. நரசிம்மன் பொற்காலத்தின் கதை பக். 41.
43. கலித்துறை அந்தாதி (சடகோபரந்தாதி முன்னுரை)

# 22. கவிச்சக்கரவர்த்தி கம்பர் உவச்சர் குலத்திலகம்

## தமிழ் அகராதிகளில் உவச்சர்

அர்ச்சகர் — ஒச்சன் கிராமதேவதை பூசகன். [1]

முதலியார் — உவச்சருக்கும் இப்பட்டம் உண்டு. [2]

பூசாரி — காளிகோயில் கிராமதேவதை பூஜை செய்யும் உவச்சர். [3]

நம்பிபட்டர் — விஷ்ணு ஆலய பூசகர்

குருக்கன்மார் — சிவாலய பூசகர்.

அர்ச்சகன் — ஒச்சன் [உவச்சர்] கிராம தேவதை பூசகன். [4]

ஒச்சர் [அ] உவச்சர். — இவர்கள் காளியம்மை மாரியம்மை பூசை செய்வார்கள். பெரும் பாலும் சைவர்கள், சிலர் வைணவர்கள். சிலர் பூனூல் தரிப்பவர்கள். இவர்கள் வடநாட்டில் 6. வகுப்பாக உள்ளனர். 1. அர்ச்சகர், 2. தேவர். 3. பாரிசைவர். 4. முதலியார். 5. பூசாரி. 6. புலவர். எனப்படுவார்கள். [5]

உவச்சர் — ஒச்சர் பூசாரி. [6]

பட்டர் — அர்ச்சகர். [7]

ஒச்சர் — பதினெண் குடிமக்களில் ஒருவர், கிராம தேவதை, பீடாரி கோயில் பூசாரி. [8]

தேவர் — இது தேவியைப் பூசிக்கும் ஒச்சருக்கும் பட்டம். [9]

1.895இல்—அபிதான சிந்தாமணி.

## அரசு பதிவேட்டில் உவச்சர்

உவச்சர் சாதியினரின் பரம்பரைத் தொழில் கோயில் பணியாகும். சமீபகாலமாக இச்சாதியினர் விவசாய கூலிகளாகவும் வேலைபார்க்கிறார்கள். உவச்சர்சாதி உண்மையில் பழமையானதொரு தமிழ் இனமாகும். இவர்கள் கன்னியாகுமரி மாவட்டத்தில் வாழும் கம்பர் இனத்தவரைப் போன்றவர்கள். இவர்கள் 4314 பேர் மட்டுமே உள்ளனர். மிகச்சிறுபான்மையானதொரு சாதி யாகும் இவர்கள் தமிழ்நாடு முழுவதும் சீராகப் பரவி யுள்ளனர். [10]

## பதினெண் குடிமக்களில் உவச்சர்

ஒச்சன் கோவில் குடியான் பூமாவைக்காரர் குயவன்
தச்சன் எண்ணெய் வாணியன் உப்புவாணியன்—
இலை வாணியன்
கல்தச்சன் பள்ளி பறையன் கன்னகன் வண்ணான்
தட்டான் பாணன் வலையன் நாவிதன் கொல்லன் [11]

## கல்வெட்டில் உவச்சர்

தொண்டை மண்டல வரிசை மூவாறு குடிமக்கள்
சுருதி நாள் முதலாகவே
துங்க மிகு நாவிதன் குயவன் வண்ணான்
ஓலைச் சொன்னபடி எழுதும் ''ஒச்சன்''

கண்டகம்மாளர் வகையவர் வாணிபர் மூவர்
கந்தமலர் மாலைக்காரர்
கலைமீது சரடோட்டுப் பாணன் தலைக்கடை
காவல் புரி பள்ளி வலையன்
விருதுபல கூறு வீரமுடையான்
பதினெண் குடிமக்கள் அனைவருங் காராளர்
பணி செய்து பல முறைமையும்
கொண்டு பரிவட்டமும் கட்டியே வருவரிக்
குவலய மதிக்கவேதான்.

**கூரறிய கச்சி வாழே கம்ப ராலயக்**
**குமுதத்திலிட்ட லிபியே [12]**

வடார்க்காடு மாவட்டம் செங்கம் இடபேசுவரர் கோயிலில் ஒரு கல்வெட்டு அமைக்கப்பட்டுள்ளது. பல குலத்தினர் ஒன்று கூடி அரசுரிமைப் போராட்டத்திலும் தலையிட்டுச் சோழராட்சியில் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதில் ''உவச்சர்'' குலத்தினரும் கையொப்பமிட்டுள்ளனர்.

கல்வெட்டுக்காலம் கி.பி. 1250.

ஆட்சிக் காலம் 1069—1070[13].

காஞ்சிபுரத்தில் இம்முறை வழங்கியதாகக் கூறப் பட்டுள்ளது. அதனை உறுதிப்படுத்துகிறது.[14]

உவச்சர் குலம் இன்று நேற்று தோன்றியதன்று. மனித குலம் தெய்வ நம்பிக்கை கொண்ட காலந்தொட்டு உவச்சர் குலம் விளங்கி வருகிறது. இடைக்காலச் சோழ ராட்சியில் வலங்கை, இடங்கை, மகேஸ்வரர்கள் எனத் தோற்றுவிக்கப்பட்டபோதும் பதினென் குடிமக்களை எக் காலத்தில் தொகுக்கப்பட்டனவோ அதற்கு முன்னிருந்தே உவச்சர் குலம் உள்ளது என்பது தெளிவு.

குறிப்பாகக் கிராமதேவதை. பிடாரி, காளி தெய்வங்கள் வழிபாட்டு தலங்களான காலந்தொட்டு மேற்படி கோயில் களில் உவச்சர்கள் மட்டுமே பூசகராக விளங்கி வருகிறார் கள். தற்காலமும் மேற்படி கோயில்கள் எங்கெங்குள்ள னவோ அங்கெல்லாம் உவச்சர் குலத்தினர் ஊருக்கு ஒரு குடியேனும் இன்றும் விளங்கி வருகிறார்கள். தவிர பிற மாநிலங்களிலும் பிற நாடுகளிலும் உவச்சர்கள் குலம்மாறி வேறு பெயர்களில் இருந்தாலும் குலத் தொழிலான கோயில் பூஜை பெரும்பாலும் இவர்களே செய்து வருகிறார்கள். ஒரு சிலர் உத்தியோகம் காரணமாகவும் வேறு காரணமாகவும் தொழில் மாறி இருந்தாலும் பெண் பிள்ளை, எடுக்க கொடுக்க உவச்சர் குலம்தேடித் திருமணம் செய்வது வழக் கத்தில் உள்ளது.

உவச்சர் குலம் பற்றி டாக்டர் இராசமாணிக்கனார்[15] அவர்கள் மட்டுமே ஓரளவு ஆராய்ந்து சற்றுக் கூடுதலான செய்திகளைக் கொடுத்துள்ளார்கள். அவற்றின் கருத்துக் களைப் பார்ப்போம்.

திருநெல்வேலி அரிகேசரி நல்லூரில் கம்பர் எனும் பட்டம் உடையவர் காளிகோயில் பூசாரிகளாவே இருந் தனர். விழாக்காலங்களில் கம்பரும் கோயில் அர்ச்சகரும் வடமொழியில் சமமாக மந்திரம் கூறுவார்கள். இவர்களைப் பாரிசைவர் என்றும் அழைப்பதுண்டு. கோயில் மாடவீதி களில் இவர்களுக்கு வீடு உண்டு. திருவாரூரிலும் அப்படியே. பெண்களுக்குத் தம்பிராட்டியெனப் பெயர் வழங்குவர். உவச்சர், உவச்சப்பிள்ளை எனவும் வழங்குவர். ஸ்ரீவைகுண்டத்தில் உவச்சர் தெரு உள்ளது. கன்னியாகுமரி யிலும் உவச்சர்கள் கம்பர், பட்டர் என்ற பெயரிலும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தமிழ் இலக்கண இலக்கியங்களில் புலமை பெற்றிருந்தவர்களாவர். கம்பர் என்பது காளிகோயில் பூசாரிகளைக் குறித்து வந்த பொதுப் பெயராகும்.[16]

—டாக்டர் இராசமாணிக்கனார், தமிழ் அமுதம் திருவெழுந்தூர் பிடாரிகோயில் பூசைசெய்யும் ஓச்சனுடைய பிள்ளை கம்பர் எனக் கூறுவார்கள்.[17]

மரையில் செல்லத்தம்மன் கோயிற் பூசகர் வழியின ராகும்.[18]

கைமணிச்சீரின்றிப் பிற சீரறியாக் கம்பர் என்னும் பாடல் கம்பர் உவச்சர் என்பதை ஊர்ஜிதம் செய்வதாகக் கூறலாம். மறுப்பதற்குப் பலமாக ஆதாரங்கள் கிடைக்கும் வரை கம்பர் உவச்சர் குலத்திலகமாக அவதரித்தார் என்றே கொள்ளலாம்.[19] கம்பர் கைமணியடித்துக் காளிக்குப் பூசை செய்யும் உவச்சர் குலத்தில் தோன்றியவர் என்பர். தென்றமிழ் நாட்டில் வாழும் உவச்சர் குலத்தார் இன்னும் கம்பர் என்பதைத்தம் பெயரோடு சேர்த்து வழங்கி வருவதாலும் கம்பர் உவச்சர் குலம் என அறுதியிட்டு உரைக்கலாம்[20]

இவர் தகப்பனார் ஆதித்தனார் என்பவர் உவச்சர் குலத்தார். காளி கோயில் பூசை செய்பவர்.[21] சைவ சமய பண்டிதராக விளங்கிய ஒருவர் கம்பர் காலத்தில் சைவ மடாதிபதியாகி இவர் கம்பருக்கு வடமொழி மற்றும் தமிழ் இலக்கண இலக்கிய ஆசானாக விளங்கிய உவச்சர் என்றும், கர்ண பரம்பரைச் செய்தி உவச்சர் குலமக்களிடையே வழங்கி வருவதாகும்.[22] இதற்கு ஆதாரமாகத் திருவொற்றியூர் ஆதிபுரீசுரர் ஆலய ஒழுகு கூறுவதாவது.

''இங்கிருந்த சதுரானனப் பண்டிதரிடம்[23] கம்பர் வான்மீகியைக் கற்றுத் தமிழில் இராமாயணமாக ஓதும் போது வட்டப்பாறையம்மன் தீப்பந்தம் ஏந்தி நின்றாள் என்று கூறுகிறது.''

படம் பக்கநாதர் (ஆதிபுரீசுரர்) கோயில் கர்பக்கிரக வடக்குப் பிரகாரத்தில் இருக்கும் துர்காதேவி வட்டப்பாறை

யம்மன் என்று வழங்கப் பெறுகிறார். இவ்வம்பாள் சந்நிதியில் மந்திர சக்கரத்தில் ஸ்தாபிதமாக ஒரு வட்டப்பாறை உள்ளது.[24]

இந்த மந்திர சக்கரத்தை ஸ்தாபித்தவர் ஸ்ரீ ஆதிசங்கரர் ஆவார். உக்கிர சக்தியோடு இருந்ததாக வரலாறு. உக்கிர சொரூபத்தை மாற்றி சாந்த சொரூபியாக சாந்தப்படுத்தினார், ஆதிசங்கரர்.[25]

இங்கு, கம்பர் வருகை தந்து தம் மாணாக்களுடன் இராமாயணம் எழுதியது (இரவிலும்) தீப்பந்தங்கள் பிந்தாடமல் ஒளி வழங்கிட தாம் பூஜித்தகாளியை வேண்டிக் கம்பர் பாடிய பாடல்.[26]

**சென்னி விளை கழனிச் செஞ்சிவாழ் சோழாண்டே**
**மன்னுபுக ழொற்றியூர் மட்பக்க நாச்சியார்**
**தம்மை வரவிட்ட புழலோ புழல்[27]**

புழல்—புழல் கோட்டத்தைச் சார்ந்தது ஒற்றியூராகும்.[28]

சென்னை ஆதிபுரிசுரத்தில் பல்லவ மன்னர்களான அபராஜிதன் நிருபதுங்கன், விஜய கம்பவர்மன், சோழ மன்னர்களான மதுரை கொண்ட கோபர கேசரிவர்மன், முதல் பராந்தகன், உத்தமசோழன் முதலான ஏனைய சோழர்கள் கல்வெட்டுகளும் உள்ளது[29] — திருவொற்றியூர் பதிகம்.

மடங்கள். சதுரானனப் பண்டிதர் திருமடம் [சமய குரவர்கள் தோற்றுவித்தனர் எனக் கருதலாம்]. இதற்குத் திருமயான மடம் எனவும் பெயர் பெற்றிருந்தது எனக் கல்வெட்டு உள்ளது. பிற சோழர்களும் சதுரானன மடத்தை ஆதரித்தும் தங்கள் பெயரால் பிறமடங்களைத் தோற்று

வித்தும் உள்ளார்கள்.[30] விஜய கம்பவர்மனின் 19ஆம் ஆண்டுக்கல்வெட்டு ஒற்றியூரில்நிரஞ்சனீஸ்வரத்து நிரஞ்சன குரவரால் கோயில் கட்டப்பட்ட செய்தியை உணர்த்துகிறது.[31]

மேற்படி சதுரானன மடத்திற்கும் கம்பருக்கும் மிக நெருங்கிய தொடர்பு உள்ளது. என்பது இம்மடம முதலாம் ஆதித்தன் காலத்திற்கு முன்பே இருந்ததாக அறிய முடிகிறது என்பதும் கவனத்தில் கொள்ள வேண்டும். கி. பி. 947 காஞ்சிக்கு அருகில் நடந்த தக்கோல போரில் முதலாம் பராந்தகன் மகன் ராஜாதித்தன் இறந்தபோது இவரது படைத்தளபதியான கேரள வெள்ளன் குமரன் என்பான் துறவறம் பூண்டு [மேற்படி மடத்து] சதுரானனப் பண்டித ராகத் தீட்சை பெற்றான்.[32]

சுமார் கி.பி. 850இல் இருந்த சதுரானனப் பண்டிதரிடமே கம்பர் தமிழ் இலக்கணம் இலக்கியம் மற்றும் வால்மீகியைக் கற்றார் என அறியப்படுகிறது.

தொண்டை நாட்டில் உள்ள காட்டுக் கோட்டத்தில் [ஊத்துக்காடு] பண்டைய நாளில் பாளையூர் என்ற பெயர் பெற்றிருந்த ஊர், இக்காலத்தில் செங்கற்பட்டு வட்டத்தில் பாலூராக விளங்குகிறது.[33]

மேற்படி பாலூரை அடுத்த ரெட்டிபாளையம் ஆத்தூரிலும் கம்பர் வழிவந்த உவச்சர் குல மக்கள் இன்றும் காளி கோயில் பூஜை செய்து வாழ்ந்து வருகிறார்கள். காஞ்சியிலும் அடுத்துள்ள பல கிராமங்களிலும் உவச்சர்கள் குலத் தொழில் செய்து இன்றும் வாழ்ந்து வருகிறார்கள்.

காஞ்சியை அடுத்த அம்பியில் கம்பர் வாழ்ந்தபோது தான் அம்பிகாபதி பிறந்தான்.[34]

காஞ்சிக்கு அருகே 4 மைல் தூரத்தில் உள்ள அம்பி என்ற ஊர் சரித்திரத்திலும் சாசனத்திலும் சிறப்பு வாய்ந்தது. புராணத்தில் பெருமை கொண்டது. கம்பர் மகன் அம்பிகாபதி பிறந்த இடமாகும். காஞ்சீபுரத்திலே அதற்கு அம்பிகாபுரம் என்றே பெயர். தமிழக சாசனத்தில் இதற்கு அம்பிகைபுரம் எனப் பெயர். தல புராணத்தின்படி காமாட்சியம்மை அங்கே 32 அறமும் வளர்த்தாள். கல்வியில் பெரிய கம்பருக்குக் கம்பநாடான், கம்பநாட்டாழ்வார், என்ற பெயர்களும் உண்டு. தஞ்சை தேரழுந்தூர் கம்பர் பிறந்த இடம் என்பர்.

காஞ்சி ஏகாம்பரநாதரின் பெயரால் காஞ்சியை அடுத்த ஏகம்பநாடு. கம்பநாடு எனப்படும். கவிச்சக்கரவர்த்தி கம்பன் ஏகம்பநாதரின் பரமபக்தர். அதனால் நெடுநாள் காஞ்சி பக்கம் அம்பி கிராமத்தில் அப்புலவர் பெருமான் வாழ்ந்து வந்தார். அப்போது பற்பல இடங்களில் இருந்து புலவரும் பிரபுக்களும் கம்பரைக் கண்டுபோக வந்தனர். அங்ஙனம் வந்தோர் அந்நாட்டைக் கம்பநாடு என்றனர்,

புலவரையும் கம்பநாடான் என்றனர். அம்பிகாபுரத்தில் கம்பர் வசித்து வந்த காலத்தை. அம்பியில் உள்ள அம்பிகாபதி எனும் மூர்த்தியின் அருளால் மைந்தன் ஒருவன் பிறந்தான். அவனுக்கு அம்மூர்த்தியின் திருப்பெயரையே அம்பிகாபதி என்று கம்பர் பெயரிட்டார்.

அரசிளங்குமரி அமராவதிக்கும், அம்பிகாபதிக்கும் காதல் மணம் நேர்ந்தது. அம்பியில்தான் என்று பெரியோர் பலபடப் பேசுவதுண்டு. அம்பிகாபுரம் நாளடைவில் அம்பி எனச் சுருங்கிவிட்டது. அந்நாளில் தென்னந்தக்க முதலியார் என்ற மகா தர்மவான் இருந்தார். அவர் அம்பியில் அறம் வளர்த்தார். முதலியார் எனும் பெயரே பிரபலமாயிற்று. அவர் காஞ்சியில் வாழ்ந்தமையால்

அவர் பெயரில் அறம்வளர்த்தீசுவரர் ஆலயமும் அறம் வளர்த்தீசுவரர் தெருவும் விளங்கி வருகிறது.

மேற்படி அம்பி என்ற கிராமத்தைக் காஞ்சியை கி. பி. 1250—1280 வரை ஆண்ட விஜயகண்டகோபாலச்சோழன்— காஞ்சி காமகோடி பீடாதிபதி சங்கராச்சார்ய ஸ்வாமி களுக்குச் சர்வமானியமாக அளித்தான். எத்தனையோ ஊர் களில் தர்மசொத்து பராதீனம் ஆகிவிட்டது. கா ணம் அந்நிய படையெடுப்பு, அரசாங்க புரட்சி, மக்களின் மண் ணாசை மானியக்காரர்களின் கவனக் குறைவு ஆகிய வற்றால் இன்று 14 காணி மட்டுமே உள்ளன. 21-4-1656 தினமணியிலும், அமுதசுரபியிலும் இவ்விசயம் சங்கரமடத் துத் தொடர்புடைய அன்பரால் கட்டுரையாக வெளியிடப் பட்டுள்ளது. [35]

மேற்படி தெலுங்கு மன்னன் விஜயகண்ட கோபாலனைச் சடையவர்ம சுந்தர பாண்டியன் போரில் கொன்று காஞ்சி யைக் கைக்கொண்டான். [36]

விஜயகண்ட கோபாலன் [கி.பி, 1150—1280] இம் மன்னனின் 25-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று [1273] செம்பாக்கம் பிள்ளை கோயில் என்ற பெருமாள் கோயிலில் உள்ளது. முதல் பராந்தகனின் கல்வெட்டு கி. பி 907 கி. பி. 954 அங்குள்ளது. [37]

ஆக, கம்பர் சுற்றுப் பயணம் செய்த ஊர்களாகக் காணப்படும் காஞ்சி அருகே புதூர், அம்பி அடுத்த தாமல், நிமண்டி, நென்மேலி மாமண்டூர், தஞ்சை, கொங்குநாடு (சேலம் பகுதி) போன்ற ஊர்களிலும் இன்றும் கம்பரின் உவச்சர்குல மக்கள் விரிவாகப் பூஜை செய்து வாழ்ந்து வரு கிறார்கள்.

அதேபோல் திருவொற்றியூரில் பல குடும்பங்கள் வாழ்ந்து வருகின்றன. குறிப்பாக, முன்கூறிய வட்டப்பாறை அம்மன் என்ற ஒற்றியூர் காளிகோயில் பூஜையை 15 ஆண்டுகளுக்கு முன் வரை செய்து வந்தவர்களுக்கு இன்னும் கோயில் பிரம் மோற்சவத்தின் போது படியும், சன்மானமும், மரியாதை யும் வழங்கப்பட்டு வருவதாக; ஆய்வுக்காக நாம் ஆதிபுரீ சுரர் ஆலயம் சென்றபோது [8-6-91] நம்மிடம் கோயில் குருக்கள் அவர்களும் குலமக்களும் தெரிவித்தார்கள்.

கம்பர் தந்தை ஆதித்தன் என்பவராவார். கம்பர் உவச்சர் குடியில் பிறந்தார் எனக் கூறுவார். சடையப்ப வள்ளல்தான் கம்பர் கல்வி கற்க ஏற்பாடுகள் செய்தார்[38] என்று தமிழக அரசின் பாடநூல் நிறுவனம் 1989ஆம் ஆண்டு 7ம் வகுப்புத் தமிழ் துணைப்பாடநூலில் வெளியிட் டுள்ளது.

மூவலூர் காளிங்கராயன் அக்கரகாரம். பாலசேத்திர புரம். தேரழுந்தூர், வயிரபுரம், வெண்ணெயூர், கதிர்வேய் மங்கலம் (கதிராமங்கலம்) கம்பருக்கு நெற்கதிரால் புதுக் குடில் அமைத்துப் பெருமைபடுத்தியது சடையப்பவள்ளல் ஆனதினால் அப்பெயர் பெற்றது.[39]

மேற்படி தேரழுந்தூரிலும் கம்பர் பூஜை செய்த ''கம்பருக்கு அருள் சொரிந்த காளியம்மன் கோயில்'' பூசகர், பூசாரி கருப்பையா என்ற பெரியவர் உவச்சர் குலமே. சேத்திரபாலபுரம்-கம்பர் பூஜை செய்த ''கம்பருக்கு வரமளித்த ஸ்ரீ செல்லியம்மன்,' ஆலய பூசகர் தங்கவேல் என்பவரும் உவச்சரே. இவர்களை 30-4-1991இல் நாம் நேரில் சந்தித்துப் பல தகவல்களை அறிந்தோம்,வெண்ணெ யூரில் கம்பர் வாழ்ந்தபோது ''வயிரபுர மாகாளியம்மன் பூஜையும் கம்பர் செய்ததாக அவ்வூர் மக்கள்

கூறினார்கள். மூன்று கோயில் நிலங்களையும். கம்பர் அனுபவித்து வந்தது, கம்பன் பட்டம் என்ற நிலம் சுட்டப்படுகிறது.

இக்காளிகோயிலைத்தான் ''தமிழ்தாத்தா கிழ்க்கண்ட வாறு அவரது கம்ப இராமாயண முன்னுரையில் கூறுகிறார். கம்பர் பாடி அருள் பெற்றதாகக் கூறப்பட்ட ஓர் காளிகோயில் அங்குள்ளதென்று கூறுகிறார்கள் என்பது முன்னுரை.[40]

தென்னாட்டு ஆலயங்கள் என்ற நூலில் கம்பரைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்லப்படுகிறது. அதில் தேரழுந் தூர் கம்பர் மேட்டுக்கு அருல் உள்ள காளிகோயி லையும், பக்கத்திலுள்ள விநாயகர் கோயிலையும் கம்பர் பூஜித்ததாகக் கூறுகிறது.[41]

இனி, கம்பர் உவச்சர் குலத்தினர்தான் என்பதற்கு அத்தாட்சியாகக் கம்பர் குலத்தொழிலாக, காளிகோயில் பூஜையும் செய்துள்ளார், என்பதைத் கவனத்தில் கொள் வோம்.

கம்பர் உவச்சர்குடியில் பிறந்தவரென்றும், உவச்சர் கோயில்களில் மணியடித்தல் முதலிய பணிசெய்தவரென்றும் கூறப்படும் வரலாற்றுக் குறிப்பிற்கேற்ப இப்பாட்டு ''கை மணிச்சீர்'' என்கிறது.[42]

கம்பர் தேரழுந்தூர் உவுச்சர்குலத்தைச் சேர்ந்த ஆதித்தன் மகன்.[43] — வித்வான். ஆர். சீனிவாசன்

''ஈடார் தருஞ்சோதி நாடதனில் உருந்திருவழுந்தூரினில்
பீடாரும் ஓச்சகுலத்தொருவன் அவ்வூர்
பெருங்கோயில்வாய்''

—சோழ மண்டல சதகம்

**நாராயணன் விளையாட்டெல்லாம் நாரத முனிவன் கூற**
**ஆரணக் கவிதை செய்தான் அறிந்த வான்மீகியென்பான்**
**சீரணி சோழநாட்டுத் திருவழுந்தூர் உவச்சன்**
**காரணிக் கொடையான் கம்பன் தமிழினால் கவிசெய்தானே**

கம்பராமாயண பாயிரத்தில் உவச்சர் எனக் கம்பரைக் குறிப்பிட்டுள்ளது.

—மேலும் உவச்சர் குறித்துச் சில பாடல்கள் உள்ளன.

உவச்சர்குலத்தில் கம்பநாட்டாழ்வார் தோன்றினார்.[45] என்பதை வித்வான் சீனிவாசன் குறிப்பிட்டுள்ளார். ''உவச்சர் குலம் பார சைவர் சர்தியினர், உவச்சர் என்பர் பாரசைவ வகுப்பினர்'' என்பதைக் கண்ணுடைய பள்ளு என்ற நூலில் அறியலாம். கோயில் பூசாரி களாகவும் நாடக ஆசிரியர்களாகவும் அரசவையில் பெரிதும் மதிக்கப் பெற்றார்கள்.[46]

—என்று தெய்வ புலவர் கம்பர் என்ற நூல் கூறுகிறது.

**வடமொழி தென்மொழி வல்லவராக பாரதக்கலை அலங்கார நூல்களிலும் மிகுதியாகத் தேர்ச்சி பெற்று சோழர் அவையில் சிறப்பித்த பாரசவருக்கு நிருத்தமராயர் நிருத்தமராய பேரரையர் பட்டங்கள் வழங்கியுள்ளனர்.[47]**

—தெய்வப்புலவர் கம்பர்.

உவச்சர் குலத்தில் உதித்த கம்பருக்கு வட தென்மொழி மற்ற கலைகளிலும், தக்க பயிற்சி சிறு பிராயமுதல் குல வொழுக்கமாகவே அமையலாயிற்றுஎன்றுகருதலாம், வெறும் தமிழ்ப் புலவராய் மட்டுமன்றி எல்லாத் துறைகளிலும்

வல்ல, கலா நிபுணர் என்று யாவரும் சொல்லும்படி விளங்கினார் என்பது காப்பிய வாயிலாக அறியக்கிடப்பன[48]

—பேராசிரியர் இராகவையங்கார்.

கம்பரின் தகப்பனார் ஆதித்தர், உவச்சர் குலத்தைச் சேர்ந்தவர். இக்காலத்தே பூசாரி என்று அழைக்கப்படுகிறார்கள். ஆதித்தன் திருவழுந்தூர் பிடாரி கோயில் பூசாரித்தொழில் புரிந்து வந்தவர். சீரணி, என்ற பாடலாலும், கைமணி என்ற பாடலாலும் பிறந்த குலம் உவச்சர் குலமாகும்.[49]

அம்பிகாபதியாரும் அவர் மகன் தண்டியாசிரியரும் இப்பாரசைவர் குலத்தவரென்று தோன்றுகிறார்கள். ''ஆடக மன்றது, தண்டி என்ற அவர் பாடிய பாயிரத்தால் அறிக.[50] சோழநாட்டுத் திருவழுந்தூர் உவச்சர்'' என மேற்கோல் காட்டி ஆமருவியப்பன் ஆலய வரலாறு கூறுகிறது.[51]

கம்பர் சோழ குலத்தவராகவும் அரச பரம்பரையில் வந்தவராகவும் சிலரால் குறிப்பாக வின்ஸ்லோ பாதிரியால் எழுதப்பட்டதைக் குறிப்பிடுகிறார்கள். இதுபற்றி நாம் ஆராய்ந்தபோது ''சில கதைகள் கிடைத்தன. அவற்றின் சுருக்கம் காண்போம்.

1. சாளுக்கிய விஜயாதித்தன் தென்னாட்டில் வந்து யுத்தம் செய்து உயிரிழந்தான். உடன் அவரின் மனைவி கர்பவதியாய் இருந்தாள். அவள் ஒரு பிராமணர் வீட்டில் அடைக்கலம் புகுந்து விஷ்ணு வர்த்தனனைப் பெற்றாள். விஷ்ணு வர்த்தனன் காஞ்சியை ஆண்டு வந்த பல்லவர்களின் நட்புக் கொண்டு அவர்களின் பெண்ணை மணந்து கொண்டு

விஜயாதித்தன், இரணராகவன் இருமக்களைப் பெற்று ஆட்சியும் செய்தான்.[52]

நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்தியவரலாறு.

2. ஒரு சோழன் உறையூரை ஆண்டான். அவனுக்கு இருமனைவிகள். நாட்டுக்குப் பேராபத்துவந்தது. (உயிரிகள் அழிந்த வரலாறு) அப்போது ஒருத்தி கர்ப்பவதி. இரு மனைவியையும் அழைத்துக் கொண்டு உயிர் பிழைக்க ஓடினான். நாட்டில் கல்மழை பெய்து நகரமே பூமிக்குள் புதையுண்டது. ஆற்றைக் கடக்க இயலவில்லை. கர்ப்பவதி யைக் கைவிட்டு ஒரு மனைவியுடன் ஆற்றில் கரை ஏறியவர் கள் கல்மழையால் மண் மூடிமாண்டார்கள். கர்ப்பவதி உயிருடன் கரை ஒதுங்க, ஒரு பிராமணன் காப்பாற்றி அடைக்கலம் தந்தான்.

பின்னர் அவளுக்கு ஆண்பிள்ளை பிறந்தது. நாடு குளிர்ந்தது. மக்கள் குழுமினார்கள். நாட்டுக்கு அரசன் தேவையெனப் பட்டத்து யானையிடம் மாலை கொடுத் தனுப்ப, அது இந்தக் குழந்தைக்கு மாலையிட்டது. அக் குழந்தையை வைத்து ஆட்சி தொடங்கியது. இக்கதையைக் காஞ்சி காமகோடி மடாதிபதி ஸ்ரீபரமாச்சாரியார் ஸ்வாமி கள் திருவாய் மலர வெளியிட்டுள்ளார்கள்.[53]

—அமுதசுரபி தீபாவளி மலர். 1987

சமீபத்தில் 2-6-1991 இல் வங்க தேசத்தில் சுவர்ணதீப் தீவு, 10 அடி உயரத்திற்கு எழுந்த அலையால் கடல் நீரால் மூழ்கியது (தினமலர் 2-5-1991) — ஒரு லட்சம் பேர் பலி— உறையூர் அழிந்த வரலாற்றுக்கு இது ஒரு சரியான உதாரண மாகும்.

3. புராண சோழர்களில் உறையூரை ஆண்ட இளஞ் சேட்சென்னி என்பான், அழுந்தூர் வேண்மாளை மணந் தான். அவள் கர்ப்பமானாள். கணவன் இறந்தான். ஊரார் இவளின் கர்ப்பத்திற்குக் களங்கம் கற்பித்தனர். ஊரை விட்டுச் சென்றாள். ஓரிடத்தில் அடைக்கலம் பெற்று, முதலாம் கரிகாலனைப் பெற்றாள். உறையூரில் கலகம் தீர்ந்து அரசன் தேவையென யானையிடம் மாலை கொடுத்தனுப்ப, இந்தக் கரிகாலனுக்கு மாலை அணிவிக்க, அவன் ஆட்சியில் அமர்ந்து சிறப்புற்றான்.[34]

மேற்கண்ட கர்ப்பவதியான சோழன் மனைவி ஒருத்தி மூவலூரில் இருந்த பிராமணர் வீட்டில் தங்க நேர்ந்தமை யால் அவள் கர்ப்பத்தைக் களங்கம் கூறி ஊரார் ஏச அவள் பிராமணன் வீட்டை விட்டு வெளியேறினாள். கால்நடை யாகச் சேத்திரபாலபுரம் (சமீபம்தான்) அருகே வந்த போது வழியில் பிரசவ வேதனையுற்றாள். அங்கு வயலில் பணி செய்து கொண்டிருந்த சில பெண்கள் உதவி செய்யப் பிள்ளை பெற்றாள். அவ்விடத்திற்கு 'மாணங்காத்தான்'' எனப் பெயருண்டு. அப்பிள்ளை பின்னால் அரசனானான் என்பதறிந்தோம்,[35]

இந்நிகழ்ச்சியைக் கம்பராகக் கருதித் தவறான ஒரு கதை மூவலூரில் கூறப்பட்டு வருகிறது. இதனை முழுமை யாக ஆராயாது. வின்ஸ்லோ பாதிரியாரவர்கள் கம்பரைச் சோழ குலத்தவராக எழுதி உள்ளார். அதனையே சில ஆசிரியர்களும் குறிப்பிட்டுள்ளார்கள். இது உண்மைக்குப் புறம்பானது என மேற்கண்ட வரலாற்றுக் கதை தெளி வாக்குகிறது.

''கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே'' எனும் இந்த ஆராய்ச்சி நூல் ஆயிரத்திற்கும் மேலான கம்பர்

பற்றிய குறிப்புகள் கொண்ட நூல்களைப் பெருவாரியாகப் பார்வையிட்டுள்ளதால் "ஒன்பதாம் நூற்றாண்டை" "மறுதலிக்கத்தக்க ஆதாரம் விடுபட்டிருக்க முடியாது" எனத் திடமாக நம்புகிறோம்.

ஆயினும் மறுத்தல், திருத்தல், புகுத்தல் இருப்பின் இருகையால் பணிந்து ஏற்போம் என்றும் தெரிவித்து அறியாத குற்றங்குறைகள் பிழைகள் இருப்பின் எடுத்துக் கூறி உதவ வேணுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

"கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே"

"எண்" தமிழுங் கற்றுச் செந்தமிழ்க் காப்போம்!

வணக்கம்

## அடிக்குறிப்பு

1. அபிதான சிந்தாமணி பக். 1.
2. ,, ,, பக். 1327,
3. ,, ,, பக். 1590.
4. ,, ,, பக். 91.
5. ,, ,, பக். 300.
6. கழக தமிழ் அகராதி பக். 176.
7. ,, ,, ,, பக். 635.
8. தமிழ் கை யகராதி பக். 96
9. அபிதான சிந்தாமணி பக். 865.

10. இது தமிழக அரசு பிற்பட்டோர் பட்டியலில் எண் 92 கம்பர். எண் 1933 உவச்சர். எண் 245 தேவர். 1985.

11. அபிதான சிந்தாமணி பக். 1609.

12. உவச்சர் ஜாதி உள்ள கல்வெட்டு. காஞ்சி, ஏகம்பர் ஆலய ஆயிரங்கால் மண்டபம்.

13. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும், பக். 320. S. I.I. 7. No. 118.

14. ,, ,, ,, பக். 315

15. டாக்டர் ராஜமாணிக்கனார் "தமிழமுதம்"

16. ,, ,, ,,

17. செல்வ கேசவராயர் "கம்பநாடன். பக். 10.

18. ,, ,' ,, பக். 100.

19. கு. அழகிரிசாமி சக்தி ராமாயண முன்னுரை,

20. கவிமன்னர் மூவர் பக். 92.

21. சு. ஆ. ராமசாமிப் புலவர் "கம்பனும் சடையனும்".

22. உவச்சர் குலமக்களிடையே கர்ண பரம்பரைச் செய்தி.

23. திருவொற்றியூர் கோயிலொழுகு பக். 2. எண் 34,

24. திருவொற்றியூர் பதிகம் பக். 10.

25. "காஞ்சியில் காலடி" பக். 110.

26. ஒற்றியூர்காக்க என்ற பாடல்

27. தமிழ் நாவலர் சரிதை கம்பர் தனிப் பாடல்
28. A. R. No. 3670—1911.
29. திருவொற்றியூர் பதிகம்.
30. ,, ,,
31. ,, ,,
32. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் EP. IND. XXVII. P. 47.
33. ஊரும் பேரும் பக்கம். 37. S. III. M.S.R. 1934.
34. 24-4-1946 தினமணி.
35. அமுதசுரபி தீபாவளி மலர். 1987.
36. தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும் பக். 374.
37. பூவிருந்தவல்லியார் பக். 12.
38. புரவலரும் புலவரும் அரசு தமிழ் துணைப்பாட நூல் 7-ம் வகுப்பு 1986.
39. இந்நூலில் உள்ள 'புதுமாதர் புகழ் பெறவே'' என்ற கம்பர் பாடல்.
40. உ.வே.சா. இராமாயண முன்னுரை.
41. தென்னாட்டுக் கோயில்கள் பக்கம் 22.
42. தமிழ் நாவலர் சரிதை பக்கம் 70,
43. வித்வான் ஆர். சீனிவாசன், கம்பர்.
44. கம்பராமாயண பாயிரப் பாடல்
45. கம்பராமாயண வசனம் வித். சீனிவாசன்.
46. தெய்வப்புலவர் கம்பர்

47. ,, ,,

48. பேராசிரியர் இராகவையங்கார்

49. புலவர் மாரிமுத்து 'கம்பர்' பக்கம் 17.

50. தண்டி அலங்காரம்.

51. ஆமருவியப்பன் ஆலய வரலாறு பக்கம் 21.

52. நீலகண்ட சாஸ்திரி தென்னிந்திய வரலாறு

53. அமுதசுரபி தீபாவளி மலர் 1987.

54. அபிதான சிந்தாமணி இ. வரிசை.

55. கவிச்சக்கரவர்த்தி கம்பர் த. ச. மூர்த்தி.

# கம்பர் வாழ்க்கைக் குறிப்பு

தந்தை — ஆதித்த அர்ச்சகர்

தாயார் — திலகவதியார்

பிறந்தது — தேரழுந்தூர்

பிறந்த காலம் — கி.பி. 9ஆம் நூற்றாண்டு முற்பகுதி

ஆரம்பக் கல்வி — தேரழுந்தூர்

பாண்டித்யம் பெற்றது —சதுரானனப் பண்டிதர் மடம் திருவொற்றியூர்

புரவலர் — சடையப்ப வள்ளல்

துணைவியார் — நிகர்த்தவல்லி

திருமணம் — மயிலையில்

முன்னிலை — திருவாலி அமுதனார்

அம்பிகாபதி பிறந்தது — காஞ்சி அம்பியில்

பிறந்த மக்கள் — அம்பிகாபதி, காவேரி

கம்பர் மாளிகை — தேரழுந்தூரிலும், அம்பியிலும்

முதல் அரங்கேற்றம் — ஏரெழுபது, திருக்கை வழக்கம்

முன்னிலை — முதலாம் ஆதித்தசோழன், சடையப்பர்

இடம் — காஞ்சியில்

இராமாயணம் எழுதத் தொடங்கியது — வெண்ணெய் நல்லூர்

இறுதியாக எழுதியது — திருவொற்றியூர் காளி சன்னதியில்

இராமாயண அரங்கேற்றம் — திருவரங்கத்தில்

முன்னிலை — ஸ்ரீமந்நாதமுனிகள்

கம்பருக்கு அருள் சுரந்த காளிகோயில்—தேரழுந்தூர்

கம்பருக்கு கவிஅருளிய கம்பர் செல்வி — பாலசேத்திரபுரம்

கம்பர் இறுதியாகவாழ்ந்தது — சேரமன்னன் தாணுரவி கோட்டையில், பத்மநாபபுரம்

கம்பர் கையோடு வைத்துப்பூசித்த ஐம்பொன்னாலான, சரஸ்வதி சிலைக்குத தாணுரவி கோட்டையில் சரஸ்வதி ஆலயம் கட்டி இன்றளவும் பிரசித்தியாக உள்ளது.

கம்பர் சமாதி — நாட்டரசன் கோட்டையில்

கம்பர் கோட்டம் — தேரழுந்தூரில்

கம்பர் மணிமகுடம் — காரைக்குடியில்

கம்பருக்கு வழங்கிய விருது — கம்பநாட்டாழ்வார், கவிச்சக்கரவர்த்தி, அபிநவகவிநாதன், கவிஜயன், கவிராஜன்

கம்பர் அஞ்சல்தலை — 5-4-1966-இல் வெளியிடப் பட்டுள்ளது

கம்பர் குலம் — உவச்சர் குலம்

கம்பர் பேரன் — தண்டி(அம்பிகாபதி, குலப்பெண்ணை மணந்து பிறந்தவன். பின்புதான் அமராவதி காதல்)

கம்பர் இயற்றிய நூல் — 17

# கம்பர் சகாப்தம்

| மகான்களின் சகாப்த | ஆண்டு | பிறப்பு | நடப்பு 1991இல் |
|---|---|---|---|
| கலியுகம் | கி.மு. ஆண்டு | 3101 | 5092 |
| ஆதிசங்கரர் | கி.மு. | 509 | 2500 |
| ஹர்ஷர் | கி.மு. | 457 | 2448 |
| விக்கிரமன் | கி.மு. | 57 | 2048 |
| திருவள்ளுவர் | கி.மு. | 31 | 2022 |
| | கி.பி. ஆண்டு | 1 | 1991 |
| சாலிவாகன | கி.பி. | 78 | 1913 |
| ஹஜரி | கி.பி. | 580 | 1411 |
| முகமத் | கி.பி. | 631 | 1360 |
| நாதமுனிகள் | கி.பி. | 823 | 1168 |
| கொல்லம் | கி.பி. | 825 | 1166 |
| கம்பர் | கி.பி. | 840 | 1151 |
| அல்பூரணி | கி.பி. | 973 | 1018 |
| கம்ப இராமாயண அரங்கேற்றம் | கி.பி. | 885 | 1106 |
| இராமானுஜர் | கி.பி. | 1017 | 974 |
| சேக்கிழார் | கி.பி. | 1138 | 853 |
| மகாத்மாகாந்தி | கி.பி. | 1869 | 122 |
| பாரத விடுதலை | கி.பி. | 1947 | 44 |
| பிரபவ | கி.பி. | 1986 | 5 |

## கல்வெட்டு சொற்களின் பொருள் :

| | |
|---|---|
| புகழ்மாது | புகழ் பெறுதலை குறிக்கும் |
| ஜெய மாது | வெற்றி பெறுவதைக் குறிக்கும் |
| நிலமகள் | பூமி, ஆட்சி விரிய |
| மலர்மகள் | இலட்சுமி, செல்வம் கொழிக்க |
| இருமடி | இருமுறை வென்றவன் |
| மும்மடி | மும்முறை வென்றவன் |
| கோவி ராஜகேசரி | அரசர்களுக்குச் சிங்கம் போன்றவன் |
| பரகேசரி | பகை அரசர்களுக்குச் சிங்கம் போன்றவன் |
| மீனவன். | மீன்கொடி |
| இருதால் | தோற்றோடுதல் |
| சுழிதர | வெட்கமடைய |
| சக்கர (நடாத்தி) | ஆணை செலுத்தி |
| உயங | தமிழ் எண் |
| சள | கலம் 12 மரக்கால் (சுமார் 38 கி.கி.) |
| வத | இருதூளி தமிழ் இலக்க நிறுத்தல் அலவை |

### கணித வகை

கின்னம் 10 கொண்டது நுண்மை முத்திரை. நுண்மை முத்திரை 3 கொண்ட து இம்மி முந்திரை. இம்மி முத்திரை பத்தரை (யத) கொண்டது கீழ்முந்திரை. கீழ் முந்திரை 320 கொண்டது மேல் முந்திரை, மேல் முந்திரை 320 கொண்டது. ஒன்று.

தமிழ் எண்கள் க, உ, ங, ச, ரு, சா, எ, அ, கூ, ய. எண் தமிழ் கற்றால் செந்தமிழ்ச் சிறக்கும்.

இந்தோ அராபி எண் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10.

## ஆசிரியர் குறிப்பு



ஆசிரியர் டாக்டர் மா. வரதராஜன் அவர்களின் சிறுகதை 1956-ல் நாரதர் என்ற இதழில் வெளிவந்துள்ளது. தொடர்ந்து கவிதைகள், கட்டுரைகள், மருத்துவம் போன்ற நூல்கள் பல வெளிவந்துள்ளன. 1982-இல் உலக இந்து மாநாடு இலங்கையில் நடந்தபோது, பேராளராக கலந்து கொண்டு, "2000 இந்து சமயப் பயன்பாடு" என்ற சிறு நூலை அங்கு வெளியிட்டு இலவசமாக வழங்கி உள்ளார். கம்பர் வரலாற்று சுருக்கம், கவிச்சக்கரவர்த்தி உவச்சர் குலத் திலகம் என்று சிறு நூல்களும், மாணவர்களுக்கு மருத்துவம், மூலிகை மருத்துவம் என்ற நூல்களை வெளியிட்டு மாணவர்களுக்கு விடுமுறை கால வகுப்புகள் நடத்தி எளிய மருத்துவம், தமிழ் எண்கள், பொது அறிவு நன்னெறிகளை போதித்து வருகிறார். மூலிகைகளை ஆராய்ச்சி செய்து நூற்றுக்கணக்கானவர்களிடம் குணங்கண்டு "நோய் தீர்க்கும் மூலிகைகள்" என்ற நூல் எங்கள் பதிப்பகத்தின் மூலம் வெளிவந்துள்ளது. உணவு முறையால் தீரும் நோய்கள் என்ற நூலும் வெளிவர உள்ளது. நூற்றாண்டு கண்டு முக்தி பெற்ற ஸ்ரீ காஞ்சி முனிவரது அருளாசிக்கு 1957 முதல் பாத்திரமானவர். அடுத்து "கவிச்சக்கரவர்த்தி கம்பர் வாழ்க்கை வரலாறு" சரித்திர சம்பவங்களை அடிப்படையாகக் கொண்ட நவீனம் இவரது லட்சியமாகும்.

**என். பாலகிருஷ்ணன்**

ராஜேஸ்வரி புத்தக நிலையம்